KALKI 9.11.2003 ரூ.6.00

# கல்கி



"தென் மாவட்டங்களில் தி.மு.க.வுக்குத் தொய்வுதான்!"

-பி.டி.ஆர்.



## மதுரைச் சிறப்பிதழ்



## உசிலம்பட்டி பெண்குட்டிகள்!

# உள்ளே...







மதுரை ஸ்பெஷல்
கட்டுரை, படங்கள்:
குன்றக்குடி சிங்கார வடிவேல்
ஆர்.சி.ஜெயந்தன்







மூன்றாவது அட்டையில் மதுரை பொற்றாமரைக் குளம்

வண்ணப்படம் :
தேவமணி ரஃபேல்



# காங்கிரஸ் ஊதிய பலூன்... கலைஞர் குத்திய குண்டூசி!

ஒரு டஜன் பேச்சாளர்கள், மூன்று மணி நேரம், "நல்ல முடிவு எடுங்கள்' 'நாடு உங்களைத்தான் நம்பியிருக்கிறது" என்று திரும்பத் திரும்பச் சொன்னால் எப்பேற்பட்ட தலைவரும், தன் மனக் கோட்டையின் ஓரிரு வாசல்களைத் திறந்து காட்டுவார்கள். ஆனால் கலைஞரிடம் அது நடக்குமா?

"தமிழ்நாடு தலைநிமிர ஒவ்வொருவரும் உறுதியெடுத்துக் கொள்ள வேண்டிய நாள் இந்த நாள்" என்று சொல்லிவிட்டு, "அது எப்போது, எப்படி என்றெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம்" என்று சொன்னவுடன், கூட்டம் காற்று இறங்கிய பலூனாகிப் போனது.

கோபண்ணாவின் 'காமராஜ் ஒரு சகாப்தம்; பீட்டர் அல்போன்ஸ் எழுதிய 'நெஞ்சில் விளைந்த நெல்மணிகள்' ஆகிய இரு புத்தகங்களின் வெளியீட்டு விழாவில்தான் இத்தனை பேச்சு. சென்னை காமராஜர் அரங்கம் நிரம்பி வழிந்தது. காங்கிரஸ்காரர்கள் கலைஞரின் வாயிலிருந்து வார்த்தைகளையும், வாக்குறுதிகளையும் பிடுங்க, வலை விரித்தனர்.

நிகழ்ச்சித் தொகுப்பாளர் ஜே.சி.டி. பிரபாகரன், "தமிழகம் இந்த மேடையிலிருந்து நல்ல செய்தியை எதிர்பார்க்கிறது" என்று துவங்கி வைத்தார். அதன் பின் நல்லகண்ணு, வரதராஜன், அப்துல்ரகுமான், ஈ.வி.கே.எஸ். இளங்கோவன், கே.எஸ். அழகிரி இவர்கள் மட்டுமல்ல; நூற்களை அறிமுகம் செய்த ஜோலூர் ராஜேந்திரன், தாம்பரம் நாராயணன், திறனாய்வு செய்த குமரி அனந்தன், தா. பாண்டியன், ஏற்புரை வழங்கிய பீட்டர் அல்போன்ஸ், கோபண்ணா என்று அனைவரும் கலைஞருக்கு வேப்பிலை அடிக்கத் துவங்கினர்.




• வாழப்பாடியார் நினைவு விழாவில்




• நூல் வெளியிடுகிறார் கலைஞர்

ஆனால், கலைஞர் மிக நிதானமாக, பீட்டர் அல்போன்ஸ் அவரது கட்டுரை ஒன்றில், ஊழல் சம்பந்தப்பட்ட விவகாரத்தில் தனக்கு ஆதரவான வாதத்தை எடுத்து வைக்காமல் நழுவியிருக்கிறார் என்பதை பட்டவர்த்தனமாக எடுத்துக் காட்டினார். அல்போன்ஸ் நெளிய வேண்டிய நிலை. அவரைச் சங்கடப்படுத்திய கலைஞர், இளங்கோவனை உருக வைத்து விட்டார்.

"ஈ.வி.கே. சம்பத் போன்றே இளங்

கோவனது பேச்சும் ஆணித்தரமாக இருப்பதாகவும், சம்பத்தை இளங்கோவன் உருவத்தில் பார்ப்பதாகவும் கலைஞர் சொன்னபோது, இளங்கோவன் கைகூப்பி நெகிழ்ந்து போனார்.

அன்று நின்று நிதானமாகப் பேசியவர் ப. சிதம்பரம். ஏதோ திராவிடக் கட்சிகள்தாம் தமிழ்மொழிப் பதாகையை உயர்த்திப் பிடித்தது போன்ற பேச்சு பொதுவாக இருக்கையில், காமராஜ் ஆட்சியின்போது தமிழ் மொழிக்குச் செய்யப்பட்ட சிறப்புகளைப் பட்டியலிட்டு, கழக உடன்பிறப்புகளை ஆச்சர்யப்பட வைத்தார் அவர். "தேசிய கட்சியிலும் திராவிடக் கட்சியிலும் பிளவுகள் உண்டானதால்தான், இங்கு பிரச்னைகளே எழுந்தன. தமிழ்நாட்டில் காங்கிரஸ், திமுக என்ற 'இரண்டு பெரிய கட்சிகள் இருந்தால் போதும்.' அப்படியானால் கம்யூனிஸ்டுகளுக்கு எந்த இடம்' என்றால், அவர்கள் 'மனசாட்சியாக, இருந்து செயல்பட வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

கலைஞர் பேசத் துவங்குகையில் மார்க்ஸிஸ்ட் வரதராஜன் கிளம்பினார். ''மனசாட்சி கிளம்புதே!'' என்று கிண்டலடித்தார் ஒரு பத்திரிகையாளர்.



"இன்று இப்படியெல்லாம் புலம்பும் நீங்கள், 2001 சட்டமன்றத் தேர்தலில் எதிர்ப் பக்கம் இருந்ததால் தான் இன்று இந்த நிலை" என்று காங்கிரஸ், கம்யூனிஸ்ட் பிரமுகர்களைச் சிதம்பரம் இடித்ததை, கூட்டம் ரசித்தது.

வாழப்பாடி ராமமூர்த்தியின் முதலாம் ஆண்டு நினைவு நாள் கூட்டத்தில் வேறு மாதிரியான குரல். வாழப்பாடியில் நடந்த அந்தக் கூட்டத்தில் பேசிய தங்கபாலு, 'இளைஞர் ஒருவர் தலைமைப் பதவியில் அமர வேண்டும்' என்றார். 'வாசனிடம் ஒரு கவர்ச்சி இருக்கிறது. அவர்தான் சரியான தலைவர்'' என்று சொன்னார் பாராளுமன்ற உறுப்பினர் சுதர்சன நாச்சியப்பன்.

வழிகாட்டி இல்லாமல் இருந்த வாழப்பாடியார் ஆதரவாளர்கள், வாசனை தலைவராக ஏற்றுக் கொண்டது ஒரு திருப்பம்தான். இந்தக் கூட்டத்தில் இளங்கோவனும் கலந்து கொள்வார் என்று அழைப்பிதழில் போடப்பட்டிருந்தது. பேசுபவர்கள் தம்மைத் தாளித்து எடுப்பார்கள் என்பதால், இளங்கோவன் ஜூட் விட்டு விட்டாராம்!

- கௌசி

படங்கள் : ராஜன்


**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# ஓடி வந்த சங்கீதம்!



அக்டோபர் 26ம் தேதி. கடந்த சில நாட்களாகவே உடல் நலிவுற்று வாய் திறந்து பேசாதிருந்த செம்மங்குடி ஸ்ரீநிவாஸ அய்யரைப் பார்த்து ஆசி பெற வந்தார் டி.வி. சங்கரநாராயணன்.

"அப்பா, யார் வந்திருக்கிறார்கள் பாருங்கள்..." என்று கண் மூடிப் படுத்திருந்தவரை மெள்ள எழுப்பி, நினைவுகளைத் தூண்டினார் மகன் ராதாகிருஷ்ணன் (அம்பி) . டி.வி.எஸ். இவ்வாண்டின் சங்கீத கலாநிதி விருதைப் பெற விருக்கிறார் என்ற செய்தியை, சில தினங்களுக்கு முன் அப்பாவிடம் தெரிவித்திருந்தார் அவர்.

கண்களை மெள்ளத் திறந்த செம்மங்குடி, மிகுந்த பிரயாசையுடன் "கங்கிராஜுலேஷன்ஸ்" என்று அழுத்தம் திருத்தமாக உச்சரித்து டி.வி.எஸ்ஸை வாழ்த்தினார். அவர் கடைசிக் காலத்தில் பேசிய வெகு சில வார்த்தைகளுள் ஒன்றாக அமைந்தது இவ்வாழ்த்து.

பேச்சு மூச்சற்று இருந்த நிலையிலும் ஒரு கலைஞரைப் போற்றி அவர் மகிழ்ச்சியில் மனதாரப் பங்கேற்ற இந்தப் பண்பு, செம்மங்குடி ஸ்ரீநிவாஸய்யரின் உத்தம குணங்களுள் ஒன்று.

எம்.எஸ்ஸை 'இந்த தேசத்தின் சொத்து' என்று பூரிப்புடன் வர்ணிப்பார். 'பிருந்தா முக்தாவைப் போல பதம் பாட யாரால் முடியும்...?' என்று வியந்தவர்தான், "சௌம்யாவின் பதம் - ஜாவளி காசெட் வந்திருக்கிறது. கேட்டீர்களோ? எத்தனைச் சிறப்பாகப் பாடியிருக்கிறாள்!" என்று மகிழ்வார். டி.கே. பட்டம்மாளை ஒரு கலைஞராக மட்டுமின்றி, இசையாசிரியராகவும் போற்றியவர், டி.கே. ஜெயராமனை 'ஒரு பல்கலைக் கழகம்' என்று வர்ணிப்பார்; அவர் வழியில் விஜய் சிவா சிறப்பாகப் பாடுவதைக் கேட்டு வாழ்த்துவார். 'பாபநாசம் சிவனின் உருக்கும் பிடிகளை அவர் பேரன் அசோக் ரமணி பாடக் கேட்டு நெகிழ்ந்திருக்கிறேன்' என்று பத்திரிகைப் பேட்டி கொடுப்பார். சஞ்சய் சுப்ரமண்யனின் தோடியை நினைவு கூர்ந்து பாராட்டிப் பேசுவார். இன்றைய பெண் கலைஞர்கள் குரலினிமையில் புரட்சி செய்து வருவதை வியப்பார்...

இத்தனைக்கும், அவர் உழுது சென்ற சங்கீத நிலத்தில்தான் இன்று இத்தனை பேரும் பயிர் செய்து பயனடைந்து கொண்டிருக்கிறார்கள்.

செம்மங்குடி என்ற சிற்றூரில் 1908ம் ஆண்டு பிறந்து, செம்மங்குடி நாராயணசாமி அய்யர், சகாராம ராவ், உமையாள்புரம் சுவாமிநாத அய்யர், மகாராஜபுரம் விச்வநாத அய்யர் போன்றோரிடம் பயின்று, பதினெட்டு வயதில் மேடைப் பாடகரானார். சற்றேறத்தாழ எண்பது ஆண்டுகள் கர்நாடக சங்கீத உலகத்தில் பணியாற்றி, தன்னிகரற்ற இடத்தை அடைந்தார். 31.10.2003 அன்று அவர் மறைவால் வெற்றிடமாகிவிட்ட அந்த ஸ்தானத்தை இட்டு நிரப்ப, இனியொருவர், அமைவது அரிது.

செம்மங்குடி சங்கீதம் பயின்ற காலத்தில் இசையும் கரடு முரடாக இருந்தது; அதைக் கற்பிக்கும் வழிமுறையும் மிகக் கடினமாக இருந்தது. இரண்டையுமே புரட்சிகரமாக மாற்றியமைத்த பெருமை காரணமாகவே, அவரை இன்று இசையுலகம் போற்றி வணங்குகிறது.

குருகுலவாசம் செய்து தமது இசையாசிரியர்களிடம் இரவு பகலாகக் கற்றுக் கொண்ட சங்கீதத்தை, 'நொடேஷன்' என்று ஸ்வரப் படுத்தி எழுதும் முறையில் பதிவு செய்து நிரந்தரப்படுத்தினார். தமது சிஷ்யர்களுக்கும் வழங்கினார். இந்த ஆற்றல் திருவனந்தபுரம் இசைக் கல்லூரியில் தலைமைப் பொறுப்பேற்று, இசைப் பாடத்திட்டம் வகுக்கவும் கை கொடுத்தது. ஸ்வாதித் திருநாள் உள்ளிட்ட பலரின் பழைய, புதிய பாடல்களைப் பக்குவப்படுத்தி, மேடையில் உலவ விட உதவியது.

நல்ல குருநாதர்களை அவருக்கு வழங்கிய வாழ்க்கை, அற்புதமான குரல் வளத்தைக் கொடுத்துவிடவில்லை. 'முரட்டுக் கதர் குரல் தான், ஆனால் எப்பேர்ப்பட்ட சங்கீதம்' என்று கல்கியை வியக்க வைத்தார். உழைத்து உழைத்து அந்தக் குரலை இழைத்து இழைத்து, வழிக்குக் கொண்டு வந்து, தமது கச்சேரிகள் ஒவ்வொன்றையும் ஒரு புதிய அனுபவமாக்கினார்.

கீர்த்தனைகளைப் புத்துணர்ச்சியோடு பாடுவது, ராக ஆலாபனைகளில் ஆச்சர்யமான கற்பனைகள், நிரவலில் ராக-சாஹித்ய பாவங்களை இணைத்துத் தரும் அழகு, அனாயாசமாகப் பொழிந்து தள்ளிய கற்பனை ஸ்வரங்கள், துளியும் தொய்வின்றி கர்நாடக சங்கீதத்தின் சகல அம்சங்களையும் உள்ளடக்கிய ஒரு கச்சேரி அமைப்பு... இவையெல்லாம் இணைந்த ஆச்சர்யம் செம்மங்குடி பாணி.

எத்தனையோ பாணிகள் வரலாம் போகலாம்; ஆனால் செம்மங்குடியின் பாணி அழிவில்லாதது. கர்நாடக சங்கீத இலக்கணங்களை பயபக்தியுடன் போற்றி, அதன் அழகியல் அம்சங்களில் மட்டும் முற்றிலுமாகப் புரட்சி செய்து, அதை மேடைக் கலையாக, அதிலும் மனதை ஊடுருவி நம் அந்தராத்மாவைத் தொட்டசைக்கும் மேடைக் கலையாக முழுமை பெறச் செய்த மகத்தான சாதனை அவருடையது.

இனி வரும் பாணிகள் செம்மங்குடி பாணியின் நிழலாகவோ, அதன் பாதிப்பை உள்ளடக்கியோதான் உருவாக முடியும்.

ஒப்புயர்வற்ற ஒரு பாணியை உருவாக்கியவர், அதனைப் பல சிஷ்யர்களுக்குக் கற்றுத் தரும் கடமையையும் சிறப்பாக நிறைவேற்றினார்.

ஒரு கீர்த்தனையைப் பாதி கற்றுச் சென்ற டி.எம். கிருஷ்ணாவை தொலைபேசியில் "சரணம் கத்துக்க எப்போ வரப் போறே...?" என்று அழைத்துக் கற்றுத் தந்துள்ளார்.

டி.எம். தியாகராஜன், பி.எஸ். நாராயண சுவாமி, வி. சுப்ரமண்யம், பாளை ராமச்சந்திரன், டி.என். கிருஷ்ணன், கடையநல்லூர் வெங்கட்ராமன் போன்ற அவரது சிஷ்யர்கள், சிறந்த வித்வான்களாக விளங்குவதுடன், இன்று தங்கள் சிஷ்யர்களையும் உருவாக்கி வருகிறார்கள்.

சங்கீத கர்ம வீரராக வாழ்ந்தவர், தனிப்பட்ட வாழ்க்கையில் எளிமையும் அனுஷ்டானமும் காத்தார். கடைசி வரை கதர் ஆடை மட்டுமே அணிந்தார். ராட்டையில் அவரே நூற்று, நெய்யச் செய்து உடுத்தினார். சாதனைகளுக்கு நடுவே சக மனிதர்களுக்கு நேரம் ஒதுக்கி பிரேமையுடன் பழகினார். பொது மேடைகளில் சாதுர்யமும் நகைச்சுவையுணர்வும் ததும்ப அவர் பேசுவதைக் கேட்கவே தனியொரு கூட்டம் வந்தது. ஓர் இசைவிழா மேடையில் செம்மங்குடி பேசக் கேட்ட கலைஞர், 'நல்லவேளை, செம்மங்குடி அரசியலுக்கு வரவில்லை; அப்படி வந்திருந்தால் நாங்கள் எல்லோரும் இருந்த இடம் தெரியாது போயிருப்போம்' என்று சொன்னதும் அரங்கமே கரவொலியில் அதிர்ந்தது.

செம்மங்குடியின் கச்சேரிகளைக் கேட்க வந்த கூட்டத்தைப் பற்றியோ, சொல்லவே தேவையில்லை...வரலாற்றில் இடம் பெற்றவர், ரசிகர்களின் இதயத்திலும் சிம்மாசனம் போட்டு அமர்ந்துகொண்டார்.

சாகரம் போன்ற ஒரு தோடி அல்லது கரஹரப்ரியா ஆலாபனை பாடி ஏற்படுத்தும் பாதிப்பை, ஒரு குட்டி ராகமான குந்தலவராளி அல்லது ஹம்சாநந்தி பாடி அவரால் ஏற்படுத்த முடிந்தது. பைரவி ஸ்வரஜதி பாடினாலும் சரி, பாரதியார் பாட்டானாலும் சரி, ஹ்ருதயத்தின் ஆழத்திலிருந்து அவர் பொழிய, சங்கீதத்துக்கு அவர் சேவகம் செய்வதாகவே நமக்குத் தோன்றும். இதனால்தான் அந்த சங்கீதமும் அவருக்குச் சேவகம் செய்ய ஓடி ஓடி வந்தது போலும்!



# மறுக்கிறார் மலையன்!

• மலையன்



'கலாட்டா கார்ப்பரேஷன்' என்ற தலைப்பில் மாநகராட்சி ஒன்பதாவது மண்டலத் தலைவர் மா. சுப்பிரமணியன் மற்றும் துணை மேயர் கராத்தே தியாகராஜன் ஆகியோரின் பேட்டியை 'கல்கி' 2.11.03 இதழில் படித்தேன்.

சென்னை மாநகராட்சி எதிர் கட்சித் தலைவர் (தி.மு.க.) என்ற முறையில், சில உண்மைகளை விவரிக்க வேண்டியது எனது கடமையாகும்.

சைதாப்பேட்டைத் தொகுதி. கோடம்பாக்கம் சாலையில், தனியாருக்குச் சொந்தமான முப்பத்திரண்டு கிரவுண்டு காலியிடம் உள்ளது. அந்த இடத்தை, அங்குள்ள மாநகராட்சி மேல் நிலை, நடுநிலை, துவக்கப் பள்ளிகளின் விளையாட்டுத்திடல் பயன்பாட்டிற்குத் தனியாரிடமிருந்து கையகப்படுத்த, தி.மு.க. உள்ளிட்ட பல பொது நல சங்கங்கள், பெற்றோர் ஆசிரியர் சங்கங்கள் கோரின. இதற்கு மாநகராட்சி மன்றத் தீர்மானம் பெற்று, உரிய நடவடிக்கை எடுக்குமாறு சென்னை மாவட்ட ஆட்சியருக்கு அத் தீர்மானம் அனுப்பப்பட்டது. 1972ம் ஆண்டிலிருந்து 2002ம் ஆண்டு வரை நிர்வாக ரீதியாகவும், சட்ட ரீதியாகவும் பாதுகாக்கப்பட்ட இடம்தான் மேற்படி நிலமாகும்.

பொதுமக்களின் கோரிக்கையை ஏற்று, சென்னை மாவட்ட ஆட்சியரால் நில ஆர்ஜித சட்டப்படி நிலத்தைக் கையகப்படுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. அதன்மீது மேற்படி நிலத்தின் உரிமையாளர்கள் வழக்குத் தொடர்ந்ததில், சென்னை உயர்நீதிமன்றத்தில் மாநகராட்சிக்குச் சாதகமாகத் தீர்ப்பு வந்துள்ளது. அதனை எதிர்த்து, மீண்டும் நில உரிமையாளர்கள் உச்சநீதிமன்றத்தில் தொடுத்த வழக்கில், 2002ம் ஆண்டு மார்ச் திங்களில் அவர்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பு வந்துள்ளது. தீர்ப்பு வந்து சற்றொப்ப பன்னிரண்டு மாதங்கள் ஆகியும், உச்சநீதிமன்றத்தில் மறு சீராய்வு மனுத்தாக்கல் நடவடிக்கை ஏதும் எடுக்கப்படவில்லை. அப்போது நடந்து கொண்டிருந்தது அ.தி.மு.க. ஆட்சி என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இது தொடர்பாக 9வது வார்டு குழுத் தலைவர் மா. சுப்பிரமணியன், சென்னை மாவட்ட ஆட்சியாளருக்கு 13.12.2002 தேதியில் எழுதிய கடிதத்தில், மேற்படி நிலம் கையகப்படுத்தப்பட வேண்டியதன் அவசியத்தையும், உச்ச நீதிமன்றத்தில் மறு சீராய்வு மனுவினை உடன் தாக்கல் செய்ய நடவடிக்கை எடுக்க வேண்டுமெனவும், இதனால் ஏற்படும் தாமதத்தை நில உரிமையாளர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்த முனைவதைத் தடுத்து நிறுத்த வேண்டுமெனவும் கேட்டுக் கொண்டுள்ளார்.

இந்நிலையில்தான் கராத்தே தியாகராஜனின் அ.தி.மு.க. நிர்வாகத்தில் உள்ள நகரமைப்புப் பிரிவில் (Town planning Section), மேற்படி நில உரிமையாளர்கள் பயனடையும் வகையில், அந்நிலத்தில் கட்டடம் கட்டுவதற்கு மனை

பிரிப்பதற்கான (Layout) திட்ட அனுமதி வழங்கப்பட்டது. அதற்கான கட்டணம் ரூ. 89,92,280.00 செலுத்தக் கோரும் 30.12.2002 தேதியிட்ட அறிவிப்பையும் (Payment Advice) அவசர அவசரமாகத் தயாரித்து நில உரிமையாளர்களுக்கு வழங்கப்பட்டுவிட்டது.

இதனிடையில் தற்போதுள்ள சைதாப்பேட்டை சட்டமன்ற உறுப்பினர் ராதாரவி, மு.க.ஸ்டாலினும் தி.மு.கவினரும் தான் நில உரிமையாளர்களுக்கு நிலத்தை



விட்டுக் கொடுத்து விட்டனர் என்றும், விசாரணைக் கமிஷன் வைக்க வேண்டுமென்றும், சில மாதங்களுக்கு முன்பு சட்டமன்றத்தில் பேசிய பேச்சு, பெரிய சர்ச்சையை ஏற்படுத்தியது. அதனைத் தொடர்ந்து 24.3.2003-ல் நடைபெற்ற சட்டமன்றக் கூட்டத்தில், நிதிநிலை அறிக்கையின் மீது துவக்க உரையாற்றிய மு.க.ஸ்டாலின், மேற்படி நில சம்பந்தமான விஷயங்களைத் தமது உரையில் குறிப்பிட்டு, விசாரணைக் கமிஷன் வைக்கக் கோரி, அதற்கான ஆவணங்களையும் அப்போதே முதலமைச்சரிடம் அளித்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

மேலும், இது சம்பந்தமாக, 28.11.2002 நாளன்று நடைபெற்ற மாநகராட்சி மன்றக் கூட்டத்தில், கேள்வி நேரத்தின் போது சைதாப்பேட்டையைச் சேர்ந்த 134வது வார்டு அ.தி.மு.க. மன்ற உறுப்பினர் கு.செல்வநாயகம் என்பவர், 'மேற்படி நிலம் குறித்து தற்போதைய நிலை என்ன?' என்ற கேள்வியைக் கேட்டிருந்தார்.

சென்னை மாநகராட்சி நிர்வாகத்தின் சார்பாக, அதற்கு அளிக்கப்பட்ட பதில் என்னவென்றால்,

"வார்டு - 134ல் குறிப்பிட்டுள்ள முப்பத்தியிரண்டு மனைகள் உள்ள தனியார் இடம், சைதாப்பேட்டை ஜோன்ஸ் சாலையில் உள்ள சென்னை மாநகராட்சி ஆண்கள் மேல்நிலைப்பள்ளியில் விளையாட்டுத் திடலுக்குத் தேவை என்று மன்றத் தீர்மானம் பெற்று மாவட்ட ஆட்சியருக்கு அனுப்பப்பட்டது. சென்னை மாவட்ட ஆட்சியர் நில ஆர்ஜித சட்டப்படி, மேற்படி நிலத்தைக் கையகப்படுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. அதன் மீது மேற்படி நிலத்தின் உரிமையாளர்கள், சென்னை மாவட்ட ஆட்சியர் மீது வழக்குத் தொடுத்து, அந்த வழக்கு உயர்நீதிமன்றத்தில் தோல்வி கண்டு, உச்சநீதிமன்றத்திற்குச் சென்று, அங்கு மனுதாரருக்குச் சாதகமாக மார்ச் 2002ல் தீர்ப்பு வழங்கப்பட்டது. அந்தத் தீர்ப்பின் மீது உச்சநீதிமன்றத்தில் சீராய்வு மனுதாக்கல் செய்யுமாறு மாவட்ட ஆட்சியரை அறிவுறுத்தும்படி, மாவட்ட வருவாய் அலுவலர் (நிலம் மற்றும் உடைமைத் துறை) கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளார்" என பதில் தரப்பட்டது.

ஆக, ஒருபக்கம் மேற்படி நிலம் சம்பந்தமாக மேல்நடவடிக்கை எடுக்கப்படுவது போன்றும், மற்றொரு பக்கம் நில உரிமையாளர்கள் ஆதாயம் பெற கட்டடம் கட்ட மனைப்பிரிவு அனுமதி (Layout) வழங்கும் அறிவிப்பும் 30.10.2002ல் தயாரிக்கப்பட்டு இருப்பது நிரூபணமாகிறது.

சி.வி. மலையன்,
எதிர்க்கட்சித் தலைவர்,
சென்னை மாநகராட்சி.

*"எல்லோரும் ஓர் விலை*
*எல்லோரும் ஓர் நிறை*
*எல்லோரும் இந்நாட்டு மன்னர்"*

என்று பாரதியார் பாடினார். இருபத்தியொரு வயது நிரம்பிய எல்லோருக்கும் (இப்பொழுது பதினெட்டு வயது) வாக்குரிமை என்று அரசியல் சாசனம் அறிவித்தது. சாதி, மதம், இனம், நிறம், பால் ஆகிய வேற்றுமைகள் இல்லாமல் எல்லோரும் வாக்குரிமையைப் பெற்றோம் என்பதோடு நம்முடைய ஜனநாயகம் முழுமையடைந்து விட்டதாகக் கருதுகிறோம்.

2001-ஆம் ஆண்டு சட்டமன்றத் தேர்தலுக்குப் பிறகு சென்னை எத்திராஜ் மகளிர் கல்லூரியில் உரையாற்றும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. சுமார் எண்ணூறு மாணவிகள் குழுமியிருந்தார்கள். எல்லோரும் பதினெட்டு வயது நிரம்பியவர்கள். அப்பொழுது நடந்து முடிந்திருந்த சட்டமன்றத் தேர்தலில் எல்லோருக்கும் வாக்குரிமை இருந்திருக்க வேண்டும் (தங்கள் பெயர்களை வாக்காளர் பட்டியலில் பதிவுசெய்யத் தவறிய சிலரைத் தவிர).

நான் பேசிக் கொண்டிருந்தபோது, ஓரிடத்தில் நிறுத்தி, "அண்மையில் நடந்த சட்டமன்றத் தேர்தலில் உங்களில் வாக்களித்தவர்கள் எல்லோரும் கை தூக்குங்கள்" என்று கேட்டுக் கொண்டேன். சுமார் முன்னூறு கைகள் உயர்ந்தன!

இதே கேள்வியை நான் பல கூட்டங்களில் கேட்டிருக்கிறேன். கிராமங்களில் ஏறத்தாழ தொண்ணூறு சதவிகித வாக்காளர்கள் வாக்களித்து விடுகிறார்கள். சிலர் ஊரில் இருப்பதில்லை; சிலருக்கு உடல்நலக் குறைவு - இவர்களைத் தவிர மற்றவர்களை "எப்படியாவது" வாக்குச் சாவடிக்கு அரசியல் கட்சிகளின் தொண்டர்கள் கொண்டு வந்து விடுகிறார்கள். பெரிய கிராமம் என்று வரும் பொழுது, வாக்குப் பதிவு குறைகிறது. பேரூராட்சிகளில் இன்னும் குறைகிறது. நகராட்சிகளிலும் மாநகராட்சிகளிலும் சராசரி வாக்குப் பதிவு 50-60 சதவிகிதம்தான் இருக்கிறது.



• வோட்டு...

இவை எதைக் காட்டுகின்றன? நகர்ப்புற நாகரிகமோ, கல்வித் தகுதியோ நமக்கு ஜனநாயக உணர்வுகளை அதிகரித்து விடவில்லை. இன்னும் சொல்லப் போனால், மெத்தப் படித்தவர்களும் மேற்கத்திய உலகியல்களை ஏற்றுக் கொள்பவர்களும், தங்களுக்குள்ள குறைந்தபட்ச சமூகப் பொறுப்புகளை நிறைவேற்றத் தவறுகிறார்கள். அரசியல் என்பது வெறுக்கத்தக்கது என்றும், அரசியல்வாதிகளில் யாருமே ஒழுக்கமானவர்கள் அல்ல என்றும், அவர்களிடையே ஓர் உணர்வு பரவியிருக்கிறது.

அரசு என்றால் என்ன என்பதைப் பார்த்தோம். சட்டமன்றம் என்பது ஜனநாயகத்தின் முக்கியமான அரங்கம் என்பதையும் பார்த்தோம். இந்த அரங்கத்தில் எதை விதைக்கிறோமோ அதுதான் விளையும். சட்டமன்றத்திற்கும், நாடாளுமன்றத்திற்கும் நாம் தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளுக்கு, இரண்டு வகையான கடமைகள் இருக்கின்றன. முதல் கடமை, சட்டமன்றமாகச் செயல்படுவது. ஒரு ஜனநாயக நாட்டின் முதல் தூண் சட்டமன்றமே. அவர்களுடைய இரண்டாவது கடமை, அவர்களில் சிலர் மட்டுமே ஏற்பது, அரசு அல்லது நிர்வாகமாகச் செயல்படுவது. இது ஜனநாயகத்தின் இரண்டாவது தூண். (ஜனநாயகத்தின் மூன்றாவது தூண் நீதித்துறை).

எனவே, பல வேட்பாளர்களுக்கிடையே ஒரு வேட்பாளரை நாம் தேர்ந்தெடுக்கும் போது, இரண்டு தூண்களைத் தேர்ந்தெடுக்கிறோம் என்ற உணர்வுடன் வாக்களிக்க வேண்டும்.

ஒரு தேர்தலில் வாக்களிக்காதவர்களுக்கு ("நான் வோட்டுப் போடுறதில்லை

• ... ஜாதி வோட்டு!



சார். நாமெல்லாம் வோட்டுப் போட்டு என்ன ஆகப் போகிறது" என்று சொல்பவர்களை நான் பார்த்திருக்கிறேன்) ஜனநாயகத்தைப் பற்றியும், அரசைப் பற்றியும், நிர்வாகத்தைப் பற்றியும் பேசுவதற்கு என்ன அருகதை இருக்கிறது? இந்தியாவில் கட்டாய வாக்குப் பதிவு என்றொரு சட்டத்தைக் கொண்டு வந்தால் நல்லது என்று எனக்குச் சில சமயம் தோன்றுகிறது. ஆஸ்திரேலியாவில் கட்டாய வாக்குப் பதிவு என்பது சட்டம். வாக்களிக்காதவர்களுக்கு அபராதம் விதிக்கப்படுகிறது. இந்தியாவில் வாக்குப் பதிவு எப்பொழுது எண்பது சத விகிதத்தைத் தாண்டுகிறதோ, அப்பொழுது தான் உண்மையான ஜனநாயகத் தேர்தல் நடைபெறுகிறது என்று நான் கருதுவேன்.



# கட்டாய வாக்குப் பதிவு!

நமக்கே உரிமையாம் 3

ப.சிதம்பரம்

**வா**க்களிக்காதவர்கள் ஒரு பக்கம் இருக்கட்டும். வாக்களிப்பவர்கள் எப்படி வாக்களிக்கிறார்கள்?

பெரும்பாலானோர் ஒரு கட்சிக்கே (அதன் சின்னத்திற்கு) வாக்களிக்கிறார்கள். உதாரணமாக, 'இரட்டை இலை' என்பது வலிமையான சின்னம். அது எம்.ஜி.ஆரின் சின்னமாக இருந்தது. இன்று அ.இ.அ.தி.மு.க.வுக்கு மிகப் பெரிய வரப்பிரசாதமாகக் கிடைத்திருக்கிறது. ஆனால் ஒரு கட்சிக்கு வாக்களிக்கும்போது அக்கட்சியின் கொள்கைகளுக்கோ, நிர்வாகத் திறமைக்கோ, தலைவர்களின் ஒழுக்கத்திற்கோ வாக்களிக்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாது. அக் கட்சி தங்கள் மதத்தினருக்குப் பாதுகாப்பு என்றோ, தங்கள் ஜாதியினருக்கு ஆதரவு என்றோ கருதி வாக்களிப்பவர்களே நிறைய இருக்கிறார்கள். உதாரணமாக, லல்லுபிரசாத் யாதவ்வின் கட்சி, யாதவர்களுக்கு ஆதரவான கட்சி என்று கருதப்படுகிறது. தமிழ்நாட்டில் அ.இ.அ.தி.மு.க. முக்குலத்தோருக்கு ஆதரவான கட்சி, என்று பல வழிகளில் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொள்கிறது.

ஜாதி அல்லது மதம் பார்க்காமல் வாக்களிப்பவர்கள் கூட, பணத்திற்கு ஆசைப்பட்டு வாக்களிக்கிறார்கள். வோட்டுக்கு நூறு ரூபாய் என்ற அளவுக்கு சாத்தான் குளம் இடைத்தேர்தலில் ஒழுங்கீனம் தலைவிரித்தாடியது. தேர்தல் நாளன்று கிடைக்கும் பணத்திற்கோ,



## கழுதை போதும்!

தரமிழந்த அரசியல் என்பது அன்றும் இருந்தது. ஆனால் பதற்றமடையாமல் அதைச் சமாளிக்கவும் அந்நாளையத் தலைவர்களுக்குத் தெரிந்திருந்தது. மூதறிஞர் ராஜாஜி, காயிதே மில்லத் ஆகியவர்களுடன் அண்ணா கூட்டணி அமைத்து தேர்தலில் போட்டியிட்ட போது, காங்கிரஸ்காரர்கள் இம் மூன்று தலைவர்களும் கழுதை மேல் அமர்ந்து கோட்டைக்குப் போக நினைப்பது போல வரைந்து, பெரிய தட்டியை இவர்கள் பேச இருந்த மேடைக்கு எதிரில் வைத்தனர்.

மூதறிஞர் பேசும் போது 'இந்தக் கோட்டையைப் பிடிக்கக் கழுதை போதும், பஞ்சகல்யாணி குதிரையா வேண்டும்' என்று கேட்க, பலத்த ஆரவாரம். மறுநாளே அந்தப் படம் எழுதிய தட்டி காணாமல் போனது!

- சீனிவாசன்

பொருளுக்கோ, பிரியாணிப் பொட்டலத்திற்கோ அடிமையாகி, வாக்களித்து விடுகிறார்கள்.

இதுபோன்று வாக்களிப்பதால் ஏற்படும் விளைவுகளை எண்ணிப் பார்க்க வேண்டும். இன்று பல மாநிலச் சட்டமன்றங்களில் கொலை, கொள்ளை குற்றங்கள் சாட்டப்பட்டவர்கள், ஏன், தண்டிக்கப்பட்டவர்கள் கூட இருக்கிறார்கள். ஆந்திர மாநிலத்தில் இரட்டைக் கொலை வழக்கில் (இபிகோ பிரிவு 302) குற்றம் சாட்டப்பட்டவர் ராமசுப்பாரெட்டி. அவர் மீது வழக்கு நடந்து கொண்டிருக்கிறது. ஆயினும் அவர் சந்திரபாபு நாயுடுவின் அமைச்சரவை யில் ஓர் அமைச்சர்!

கொலை, கொள்ளை, கற்பழிப்பு, கடத்தல், பொருளாதாரக் குற்றங்கள் என்று பல வகையான குற்றங்களை இழைத்தவர்கள் தேர்தலில் வேட்பாளர்களாக நிற்கிறார்கள். சிலர் சிறையில் இருந்து கொண்டே வேட்பு மனுத் தாக்கல் செய்து, சிறையிலிருந்து கொண்டே தேர்தலிலும் போட்டியிடுகிறார்கள். அவர்களில் பலர் தேர்தலில் வெற்றியும் பெறுகிறார்கள்.

விதைப்பது முள் செடி என்றால், விளைவதும் முள் செடியாகத்தானே இருக்கும்? நம்முடைய சட்டமன்றங்களும் நிர்வாகமும் (அமைச்சரவையும்), மிக மோசமாகச் சீர்குலைந்திருப்பதற்குக் காரணம், நாம் தேர்ந்தெடுத்த உறுப்பினர்களே.

ஒரு காலத்தில் கல்வியாளர்கள், அறிஞர்கள், சிந்தனையாளர்கள், சமுதாயத் தலைவர்கள், திறமையான நிர்வாகிகள் என்று, சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இன்று குற்றவாளிகள், குற்றம் சாட்டப்பட்டவர்கள், குற்றங்களையே தொழிலாகச் செய்து கொண்டிருப்பவர்களைத் தேர்ந்தெடுக்கிறோம்.

மற்ற ஜனநாயக நாடுகளில் ஒருவர் பொது வாழ்க்கையில் ஒழுக்கம் தவறினார் என்றால், அவருக்கு அந்த நாட்டு மக்கள் மீண்டும் ஒரு வாய்ப்பைத் தருவதில்லை. ஆனால், நாமோ பொது வாழ்க்கையில் ஒழுக்கம் தவறியவர்களை மீண்டும் மீண்டும் தேர்ந்தெடுக்கிறோம்.

ஒரு புதை சேற்றுக்குள் நம்முடைய ஜனநாயகம் முழுகிக் கொண்டிருக்கிறது. இதனை விரைவில் மீட்கவில்லையென்றால், இன்னும் சில ஆண்டுகள் கழித்து இந்தியா ஒரு ஜனநாயக நாடு என்று சொல்ல முடியாத நிலை ஏற்பட்டு விடும். ஜனநாயகம் என்ற போர்வையில் மறைந்து கொண்டு, குற்றவாளிகளும், குற்றவாளிகளால் இயக்கப்படுபவர்களுமே இந்த நாட்டில் ஆட்சியாளர்களாக இருப்பார்கள்.

பயிர் ஜனநாயகம். வேலி அரசியல். வேலியே பயிரை மேய்கிறது என்று கவலைப் படுகிறீர்களா? வேலி மட்டுமல்ல. வேலியில் படர்ந்துள்ள விஷக் கொடிகளும், கள்ளிச் செடிகளும் பயிரை மேயத் தொடங்கியுள்ளன. இதிலிருந்து பயிரை எப்படிக் காப்பாற்றுவது என்று பார்ப்போம்.

(தொடரும்)



## ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத
## ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்
## ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி - 609 501.

# மஹா அன்னாபிஷேகம்

அன்புடையீர், அன்னத்திற்கும், அன்னத்தைக் கொண்டு உயிர்வாழும் உயிரினங்கள் அனைத்திற்கும் பதியான பரமேச்வரனுக்கு உயிரினங்கள் காட்டும் நன்றிக் கடனே மஹா அன்னாபிஷேகம். கார்காலம் முடிந்து அறுவடை நடந்து எங்கும் மலை மலையாக நெற்குவியல்கள் நிறைந்து நிற்கும் செழிப்பான காலத்தில் அவனருளால் கிடைத்த அன்னத்தை பயிர்களுக்கு உயிரூட்டி வளர்க்கும் சந்திரன் பூர்ணகலையுடன் விளங்கும் பௌர்ணமி நாளில் பூரண வாழ்வு பெறும் பொருட்டு இறைவனுக்கு அவ்வபிஷேகம் செய்து மகிழ்வது முன்னோர் வகுத்த நெறி.

இந்நெறியைப் பின்பற்றி கீழ்கண்ட நிரலின் வண்ணம் ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி ஸமேத ஸற்குணேச்வரப் பெருமானுக்கு மஹா அன்னாபிஷேகம் நடைபெற இருக்கிறது. அன்பர்கள் அனைவரும் பங்கு கொண்டு இன்னருள் பெற வேண்டுகிறோம்.

**நிகழ்ச்சி நிரல்**

| | | |
|---|---|---|
| நாள் | : | ஐப்பசி22உ 08.11.2003 சனிக்கிழமை |
| பிற்பகல் | : | 3.00 மணிக்கு மஹாந்யாஸ ருத்ரபாராயணங்களுடன் அபிஷேகம் ஆரம்பம் |
| மாலை | : | 6.00 மணிக்கு மஹா தீபாராதனை |
| | : | 6.30க்கு விசேஷ பௌர்ணமி பூஜை ஸ்ரீ லலிதா த்ரிசதிகள் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனைகள் |
| இரவு | : | 8.00 மணிக்கு மஹா தீபாராதனை |

இங்ஙனம்,

ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா
Ph : (04366) 273 900 - (0435) 2423297

Dr. V. கிருஷ்ணமூர்த்தி
*பரம்பரை தர்மகர்த்தா*
Ph : (04366) 273800

---



## வானதியின் புதிய வெளியீடு
## குருஜி ஏ.எஸ்.ராகவன் எழுதிய

# தலம்தோறும் தமிழ்க் கடவுள்

குருஜி அற்புதமாக எழுதி கல்கியில் தொடர் கட்டுரைகளாக வெளிவந்தது இப்பொழுது அழகிய நூல் வடிவில் வெளிவந்துள்ளது.

ஓவியர் தனுசுவின் ஏராளமான வரை ஓவியங்களும் 16 அழகிய வண்ணப் படங்களும் நூலை அலங்கரிக்கின்றது.

''தமிழ்க் கடவுளான முருகன் உறையும் திருத்தலங்கள், அவனது திருவிளையாடல்களையெல்லாம் உள்ளடக்கியுள்ள இந்த நுல் படிப்பவர்களுக்கு ஞானத்தை அருளி, கவலைகளைப் போக்கி ஆன்மிக நெறியிலே வாழ வழிவகுக்கும் என நம்புகிறேன். இந்த நூலைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்வது வாசகர்களிடம் தான் இருக்கிறது' என்கிறார் குருஜி. முருகன் அருள்பெறப் படித்துப் பயன டையுங்கள்.

260 பக்கங்கள். விலை ரூ. 70.00
பதிவுத் தபாலில் பெற ரூ.90 M.O. செய்க.

'VANATHI PATHIPPAKAM' பெயரில் DD டிராப்டு ரூ.90க்கு அனுப்பிப் பெறலாம். வி.பி.பி. வசதி உண்டு. வி.பி.தபால் செலவு தனி.

*விவரங்களுக்கு:*

## வானதி பதிப்பகம்

23, (ப. எண்:13), தீனதயாளு தெரு, தியாகராய நகர்,
சென்னை - 600 017. தொலைபேசி எண்: 24342810




# தூக்கியெறியணுமா பொடாவை ?

'பொடாவைத் திருத்தும் அவசரச் சட்டம் எதற்கு? பொடாவையே தூக்கி எறிந்து விடுங்கள்' என்கிறார் கருணாநிதி. ஜெயலலிதாவோ, 'இந்தச் சட்டத் திருத்தங்கள் மாநில அரசுகளின் சுயேச்சையான இயக்கத்தில் தலையிட்டு உரிமைகளைப் பறிக்கின்றன' என்கிறார்.

பொடா ஏன் அமலாயிற்று என்பதை நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். நாடெங்கும் தீவிரவாதம் பரவிக் கிடக்கிறது. ஜம்மு - காஷ்மீரில் தினம் தினம் பயங்கரவாதத்துக்குச் சிலர் பலியாகிறார்கள். மும்பையில் நடந்த டாக்ஸி குண்டு வெடிப்புகள் நாட்டையே கதிகலங்கச் செய்தன. நாடாளுமன்றக் கட்டடமே இலக்காக்கப்பட்டிருக்கிறது; அக்ஷர்தாம் கோயிலில் அநியாயமாக உயிர்கள் பலியாயின; சந்திரபாபு நாயுடு சமீபத்தில்தான் நக்ஸலைட்டுகளின் சதியிலிருந்து தப்பி உயிர் பிழைத்தார். இதைத் தொடர்ந்து தமிழக முதல்வருக்குக் கூட பாதுகாப்பு ஏற்பாடுகள் பலப்படுத்தப்பட்டுள்ளன.

பயங்கரவாதத்தின் அடிப்படையே மூர்க்கம்தான். திட்டமிட்டுச் சதிகளை நிறைவேற்றுவது; கொலை செய்வது; பீதி உண்டாக்குகிற வகையில் தொடர் கொலைகள், அழித்தல், தகர்த்தல்....

சராசரி இந்தியக் குற்றவியல் சட்டங்கள் இதுபோன்ற திட்டமிட்டச் சதிகளை எதிர்கொள்ளப் போதுமானவை அல்ல; அந்நிய பயங்கரவாத சக்திகளின் ஊடுருவலைச் சமாளிக்க ஏற்றவை அல்ல என்பதால்தான்



கல்கி



2003 நவம்பர் 9
சுபானு ஐப்பசி 23
மலர் : 62
இதழ் : 15

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




'பொடா' என்கிற பயங்கரவாத தடைச் சட்டம் இயற்றப்பட்டது.

பொடாவுக்கு முன் 'தடா' என்று இதே போன்ற பயங்கரவாத தடைச் சட்டம் இயங்கியதும், அது மிதமிஞ்சி துஷ்பிரயோகம் ஆனதும் கூட சமீபத்திய வரலாறுகள்தான். தற்போது பொடா சட்டத்தை அரசியல் நோக்கோடு சிலர் துஷ்பிரயோகம் செய்கின்றனர் என்கிற காரணத்தால் தான் அது திருத்தப்பட்டிருக்கிறது. அதே காரணத்துக்காகத்தான் அந்தச் சட்டமே நீக்கப்பட வேண்டும் என்று ஒரு தரப்பினர் கேட்கிறார்கள்.

பொடாவை அடியோடு நீக்குவது புத்திசாலித்தனமல்ல. பயங்கரவாதம் உலகளாவிய ஒரு வலைப் பின்னலாக இன்று இயங்குகிறது. அதை எதிர்கொள்ளப் போதுமான வலுவை நமது சட்டத்தின் காவலர்களுக்கு வழங்க வேண்டும். பொடா இதற்கு உதவும்.

அச் சட்டத்தை துஷ்பிரயோகம் செய்து, எதிர்க்கட்சியினரை - எதிரணியினரை பலவீனப் படுத்தும் முயற்சி என்பது அழுகுணி அரசியல்.

பொடாவை ஆயுதமாக்கி, காவல் துறையினர் இழைக்கக்கூடிய அநீதிகள், மனித உரிமை மீறல் என்பதிலும் சந்தேகமில்லை.

ஆனால், பயங்கரவாதத்தைக் கட்டின்றி வளரவிட்டால், நாம் பாதுகாப்பதற்கோ, போற்று வதற்கோ மனித உரிமைகள் எதுவுமே மிச்சம் இராது. பயங்கரவாதத்தின் ஆட்சியில் உரிமைகள் பஸ்மமாகிவிடும்.

இதனால்தான் பொடா அவசியமாகிறது. இதனால்தான் அதனை ரத்து செய்யாமல், அதன் துஷ்பிரயோகத்தைத் தடுக்கும் வகையில், திருத்தங்கள் ஓர் அவசரச் சட்டம் மூலம் செய்யப் பட்டுள்ளன.

இனி பொடா நடவடிக்கைகளை எதிர்த்து, மத்திய, மாநில விமர்சனக் குழுக்களுக்கு விண்ணப்பிக்கலாம். ஏதேனும் அநீதி இழைக்கப்பட்டிருப்பதாக இந்தக் குழு உறுப்பினர்கள் கருதினால், சம்பந்தப்பட்ட மாநில அரசின் நடவடிக்கையை ரத்து செய்யும் அதிகாரம், இந்த விமர்சனக் குழுக்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. மாநிலக் குழுவின் கருத்து அல்லது முடிவை




மத்தியக் குழு ரத்து செய்யலாம் அல்லது மாற்றலாம்.

அரசியல் சார்புடன் மாநில அரசுகள் இயங்குவதைக் கட்டுப்படுத்தக்கூடியதென்றாலும் நிறையக் குழப்பங்களுக்கு இந்தச் சட்டத் திருத்தம் இடமளிக்கக்கூடும்.

மத்தியக் கமிட்டியின் பார்வையும், மாநிலக் கமிட்டியின் பார்வையும் வேறுபட்டால், விவாதங்களும் கசப்புணர்வும் பெருகும்.

இதையெல்லாம் தவிர்க்க ஒரு சிறந்த யோசனையை முன் வைத்திருக்கிறார் மூத்த வழக்கறிஞர் நரிமன்.

'பொடாவின் கீழ் கைது செய்யும் அதிகாரத்தை மத்திய அரசுக்கு மட்டும் கொடுங்கள். மாநிலங்களில் யாரேனும் பொடா சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட வேண்டும் என சம்பந்தப்பட்ட அரசு கருதினால், அது மத்திய அரசிடம் தெரிவித்து, நடவடிக்கைக்கு மனுச் செய்யலாம்.

பயங்கரவாதம் சராசரி சட்ட-ஒழுங்கு விஷயமல்ல. அதைத் தடுக்கும் பொறுப்பு மத்திய அரசிடம்தான் இருக்கிறது. ஆகவே பொடாவைப் பயன்படுத்தும் அதிகாரமும் மத்திய அரசிடம் மட்டுமே இருப்பதுதான் முறை. அவ்வாறு இருப்பதை மாநில அரசுகள் கேள்விக்கு உட்படுத்த முடியாது' என்று விளக்கியிருக்கிறார்.

நரிமன் கூறியுள்ள கருத்தும் விளக்கமும் நடைமுறைக்கு ஏற்றவையாக இருக்கின்றன.

மத்திய அரசு மட்டும் அரசியல் நோக்கில் செயல்படாதா என்ற கேள்வி எழலாம். மாநில அரசின் முன்மொழிதலைத்தான் மத்திய அரசு பரிசீலிக்கும் என்பதால், ஒரு நடவடிக்கை இரு நிலைகளில் அலசப்பட்ட பிறகே, முடிவு எடுக்கப்படும். இதையும் மீறி துஷ்பிரயோகங்களைத் தவிர்க்க, மத்திய விமர்சனக் குழுவை மட்டும் அமைத்து, அதற்கு அதிகாரங்கள் வழங்கலாம். அக் குழுவில் இடம்பெறுவோர், முற்றிலும் அரசியல் சார்பற்ற மனிதாபிமானிகளாகவும், நேர்மையாளர்களாகவும் அமைய வேண்டும் என்பது மிகவும் அவசியம்.

# “டேய் வண்டலூர் வருதுடா..!”

‘பாய்ஸை’ எல்லோரும் விரட்டி விரட்டி அடித்ததில் கொஞ்சம் வருத்தம் சிந்தூரிக்கு. ‘என்னமோ பிடிச்சிருக்கு’ அடுத்த படம் அவருக்கு.

**எங்க இருந்து கிளம்பி வந்து இப்படி ‘பாய்ஸை’ படுத்தி எடுக்கறீங்க?**

கேர்ள்லா இருந்தா பாய்ஸைத்தானே படுத்த முடியும்? எங்களுக்குச் சொந்த ஊர் பஞ்சாப். ஆனா நான் சுத்தத் தமிழ்... தவழ்ந்த திலே இருந்து தமிழ் மண்தான்.

**ஸ்கூல் போற வழியில ஸ்டுடியோவுக்குள்ள நுழைஞ்ச மாதிரி இருக்கீங்களே?... என்ன படிச்சிருக்கீங்க?**

எல்லாரையும் மாதிரிதான் தெளிவா படிச்சு, இப்பத்தான் டென்த் பாஸ் பண்ணியிருக்கேன். அடுத்தது ப்ளஸ் ஒன்.

**சிந்தூரியைக் கண்ணாடியில பார்த்தா என்ன குறை தெரியுது?**

முன்பெல்லாம் கண்ணாடி பாக்கும் போது ‘ஏய் என்னப்பா உன் பல்லு கொஞ்சம் தெத்துதே’ன்னு சொல்லிக்குவேன். இப்ப சமீபத்தில ஒருத்தர், உங்க பல் வரிசை பிரமாதம்னு சொல்லிட்டார். ஜாலி ஆயிடுச்சு.

**வீட்ல என்ன வளர்க்கறீங்க?**

இப்ப நாலு நாய்க்குட்டி இருக்கு. நாலு பூனைக்குட்டி இருக்கு. ஒரு கிளி புதுசா வாங்கியிருக்கேன். நரி வளர்க்கலாம்னு சின்ன ஐடியா இருக்கு. கொஞ்சம் சம்பாதிச்சதும் யானை வாங்கி வளர்க்கப் போறேன்.

**ரொம்ப நல்ல குணமா இருக்கே உங்களுக்கு. இதெல்லாம் வாங்கி வளர்க்க ஆரம்பிச்சதும் நீங்க எங்க போய்த் தங்குவீங்க?**

கிண்டலா? ஃப்ரண்ட்ஸ் கூட இப்படித்தான் கிண்டல் பண்றாங்க. எனக்கு மிருகங்கள் மேல ரொம்ப காதல் உண்டு. ஆனா தெரு முனைல போகும்போது டீக்கடை பசங்ககூட ‘டேய் வண்டலூர் வருதுடா’ன்னு’ கிண்டல் பண்றாங்க. ஒரு புலி வளர்த்தா இவங்க எல்லாம் அமைதியாயிடுவாங்க.





**உங்க கையில ஒரு லவ் லெட்டர். எதிர்ல ஒரு பிடிக்காத ஆளு. ஒரே நிமிஷத்திலே அதைக் கொடுத்திடணும். இல்ல தலை வெடிச்சுடும்னு சொன்னா என்ன பண்ணுவீங்க?**

தலையைக் காப்பாத்திக்க காதலைக் கொடுக்க முடியுமா? சான்ஸே இல்லை. பிடிச்சாத்தான் லலலலா....

**சரி... உங்களுக்கு வர்ற ஆள் எப்படி இருக்கணும்?**

அழகா இருக்காரா இல்லையான்னு தெரியாது. பார்த்தா என்னமோ பிடிச்சிருக்கேன்னு தோணணும். அவ்வளவுதான். எக்ஸ்ட்ரா கொஞ்சம் மியூசிக். எக்ஸ்ட்ரா கொஞ்சம் கவிதை. எக்ஸ்ட்ரா கொஞ்சம் அறிவு இருந்தா, அவர் கையில எக்ஸ்ட்ராவா சிந்தூரி இருப்பா.

**கடைசியா என்ன சொல்ல நினைக்கறீங்க?**

ஆரம்பத்தில சொல்ல நினைச்சது தான்... வணக்கம்.

- மொக்கராசு



* நிரம்பியுள்ள பொற்றாமரைக் குளம்

திருக்குறள் அரங்கேற்றப்பட்டது இந்தக் குளத்தின் கரையில்தான். தகுதியான இலக்கியங்களைத் தாங்கியும், தகுதியற்றவற்றை மூழ்கச் செய்தும், சங்கப் பலகை தீர்ப்பு வழங்கியது இந்தக் குளத்தில்தான்.

இந்திரன் கடம்பவனத்தை அடைந்தபோது, அங்கே கண்ட இறைவனைப் பூஜிக்க பொற்றாமரை மலர்கள் ஈந்த தடாகம் இது.

# பொற்றாமரை பூக்குமோ?

தனஞ்செயன் என்ற வணிகர் மூலலிங்கமாகிய சொக்கலிங்கத் திருமேனியைக் கண்ட நீர்ச் சுனையும் இதுதான்.

இன்று பொற்றாமரைக் குளக் கரையில் ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி தினத்தன்று முழு நிலாக் கவியரங்கம் தவறாமல் நடக்கிறது. இங்கு அரங்கேற்றப்படும் கவிதைகளில் தரமானவற்றைப் புத்தகமாகவும் வெளியிடுகிறார்கள்.

கிட்டத்தட்ட வறண்டு காய்ந்து கிடந்த இந்தப் பொற்றாமரைக் குளத்தில், எப்போதும் தண்ணீர் இருக்க என்ன செய்வது என்று யோசித்தது ஆலய நிர்வாகம். மழைநீர் சேமிப்பு என்ற அற்புதம் நினைவுக்கு வர, தெற்குப் பகுதி ஆலய மண்டபங்களில் விழும் எல்லா மழைநீரையும் பொற்றாமரைக் குளத்திற்குத் திருப்பிவிட்டனர். அப்புறமென்ன! கடந்த ஆண்டு ஆறடி உயரத்திற்குத் தண்ணீர். அதில் அழகிய தாமரைகள் பூத்துக் குலுங்கிய காட்சியைக்கண்டு மதுரை மக்களும், சுற்றுலாப் பயணிகளும் பரவசப் பட்டார்கள்.



* பொற்றாமரை பளபளக்க

தாமரைகளுக்கு நடுவே நிஜமாகவே ஒரு பொற்றாமரைப் பூத்திருந்தால் எப்படி இருக்கும்? அவ்வாறு பூக்கச் செய்த பெருமையைத் தட்டிச் சென்றுள்ளது ராஜ் டீவி. நிறுவனம்! இருநூற்று இருபத்தைந்து கிலோ எடையில், முன்னூற்று இருபது இதழ்களோடு உருவாக்கப்பட்ட உலோகத் தாமரைக்கு, இரண்டாயிரத்து ஐந்நூறு கிராம், தங்க முலாம் பூசி குளத்தின் நடுவே பொருத்திவிட்டனர். ஆனால் திடீர் ஏமாற்றம்!

இப்போது அக்டோபரில் பெய்த மழையால் பத்தடி உயரத்திற்குத் தண்ணீர் நிரம்பிவிட, பொற்றாமரை தண்ணீருக்குள் மூழ்கி விட்டது!




மீட்டெடுத்து உரிய இடத்தில் பொருத்த ஏற்பாடுகள் நடந்து வருகின்றன...!

"அடுத்தத் தெரு ஆறுமுகம் போன வருஷம் ஆறடி வேல் குத்திக்கிட்டான். நான் பத்தடி குத்திக்கிறேன் பாரு!" என்று பக்திப் போட்டி நடக்கிறது! திருப்பரங்குன்றத்தில் பங்குனி உத்திரத் திருவிழாவின்போது ஊரே திரண்டு வந்து பார்க்கிறது. மதுரை ஐம்பத்து மூன்றாவது வார்டில் ஒருவர் நீண்ட வேலை அலகு குத்திக் கொண்டுவிட்டார். ஆனால் வேலின் நீளத்தைவிட தெருவின் அகலம் குறைவு. விளைவு! பக்கவாட்டில் நண்டு போல அவர் நகர வேண்டிய இக்கட்டு!



• பத்தடியில வேல்...!

மதுரையை ஒட்டி மாணிக்கவாசகர் பிறந்த திருவாதவூரில் இருக்கிறது திரௌபதை அம்மன் கோவில். இங்கே தீ மிதித்தல் வழிபாடு மிகவும் பிரசித்தம். நூற்றாண்டுகள் பழைமையான இந்தக் கோவிலை அண்மையில் புனரமைத்தது ஊர்க் கமிட்டி. இதில் என்ன விசேஷம் என்கிறீர்களா? இந்தக் கோயிலின் மகா மண்டபத்தை, பல லட்சம் செலவில் கட்டிக் கொடுத்திருப்பவர்கள் இரு இஸ்லாமிய அன்பர்கள். உதுமான் அலி, ராஜா பாய் என்ற இருவரும் இதை விளம்பரப்படுத்திக் கொள்ளவே இல்லை. பார்த்தது கோவில் நிர்வாகம். இருவரது பெயரையும் கோவில் மண்டபத் தூணில் கல்வெட்டாகப் பொறித்து வைத்துவிட்டது. கோவில் கும்பாபிஷேகத்தன்று இருவரது பெயரிலும் விசேஷ அர்ச்சனையும் செய்து நன்றியைத் தெரிவித்தார்களாம் ஊர்க் கமிட்டியினர்.

# பக்தி





• பளிச், பளிச்

இதென்ன குளத்து நீரில் இப்படியொரு கொள்ளை அழகென்று பார்க்கிறீர்களா...? மதுரை மீனாட்சி ஆலயத்திலிருந்து மூன்று கி.மீ. தொலைவில் உள்ள வண்டியூர் மாரியம்மன் தெப்பக்குளம்தான் இது. இதை அமைத்தவர் மாமன்னர் திருமலை நாயக்கர். ஆயிரம் அடி நீளமும், தொள்ளாயிரத்து ஐம்பது அடி அகலமும் கொண்ட இந்த மெகா தெப்பக்குளத்தின் ஒவ்வொரு பக்கத்திற்கும் மூன்று அழகிய படித்துறைகள் உண்டு. கருங்கல் சுவர்களோடு, நடுவில் சோலை சூழ்ந்த நீராழி மண்டபத்தோடும் மதுரைக்கு அழகூட்டும் இந்த தெப்பக்குளத்தில்தான், ஆண்டு தோறும் தைப்பூச இரவன்று மீனாட்சி சுந்தரேஸ்வரர் நீரில் பவனி வரும் தெப்பத் திருவிழா நடக்கிறது.

பிறகேன் வண்டியூர் மாரியம்மன் தெப்பக்குளம் என்று பெயர் வந்தது? வண்டியூர் மாரியம்மன் கோவில் இக்குளத்தின் வடகரையில் இருப்பதால் இப்படியொரு பெயர்.

திருப்பரங்குன்றத்திற்கு வருகிறவர்கள், முருகப் பெருமானின் சந்நிதிக்கு நேர் பின்புற மலையடிவாரத்தில் இருக்கும் குடைவரைக் கோவிலுக்குச் செல்வதே இல்லை. விரும்பினாலும் செல்ல முடியாதபடி பூதர்

கள் மண்டி, பாதை முற்றிலு மாக அடைபட்டு விட்டது. முதலில் குடைவரைக் கோவி லாகவும், பின்னர் சமணர் கள் தியானம் செய்யும் குகை யாகவும் இருந்த ஸ்தலம். சமணர்கள் கழுவேற்றப்படு வது, துரத்தியடிக்கப்படுவது போன்ற காட்சிகள் இன்னும் இந்த குடைவரைக் கோவி லில் ஓவியங்களாய் இருக் கின்றன. இப்போதைக்கு இங்கே வந்து போகும் சுற்று



* அந்த மண்டபம்

சரி! நரியை யார் பிடித்து வருகிறார்கள்? மதுரையை அடுத்த 'அனுப்பானடி' கிராம மக்கள்தான்! 'அனுப் பும் நரி' என்றிருந்த இந்த கிராமத்துப் பெயர் மருவி, அனுப்பானடி ஆகிவிட்ட தாம். நரியைப் பிடித்து அனுப்பும் அனுப்பானடி கிராமத்திற்குக் கோவில் மானியம் வழங்கப்பட்டு வருகிறது.

## விளக்கெண்ணெயுடன்



* முகத்தில் விழிக்க



* சுற்றுலாப் பயணிகள்..?!

# மணம்..!



* குளத்து நீரில் கொள்ளை அழகு

லாப் பயணிகள் குரங்குகளும் மயில்களும் மட்டும்தான்.

**மீ**னாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் விழாக்களில் அறுபத்து நான்கு திருவிளை யாடல்கள் பாவனையாக நடத்தப்படும். அதி லொன்று நரியைப் பரியாக்கிய திருவிளை யாடல். இந்த விழா நடக்கும்போது, உண்மை யான நரியொன்றையே பிடித்து கூண்டில் அடைத்து ஊர்வலமாகக் கொண்டு வருவார் கள். இந்த நரியின் முகத்தில் விழிக்க பக்தர் கள் அடித்துப் பிடித்து வந்து விடுவார்கள்.

தயிரைக் கலந்து தேரின் மீது எறிந்ததால் கறுப் பாகிப் போயிருந்தது மீனாட்சியின் தேர். 1658ல் செய்யப்பட்டு, கிட்டத்தட்ட மூன் றரை நூற்றாண்டு அழுக்குகளைச் சுமந்து வலம் வந்த தேர், சமீபத்தில் சுத்தமாக்கப்பட் டது. எப்படி இத்தனை பளிச்சென்று கழுவி விட்டார்கள்? கம்பிரஸர் மூலம் குறுமணல் கொஞ்சம், இரசாயனக் கலவை கொஞ்சம் கலந்து பீய்ச்சியடித்ததில், இப் போது புத்தம் புதுத் தேராகிவிட்டது.

- தகவல்,
படங்கள் :
**இரா.கல்யாணசுந்தரம்,**
**மதுரை-9**



# ஈரக்காற்று

ஜி.ஆர்.சுரேந்தர்நாத்

சர்டிஃபிகேட் வெரிஃபிகேஷன் முடிந்து எனது மகளுடன், அந்தப் பெரிய ஹாலிலிருந்த பாலிமர் நாற்காலியில் அமர்ந்தபொழுதுதான், ஸ்வர்ண சித்ராவைக் கவனித்தேன். மனத்திற்குள், பட்டென்று ஒரு பூமொட்டு வெடித்து, வாசனை பரவியது.

ஸ்வர்ணசித்ராவிற்கு அருகில் உட்கார்ந்திருந்த பையன், அவளுடைய மகனாகத்தான் இருக்க வேண்டும். முகத்தில் ஸ்வர்ண சித்ராவின் ஜாடை, அப்பட்டமாகத் தெரிந்தது.

இருபது வருடங்கள், அவளுடைய அழகில் சின்னஞ்சிறு சேதாரங்களை விளைவித்திருந்தது. இருப்பினும், ஸ்வர்ணசித்ராவின் தலைக்கு மேல் மட்டும், தனியாக ஆயிரம் நட்சத்திரங்கள் உதித்தது போல், முகத்தில் ஒரு பிரகாசம் இருக்கும். அந்தப் பிரகாசம் இப்பொழுதும் இருந்தது. காலம் ஒரு கண்ணாடியைக் கொண்டு வந்து, அவள் மூக்கில் மாட்டியிருந்தது. முன்நெற்றியில் விழுந்து புரண்ட, இலேசான நரைமுடி. சற்றே சதை போட்டிருந்தாள். மற்றபடி அப்படியே தான் இருந்தாள்.

"அப்பா... வெக்கன்ஸி பொஸிஷன்ப்பா..!" என்று என் மகள், எலக்ட்ரானிக் ஸ்க்ரீனைக் காட்டினாள்.

அதில் கல்லூரியின் பெயர்களும், காலியாக இருக்கும் பாடங்கள் குறித்த விவரங்களும் ஓடிக் கொண்டிருந்தன.

''நீ நோட் பண்ணு'' என்று மகளிடம் கூறிவிட்டு, மீண்டும் ஸ்வர்ண சித்ராவைக் கவனித்தேன்.

ஊரில் இரண்டு வருடம், அவள் படித்த கல்லூரியில் எம்.காம்., படித்திருக்கிறேன். கிட்டத்தட்ட நூறு கவிதைகள், அவளைப் பற்றி எழுதியிருப்பேன். ஆனால் ஒரு வார்த்தை கூட, அவளிடம் பேசியதில்லை. பலமுறை, அவளிடம் பேசவேண்டுமென்று நெருங்கி... தயங்கி... பின்வாங்கி... கடைசி வரையிலும், பேச முடியாமலே போயிற்று.

என்றைக்கோ விட்டுப்போனதை, இன்று சரி செய்து விடவேண்டும். கவுன்சிலிங் முடிந்து செல்வதற்குள், இரண்டு வார்த்தையாவது அவளிடம் பேசிவிட வேண்டும்.

ஸ்வர்ணசித்ராவின் முகத்தில், அந்த ஆர்ப்பாட்டமற்ற, அமைதியான அழகு இன்னும் இருந்தது. இந்த அழகுதானே என்னைக் கிறங்கடித்து... ஏராளமான கவிதைகளை எழுத வைத்து... அந்தக் கவிதைகள் மாதந்தோறும் வெளிவரும் கல்லூரி இலக்கிய மலரில் பிரசுரமாகி... என்னைக் கல்லூரியில் பிரபலமான கவிஞனாக்கியது.

என் சொந்த ஊரிலிருந்த, அந்தப் பிரபலமான கல்லூரியில், நான் எம்.காம்., சேர்ந்து, ஒருவாரம் கழித்துத்தான், ஸ்வர்ணசித்ராவைப் பார்த்தேன்.

நான் கல்லூரி நூலகத்தை விட்டு, வெளியே வந்தபொழுது, மழை பெய்து கொண்டிருந்தது. திடீரென்று கோடை மழை. மழையை வேடிக்கைப் பார்த்தபடி, வராண்டாவில் நின்று கொண்டிருந்தேன். பெரிய மின்னல் வெளிச்சத்துடன், இடி இடித்த பொழுது, நனைந்தபடி ஓடிவந்து, வராண்டாவில் ஒதுங்கினாள் அந்தப் பெண். அலட்சியமாக அவளைப் பார்த்த நான், அடுத்த வினாடி அசந்து போனேன்.

அவள் இலேசாகக் குனிந்து, தனது ஈரப் புடைவையைப் பிழிந்தபொழுது, முன்புறம் வந்து விழுந்த ஈரக்கூந்தலை, அவள் பின்புறம் தூக்கிப் போட்டபொழுது, தெறித்து விழுந்த நீர்த்துளி ஒன்று என் முகத்தில் பட... எனக்குச் சிலிர்த்துப் போனது. என்னை அறியாமல் என் மனதிற்குள் கவிதை ஊறியது.

நான் நிறையக் கவிதைகளைப் படித்திருந்தாலும், ஸ்வர்ணசித்ராவைப் பார்க்கும்வரை, கவிதை எழுத வேண்டும் என்றெல்லாம் தோன்றியதில்லை. ஆனால் அவளைப் பார்த்த முதல் கணத்தில், என்னை அறியாமல், எனது முதல் கவிதை பிறந்தது.

மறுநாள் அந்தப் பெண்ணைப் பற்றி, என் நண்பன் செல்வத்திடம் விசாரித்தேன்.

"மனுஷனாடா நீ... ஒரு வாரமா பசங்க எல்லாம் பேயடிச்ச மாதிரி திரியறாங்க. நீ சாவகாசமா வந்து யாருன்னு விசாரிக்குற...?"

என்றான் செல்வம்.

"என்னையும் பேயடிச்சுடுச்சு."

"எங்க?"

"நேத்து லைப்ரரி வராண்டால. பாத்து, ஆடிப்போய்ட்டேன். யாருடா அது?"

"பேரு ஸ்வர்ணசித்ரா. எம்.எஸ்ஸி. கெமிஸ்ட்ரி ஃபர்ஸ்ட் இயர். திருவாதிரை நட்சத்திரம். மிதுன ராசி. பாட்டு க்ளாஸ் போறா. இப்பத்தான் சரளி வரிசை முடிச்சுட்டு, ஜண்ட வரிசைக்குப் போயிருக்கா. மீனாட்சி டைப்ரைட்டிங் இன்ஸ்ட்டிட்டியூட்ல இங்கிலீஷ் ஹையர் போறா. காலைல ஏழு டு எட்டு, பசங்க கும்பல் இன்ஸ்ட்டிட்டியூட்ல அம்முது. அவங்க முன்னோர்கள், சரபோஜி ராஜா காலத்துல, தஞ்சாவூர் அரண்மனைல வேல செஞ்சதா..."

"டேய்... டேய்... யாருன்னு ஒரே ஒரு வார்த்தைதான் கேட்டேன்."

"ஒரே வாரத்துல, பசங்க எல்லாத்தையும் கலெக்ட் பண்ணிட்டாங்கல்ல... வேற ஏதாச்சும் தகவல் வேணுமா?"



"அந்த எழுத்தாளருக்கு ஏகப்பட்ட தர்ம அடி விழுந்து உடம்பெல்லாம் காயம்!"

"ஏன் அப்படி?"

"இளம் எழுத்தாளர்களில் இவர் 'கவனிக்கப்படவேண்டியவர்'னு ஒரு பழம்பெரும் எழுத்தாளர் சொல்லியிருந்தாராம்!"

\- என்.கே. பாலசுப்ரமணியன்

"போதுண்டா சாமி... இவ்வளவு அழகா கூட, ஒரு பெண் இருக்க முடியுமா செல்வம்? பார்த்தவுடனே கவிதையெல்லாம் எழுத ஆரம்பிச்சுட்டேன்."

"அப்படிப் போடு அருவாள... கவிதையக் காட்டு."

நான் அந்த கவிதைத்தாளை செல்வத்திடம் கொடுக்க... அவன் என்னிடம் ஒன்றும் சொல்லாமல், அந்தக் கவிதையை, கல்லூரி இலக்கிய மலர் ஆசிரியரிடம் கொடுக்க... அது அடுத்த மாத மலரில் பிரசுரமானது. நிறைய மாணவர்கள், "யாரு மகேந்திரன்?" என்று வகுப்பிற்கு வந்து, என் கவிதையைப் பாராட்டிவிட்டுச் சென்றார்கள்.

பிறகு நான் ஸ்வர்ணசித்ராவை கேன்டீனில், லைப்ரரியில், கிரௌண்டில்... என்று , பார்க்கும்பொழுதெல்லாம், கவிதை எழுதி விடுவேன். அவற்றில் சிறப்பாகத் தோன்றுபவற்றை, கல்லூரி மலருக்கு அனுப்புவேன். மாதா மாதம் ஸ்வர்ணசித்ராவைப் பற்றி நான் எழுதிய கவிதைகள், பிரசுரமாகிக் கொண்டே இருந்தன.

முதலாம் ஆண்டு முடிந்து, இரண்டாம் ஆண்டும் நாட்கள் ஓடிக் கொண்டேயிருந்தன.

கல்லூரிக் கலைவிழா நடந்தபொழுது, ஒரு வாய்ப்புக் கிடைத்தது. கலைவிழா மேடையில், ஸ்வர்ணசித்ரா பாடினாள். அப்பொழுது "சலங்கை ஒலி" திரைப்படப் பாடல்கள், ஹிட்டாகியிருந்த நேரம். மாம்பழ நிற பட்டுப்புடைவை அணிந்து கொண்டு,

*'மௌனமான நேரம்*
*இள மனதில் என்ன பாரம்?*
*மனதில் ஓசைகள்...*
*இதழில் மௌனங்கள்...'*

என்று ஸ்வர்ணசித்ரா தன் இனிமையான குரலில் பாட... சபையே மௌனமானது. ஒரு சின்ன சலசலப்பு... இருமல் சத்தம்... தொண்டைக் கனைப்பு... எதுவும் இல்லை.

எனக்கு உலக இயக்கமே நின்றுபோய், ஸ்வர்ணசித்ராவின் குரல் மட்டுமே, காற்று வெளியை நிரப்பிக் கொண்டிருப்பது போல், ஒரு பிரமை. அவள் பாடி முடித்தவுடன், எழும்பிய கைத்தட்டல் சத்தம் அடங்க, வெகு நேரமானது.

அதே மேடையில், நான் கவிதைப் போட்டியில், முதல் பரிசு பெற்றிருந்தேன்.

செல்வம் என்னிடம், "இதாண்டா நல்ல சான்ஸ். நீ ப்ரைஸ் வாங்கியிருக்க. பார்த்துருப்பா. அவளும் பாட்டுப் பாடினா. போய் அறிமுகப்படுத்திகிட்டு, நல்லா பாடினீங்கன்னு ரெண்டு வார்த்தை பேசிட்டு வந்துடு."

"வேண்டாம்டா... தயக்கமா இருக்கு."

"என்ன தயக்கம்?"

"அந்தப் பிரமாண்டமான அழகுக்குப் பக்கத்துல போகவே கூச்சமா இருக்குடா."

"அடச்சீ வா..." என்று செல்வம் என் கையைப் பிடித்து, இழுத்துக் கொண்டு சென்றான்.

நாங்கள் மெதுவாக ஸ்வர்ணசித்ராவை நோக்கிச் சென்றோம். அவளைச் சுற்றி ஒரே கும்பல். அவள் நன்றாகப் பாடியதாக அனைவரும் பாராட்டிக் கொண்டிருந்தார்கள்.

எனக்கு அவளருகில் நெருங்க நெருங்க படபடப்பு அதிகமானது. ஏதோ ஒரு தயக்கம்...

கடைசி வினாடியில், பேச வேண்டாம் என்று முடிவெடுத்து, செல்வத்திடமிருந்து, என்னை வலுக்கட்டாயமாக விடுவித்துக் கொண்டு திரும்பி விட்டேன்.

பிறகு ஸ்வர்ணசித்ராவிடம் பேசும் சந்தர்ப்பம் கிடைக்கவே இல்லை. இரண்டாம் ஆண்டும் முடிந்து, கடைசி நாள், கடைசிப் பரீட்சை முடிந்து, பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தோம்.

திடீரென்று ஸ்வர்ணசித்ரா தன் தோழிகளுடன், பஸ் ஸ்டாப்பை நோக்கி வர... என் அருகிலிருந்த செல்வம் பரபரப்பானான்.

"போடா... இப்பவாச்சும் போய்ப் பேசுடா... கடைசி நாள்."

"என்னடா பேசறது?"

"ஏதாச்சும் கேளுடா. டைம் என்னன்னு கேளு."

"என்கிட்ட வாட்ச் இருக்கே."

"அறிவுகெட்ட முண்டம்... வாட்ச்சக் கழட்டி பாக்கெட்ல போட்டுவிட்டுப் போய்க் கேளுடா."

நான் தயங்கித் தயங்கி, அவளருகில் சென்றேன். மிகவும் கஷ்டப்பட்டு, மனத்தை தைரியப்படுத்திக் கொண்டு தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ஆரம்பிக்கும் பொழுது தான் கவனித்தேன். அவள் கையில் வாட்ச் இல்லை. பேசாமல் திரும்பிவிட்டேன்.

ஸ்வர்ணலதா பஸ் வந்தவுடன் சென்றுவிட, 'நீ நாசமாப் போக" என்று செல்வம் தலையில் அடித்துக் கொண்டான்.

செல்வம் கூறியது போல், நான் நாசமாக எல்லாம் போகவில்லை. படிப்பு முடிந்த மூன்றே மாதத்தில் வேலை கிடைத்து, உடனே திருமணமாகி, குழந்தைகள் பெற்று, இதோ... மகளோடு கவுன்சிலிங்கிற்கு வந்திருக்கிறேன்.

காலப்போக்கில், என் நினைவு அடுக்குகளின் அடித்தட்டில் புதைந்து போன ஸ்வர்ணசித்ரா... ஒரு காலத்தில், ஈரக்காற்றாய் என்னைச் சில்லிட வைத்த ஸ்வர்ண சித்ரா... இதோ கண்முன் அமர்ந்திருக்கிறாள். இன்றாவது பேசிவிட வேண்டும் என்று எழுந்தேன்.

அப்பொழுது பார்த்து, என் மகளுடைய நம்பரைக் கூறி, ஒரு பெண் அழைக்க... எனக்கு இன்றும் பேச முடியாமல் போய்விடுமோ என்ற பயம் வந்தது. நான் மகளுடன் கவுன்சிலிங் அறைக்குச் செல்கையில் அந்தப் பெண் அடுத்த நம்பரைக் கூற, ஸ்வர்ணசித்ரா எழுந்தாள்.

என் மகள் கேட்ட காலேஜ், கேட்ட சப்ஜெக்ட் கிடைத்தது. ஐயாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கான ட்ராஃப்டைக் கொடுத்து, அட்மிஷன் கார்டைப் பெற்றுக் கொண்டு, நான் வெளியே வர, அடுத்த சில வினாடிகளில் ஸ்வர்ணசித்ராவும் வெளியே வந்தாள்.

"அவங்க என்கூட காலேஜ்ல படிச்சவங்க. ஒரு நிமிஷம், பேசிட்டு வந்திடுறேன்" என்று என் மகளிடம் கூறிவிட்டு, ஸ்வர்ணசித்ராவின் அருகில் சென்றேன்.

இப்பொழுதும் எழுந்த தயக்கத்தை, உறுதியாகத் தள்ளிவைத்துவிட்டு, 'நீங்க... ஸ்வர்ண சித்ராதானே?" என்று என் இருபது வருட மௌனத்தை உடைத்தேன்.

"ஆமாம்... நீங்க..." என்று ஸ்வர்ணசித்ரா முதன் முதலாக என்னுடன் பேசியபொழுது, எழுந்த உணர்ச்சியை, இன்னதென்று என்னால் வகைப்படுத்த முடியவில்லை.

"கட்சி மாநாட்டில் ஒரே கலாட்டா!"
"ஏன்? கட்டுக்கடங்காத கூட்டமா?"
"கட்சிக்கடங்காத கூட்டம்!"
– பம்மல் நாகராஜன்



"நான் மகேந்திரன்..." என்று ஊரில், கல்லூரியில் படித்த விபரத்தைக் கூறினேன்.

"மகேந்திரன்..." என்று இழுத்தவாறு யோசித்த ஸ்வர்ணசித்ரா, "நீங்க காலேஜ் மேகசின்ல, நிறைய கவிதை எழுதியிருக்கீங்கல்ல..."

"ஆமாம்" என்றேன் சந்தோஷத்துடன். தொடர்ந்து, 'நீங்க கூட காலேஜ் கல்ச்சுரல்ஸ்ல, "மௌனமான நேரம்" பாடினீங்களே... ஞாபகமிருக்கா?" என்றேன்.

"ம்...குட் ஓல்ட் டேஸ்..." என்ற ஸ்வர்ணசித்ராவிடம், மேலும் சில நிமிடங்கள் குடும்பம், குழந்தைகள் குறித்து பேசிவிட்டு, விடை பெற்றுக் கொண்டேன்.

"என்னப்பா... திடீர்னு முகத்துல ஒரு சந்தோஷம்...?" என்றாள் என் மகள்.

"நீ கேட்ட காலேஜ் கிடைச்சதில்ல... அந்த சந்தோஷம்தான்" என்றேன். ○

“ விரைவில் வேறொரு கட்சிக்கு ஆதரவாளர்களுடன் அணி மாறப் போகிறார்” என்றெல்லாம் முன்னாள் சபாநாயகர் பி.டி.ஆர். பற்றி பல பரபரப்புத் தகவல்கள். கிட்டத்தட்ட ஓராண்டுக்கும் மேலாக மீடியாவின் பார்வையிலிருந்து விலகி இருந்தவரை அவரது சொக்கிக்குளம் வீட்டில் சந்தித்தோம். கல்கிக்காக, மௌனம் கலைத்து மனம் திறந்தார் :

> “நான் புறப்பட்டுப் போன நான்காவது நாள் படுகொலை செய்யப்பட்டார். அவர் என்னோடு வந்திருந்தால் கொலை வெறியர்களிட மிருந்து தப்பியிருப்பாரோ என்று மனம் கலங்குகிறது.”

**இத்தனை அமைதியாக இருக்கிறீர்களே! அரசியலிலிருந்து விலகி விட்டீர்களா?**

அப்படியெல்லாம் இல்லை. கட்சி நடைமுறையில் சில, பல கருத்து வேறுபாடுகள். அதனால் ஒதுங்கி இருக்கிறேன்.

அதற்கு முதன்மையான காரணம், நான் அமெரிக்காவில் இருந்தபொழுது, எனது நெருங்கிய நண்பர் தா.கி. படுகொலை செய்யப்பட்டார். அதற்கு யார் காரணமென்று எனக்குத் தெரியாது. ஆனால் அவரது மறைவு என்னை மனத்தளவில் பெரிதும் பாதித்திருக்கிறது.

**கடைசியாக தா.கி.யை எப்போது சந்தித்தீர்கள்?**

அவரது மகனும், எனது மகனும் அமெரிக்காவில் ஒரே ஊரில் வசித்து வருகிறார்கள். கடந்த முறை நானும் எனது மனைவியும் அமெரிக்காவுக்குப் புறப்பட்டபோது, எங்களை வழியனுப்ப மதுரை ரயில் நிலையத்திற்கு வந்திருந்தார். என்னுடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார். நீங்களும் எங்களோடு அமெரிக்காவுக்கு வந்துவிட வேண்டியதுதானே' என்று கேட்டேன். 'கட்சித் தேர்தலை முடித்துவிட்டு வந்து விடுகிறேன்' என்றார். ஆனால் நான் புறப்பட்டுப் போன நான்காவது நாள் படுகொலை செய்யப்பட்டார். அவர் என்னோடு வந்திருந்தால் கொலை வெறியர்களிடமிருந்து தப்பியிருப்பாரோ என்று மனம் கலங்குகிறது.

**தென் மாவட்டங்களில் தி.மு.க.வுக்குத் தொய்வு ஏற்பட்டிருப்பதாகச் சொல்கிறார்களே?**

கட்சியில் தொய்வு ஏற்பட்டிருப்பது உண்மை. தா.கி. ஒரு மூத்த தலைவர். அவரது படுகொலை, தொண்டர்கள் மத்தியில் அதிருப்தியை உண்டு பண்ணியிருக்கிறது. அவரது மறைவு கட்சிக்கு மிகப்பெரிய பலவீனம்.

**நீங்கள் தி.மு.க.விலிருந்து விலகி வேறொரு கட்சியில் சேரப் போவதாக வரும் தகவல்கள் உண்மையா?**

கட்சியிலிருந்து விலகினால் வீட்டுக்குப் போவேனே தவிர, வேறொரு கட்சிக்குப் போக மாட்டேன். எனது குடும்பத்திற்குக் கடைசிவரை ஒரே கட்சியில் இருந்தவர்கள் என்ற மரியாதை இருக்கிறது. அதை நான் கெடுத்துவிடமாட்டேன். தவிர, கட்டாயம் அரசியலில் இருந்தாக வேண்டும் என்கிற அவசியமும் எனக்கில்லை. மூன்று முறை சட்டமன்ற உறுப்பினர், ஒரு முறை சபாநாயகர், ஒருமுறை எம்.எல்.சி. என்று பல பொறுப்புகளை வகித்து, தூய்மையான மக்கள் பணி செய்திருக்கிறேன். ஆனால் கட்சியில் என்னை நம்பி நூற்றுக்கணக்கான நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்களை என்னால் பாதுகாக்க முடியவில்லை என்ற வருத்தம் இருக்கிறது. இது அரசியல் வாழ்க்கையில் சகஜம்.

**மதுரையில் நடந்த தி.மு.க. நிதியளிப்புப் பொதுக் கூட்டத்தில் நீங்கள் கலந்து கொள்ளவில்லை. சுவரொட்டியில்கூட உங்கள் பெயர் இல்லை...?**





## மனம் திறக்கிறார் பி.டி.ஆர்.

# "தென் மாவட்டங்களில் தி.மு.க.வுக்குத் தொய்வுதான்!"

மதுரையில் நடந்த பொதுக் கூட்டத்தில் எனது பெயரைப் போட வேண்டாம் என்று நான்தான் சொன்னேன். மேடையில் நான் இருந்தால், மறைந்த தா.கி.யைப் பற்றிப் பேச வேண்டியிருக்கும். அதனால்தான் தவிர்த்தேன். ஆனால் கூட்டம் முடிந்தபிறகு மதுரையில் கலைஞர் ஒரு நாள் தங்கி இருப்பதாகத்தான் நிகழ்ச்சி நிரல். நானும் மறுநாள் அவரைச் சென்று சந்திக்கலாம் என்று இருந்தேன். ஆனால் கூட்டம் முடிந்த இரவே கலைஞர் புறப்பட்டுவிட்டார்.

**தி.மு.க.வின் அடுத்த தலைமையாக ஸ்டாலின் முன்னிறுத்தப்படுவதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

அவர் தலைவராவதில் கருத்து வேறுபாடு கிடையாது என்பதைப் பல மாதங்களுக்கு முன்பே ஒரு பேட்டியில் சொல்லியிருந்தேன். தென் மாவட்டங்களில் அவருக்கு ஆதரவு இருப்பதையும் சொல்லியிருந்தேன். இப்போதும் அதையேதான் சொல்லுகிறேன்.

**தென் மாவட்டங்களில் தி.மு.க. தொண்டர்களின் மனக்கொதிப்பைப் போக்க என்ன வழி?**

தலைமைதான் பார்த்துச் செய்ய வேண்டும். தா.கி.க்கு ஒரு நினைவிடம் எழுப்புவதில் மும்முரமாக இருக்கிறேன். அவர் அடக்கம் செய்யப்பட்ட இடத்திலேயே நினைவு மண்டபம் கட்டுகிறோம். அதற்கான வரைபடம் தயாராகிவிட்டது. முதல் நன்கொடையாக அமெரிக்காவிலிருந்து எனது மகன் ரூபாய் ஐம்பதாயிரம் அனுப்பியிருக்கிறான். அங்கே ஆழ் குழாய்க் கிணறும் தோண்டப்பட்டுவிட்டது. விரைவில் கட்டுமானப்பணிகள் தொடங்கவிருக்கின்றன.

**கடந்த சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.வின் தோல்விக்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?**

1996 முதல் 2001 வரையிலான தி.மு.க. ஆட்சியைப் போல ஒரு மக்கள் நல ஆட்சியை அதற்கு முன்பு தமிழகம் கண்டதில்லை என்பதுதான் எனது மதிப்பீடு. காரணம் அவ்வளவு மக்கள் நலப் பணிகள் நிறைவேற்றப்பட்டன. மதுரை மாநகருக்கு மட்டும் ரூபாய் நாநூறு கோடி ஆக்கப் பணிகளுக்காகச் செலவிடப்பட்டது. இத்தனை செய்தும் தி.மு.க. தோற்றுப் போனதற்குக் காரணம், மக்களின் அதிருப்தி இல்லை. எல்லா அரசியல் கட்சிகளும், ஓரணியில் திரண்டதுதான்.




# புக் பேங்க்

**விஜயபாரதம்:**

'நல்லவற்றை வளர்ப்பதும் அல்லவற்றைக் களைவதுமே தர்மம் வளர வழிகள். அதில் தர்ம விரோதங்களை அழிப்பதே முக்கிய நோக்கம்' என்ற முகவுரையுடன் தொடங்குகிறது இம்மலர். ஆன்மிகத்தின் 'சங்கநாதம்' சற்றுத் தூக்கலாகவே ஒலிக்கும் கட்டுரைகள், நேர்காணல்கள், கதைகள், கவிதைகள், அரசியல், சட்டம், தொழில், இந்துமத வழிபாட்டு முறைகள் - அதன் சாதக பாதகங்கள் என்று பல இதழ்த் 'தாமரை'யாய் மலர்ந்திருக்கிறது விஜயபாரதம். உடன் ஆர்.எஸ்.எஸ் தலைவரின் விஜயதசமி பேருரை இந்துத்வாவையும் சகோதரத்துவத்தையும் வலியுறுத்துகிறது.

**விஜயபாரதம், பாரதிய கலாசார சமிதி டிரஸ்ட், 12. எம்.வி. தெரு, சேத்துப்பட்டு, சென்னை - 31, விலை. ரூ.30/-**

**அமுதசுரபி**

இலக்கிய உலகைக் கலக்கிய புலிகளெல்லாம் எலிகளாகி வியாபார வளைகளுக்குள் பதுங்கி மறைந்து போனாலும், தரம் இறங்காமல் நிற்கும் வரம் வாங்கி வந்த இரண்டொரு இதழ்களில் அமுதசுரபியும் ஒன்று. இது இலக்கியம், இது இறை வழிபாடு, இது வரலாறு, இது வாழ்க்கை, இது காவியம், இது கவிதை - என வகுத்து, பகுத்து, தொகுத்துத் தருவதில் வற்றாத சுரபியென்று மலர்ந்திருக்கிறது அமுதசுரபி மலர். அறிஞர்களின் கட்டுரைகளும், ஓவியர்களின் படைப்புகளும், கவிஞர்களின் கவிதைகளும், வண்ணப் படங்களுமாய் இலக்கிய மணமும், கனமும் நிறைந்து பூத்திருக்கிறது.

**ஸ்ரீராம் அறக்கட்டளை, A.7 2வது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை 600 102, விலை ரூ. 60/ -**

**ஆனந்தவிகடன்**

விகடன் என்றாலே ஆனந்தம்தான். தீபாவளிக்கு அது பேரானந்தமாயிருக்கிறது. செட்டி நாட்டு விருந்து போலத் தொட்டுக் கொள்ளவே பதினெட்டு வகை. ஆன்மிகமும், அருளமுதமும் மையமாக, கவிதை, பேட்டி, சினிமா, கதைகள் என்று வகைக்குக் கொஞ்சம், அந்த வகைகளுக்குள் வகை வகையாகப் பல சுவை பேதம் என விருந்து படைக்கிறது. அந்தநாள் ஞாபகங்களை அலசுகிற ஜாம்பவான்களும் இருக்கிறார்கள்; இந்தநாள் இளமைத் துள்ளல்களை இசைப்பவர்களும் இருக்கிறார்கள். சிரிப்புத் துணுக்குகளில் மட்டும் சுவை குறையாவிட்டாலும், அதிகம் அந்தக் காலமே தெரிகிறது. (ரெங்குடு, சிங்காரவேலுவெல்லாம் எங்கே போய்விட்டார்கள்?) எந்தப் பக்கத்திலிருந்து பிரித்து ஆரம்பித்தாலும் அப்படியே வாசிப்பைத் தொடரச் செய்கிற சுவாரசியம் ஊறிக் கிடக்கும் தீபாவளி மலர்.

**ஆனந்தவிகடன், 757, அண்ணா சாலை, சென்னை 600 002, விலை ரூ. 99/-**

**கலைமகள்**

'யார் பாக்கியசாலி?' என்ற கேள்விக்கு சிருங்கேரி ஜகத்குரு ஆன்மிக விடையளிக்கிறார். என்றாலும் தீபாவளி மலர்கள் வாசிக்கக் கிடைத்தவர்களே பாக்கியசாலிகள். அதிலும் கலைமகள் தீபாவளி மலர் கிடைக்கப் பெற்றவர்கள் அதிபாக்கியசாலிகள். அன்னபூரணியுடன் தொடங்கி, காஞ்சி பரமாச்சார்யார்களின் அருளமுதங்களுடன் அருள் மணம் கமழ்கிறது. டாக்டர் வேங்கட சுப்ரமணியம், திருப்பூர் கிருஷ்ணன், மூத்த எழுத்தாளர்களின் எழுத்துகள் இலக்கிய மணத்தையும் கூட்டுகின்றன. என்றும் இலக்கியத் தரத்தைக் காக்கும் ஓரிரு இதழ்களில் கலைமகளும் ஒன்று என்று மீண்டும் நிரூபித்திருக்கிறது தீபாவளி மலர்.

**கலைமகள், 1. சமஸ்கிருதக் கல்லூரித் தெரு, (ராயப்பேட்டை முதல் சந்து), சென்னை-4, விலை ரூ.70/-**

**- விஷ்வக்**

‘மிகச் சிறு வயதில் போடப்பட்ட மருத்துவத் தையலின் தழும்பு அது’ என்று டாக்டர் அடித்துச் சொல்லிவிட்டாள்.

‘அங்கே திடீர் வலி ஏதாவது இருந்ததா? வேறு எப்படி அதைக் கண்டு பிடித்தாய்?’ டாக்டர் திரும்பத் திரும்பக் கேட்டு விட்டுத் தான் அனுப்பினாள்.

அவளா கண்டு பிடித்தாள்?

நிவேதனா வெளியே வந்தபோது, நாற்காலிகள் நிரம்பி சிலர் மரத்தடி மேடையில் கைக்குட்டைகளை விரித்திருந்தார்கள். எல்லா வருமானத்தையும் டாக்டர் கணக்கில் காட்டுவாளோ?

‘ஏம்மா, உங்க டோக்கன் நம்பர் என்ன?’ என்று காத்திருந்த ஒரு பெண்மணி துரத்தி வந்தாள்.

நிவேதனா யாரையும் பொருட்படுத்தாமல், கைப்பையிலிருந்து அவன் கொடுத்திருந்த ஃபோன் நம்பரை எடுத்தாள். நடந்து கொண்டே தன் ஃபோனில் எண்களை அழுத்தினாள்.

சாலைக்கு வந்தபோது, ‘ஹாங்’ என்று ஹாரன்களை ஒலித்தவர்களை அலட்சியம் செய்தாள்.

“போனை எடுடா, டேய்!”

ஆனால், ஃபோன் எடுபடும் எல்லைக்கு வெளியே அவன் இருப்பதாக பதில் வந்தது. கோபத்தில் அவள் தரையை உதைத்ததைப் பார்த்து, தெரு நாய் கால் களுக்கிடையில் வாலை



அழுத்திக் கொண்டு ஓடியது.

இன்றைக்கு நான்காவது நாள். திடீரென்று தூக்கிவிட்ட சினிமாவைப் போல் ராஜ்குமார் காணாமல் போய்விட்டான். காலையில் எழுந்ததும் ஜன்னலிலிருந்து பார்த்தாயிற்று. அலுவலகத்திற்கு ஐந்து நிமிடம் முன்னதாகவே புறப்பட்டு வண்டியை வாசலிலேயே வைத்துக் கொண்டு காத்திருந்தாயிற்று. போகும் வழியில் திரும்பித் திரும்பிப் பார்த்து விபத்தாகிவிடக் கூடிய அபாயம் நேர்ந்தாயிற்று. ஆபீஸில் ஒலிக்கும் ஒவ்வொரு போன் மணியிலும் அவனை எதிர்பார்த்தாயிற்று. ஏமாந்தாயிற்று.

அவளுடைய நிழலாய்த் தொடர்ந்து கொண்டிருந்தானே, எங்கே போனான்? அவனைப் பார்த்தே ஆக வேண்டும் என்று மனம் தீவிரமான நேரம் பார்த்து எப்படித் தொலைந்து போனான்? அவன் நினைப்பு வரும் போதெல்லாம் தன்னிச்சையாக விரல் பின் கூந்தலுக்குள் நுழைந்தது. அந்தத் தழும்பைத் தேடி நிரடியது.

"ராஜ்குமார், டேய் ராஜ்குமார், யாரடா நீ? கைக்குக் கூடப் புலப்படாத தழும்பு எப்படி உன் கண்களுக்குப் புலப்பட்டது? என் கூந்தலுக்குள் எப்போது நுழைந்து பார்த்தாய்? திடீரென்று எங்கேயிருந்து முளைத்தாய்? அதேபோல் திடீரென்று எங்கே காணாமல் போனாய்?"

"நிவேத்! நீ நார்மலா இல்லை" என்று அவள் நெற்றியைத் தொட்டுப் பார்த்து தீபக் கூட விசாரித்து விட்டான். ஒரே ஒரு சமயம் அவள் கழுத்தைப் புறங்கையால் அழுத்தி (காய்ச்சலா என்று பார்க்கிறானாம்) கையை அங்கேயே இருத்திக் கொள்ளப் பார்த்தான்.

அப்போதெல்லாம் உலர்ந்த புன்னகையைப் பரிமாறி விட்டு, நிவேதனா தன் இருக்கைக்குத் திரும்பினாள்.

'ஏய், டூர் போறவர் பேரு தினகரன். ராஜ்குமார்னு பேர் எழுதியிருக்கே?'

தப்பாய் எழுதிய விமான டிக்கெட்களை ரத்து செய்ய வேண்டி வந்த போதுதான், அவளுக்குள் அவன் உட்கார்ந்து தின்று கொண்டிருப்பதை முழுவதுமாக உணர்ந்தாள்.

# நான் நிவேதனாமோ?

## 4



நிவேதனா அன்று வீடு திரும்பிய நேரத்தில் சாலையை மறித்து அரசியல் மீட்டிங் துவங்கியிருந்தது. மேடையில் 'சிறை கண்ட சிங்கம்' என்று பெயர் சூட்டப்பட்டு விசில்களாலும், கைதட்டல்களாலும் வாழ்த்தப்பட்ட கட்சிக் கண்மணிக்குத் தலையில் நாற்பதுக்கும் குறைவான முடிகளே இருந்தன.

"இவரு எப்பப்பா சிறைக்குப் போனாரு?"

"அதாச்சுப்பா முப்பது வருஷம். பர்ஸை அடிச்சிட்டு பஸ்லேர்ந்து இறங்கறப்ப போலீஸ் கையில மாட்டிக்கிட்டாரு" என்று சொல்லிவிட்டு நிவேதனாவிற்கு வழி பண்ணிக் கொடுத்தவன், "மியூஸிக் ட்ரூப்பு ஆளுங்கள்ளாம் பின்னால இருக்காங்க' என்று வழி காட்டினான். அவள் இசைக்குழுவைச் சேர்ந்தவள் இல்லை என்று அவனுக்கு விளக்கிக் கொண்டிருக்கவில்லை.

ஸ்கூட்டியிலிருந்து இறங்கிவிட்டாள். இப்போது அவளுக்கு இருக்கும் மனநிலையில், யார் விரல்களையாவது நசுக்கி விடுவாள் என்ற அச்சம்.

சிறை கண்ட சிங்கத்திற்குப் பொன்னாடை போர்த்தி, அவர் மேடையிலிருந்து இறங்கும் இடத்தில் அது உருவி மடிக்கப்பட்டு, பின் வழியாக மேடைக்குத் திரும்பிக் கொண்டிருந்தது. டெம்போவிலிருந்து இசைக்

குழுவின் டமாரங்கள் இறக்கப்பட்டுக் கொண்டிருந்தன. சூரிதார் போட்ட பாடகி காதுவளையங்களைச் சரி பண்ணிக் கொண்டிருந்தாள். டை கட்டிய பாடகன் ஒற்றை விரலை காதில் அடைத்து ஒத்திகை பாடிக் கொண்டிந்தான். மடக்கு நாற்காலியில் கிபோர்டு உடை அவிழ்ந்து கிடந்தது.

நிவேதனா அவர்களை அசுவாரசியமாகப் பார்த்தாள். கல்லூரிக் காலத்தில் அவள் ஏறிய மேடைகளும் கிடைத்த விசில்களும் நினைவில் உரசின. சின்னச் சின்ன ஆசையை எத்தனை நூறு தடவைகள் முழங்கியிருப்பாள்! கிடைத்த கோப்பைகளை அறுந்த பொத்தான்களைப் போட்டு வைக்கவும், இங்க் ஊற்றி வைக்கவும்தான் பயன்படுத்தியிருக்கிறாள்.

'நிவி, இசைக் கடவுள்தான் நம்மை சேர்த்து மேடை ஏத்தியிருக்கு. நீயும் நானும் ஜோடியா இந்த உலகத்தையே கலக்கி வருவோம். எங்க ஊர் அம்மன் முன்னால மாலை மாத்திக்கலாம்' என்று குழுவிற்குப் பொறுப்பேற்றிருந்த கைலாஷ் சொன்ன தினத்திலேயே, அவனையும், மேடை ஏறுவதையும் விட்டுவிட்டாள்.

முட்டாள், மின்னலைப் பிடித்து பேப்பர் கவரில் அடைக்கப் பார்த்தான்!

இந்தச் சூரிதாரிடம் அந்த டை தன் காதலைத் தெரிவித்துவிட்டானா இல்லையா?

வேர்க்கடலை வண்டியைச் சூழ்ந்திருந்த தொண்டர்கள் கொஞ்சமாக நகர்ந்து அவளுக்கு வழி விட்டார்கள். "அந்தச் சந்துல பூந்து போயிடுங்கம்மா" என்று அறிவுறுத்தினார்கள்.

அரசியல் கலெக்ஷனுக்குப் பயந்து அவள் வழக்கமாகச் சாப்பிடும் மெஸ் பூட்டியிருந்தது. 'தமிழே மூச்சு, தமிழே மூச்சு, அது எங்கள் தலைவன் பேச்சு' என்று ஒலிபெருக்கிகளில் மார்க்கெட் இழந்த பேச்சாளர் தொண்டையை உலர்த்திக் கொண்டிருக்க, பெட்டிக் கடையில் பிரெட்டை வாங்கிக் கொண்டாள்.




வீட்டிற்குள் நுழைந்தபோது தொலைபேசி விடாமல் அலறிக் கொண்டிருந்தது.

விளக்குகளைப் போட்டு, சோபாவில் முழங்காலை இடித்துக் கொண்டு, பூஜாடியைக் கவிழ்த்து, ரிசீவரை அள்ளியபோது கூட அந்தக் குரலை எதிர்பார்க்கவில்லை.

"ஸாரி"

"ஏய்... ராஜ்குமார்!"

"நாளைக் காலைல மீட் பண்றேன்"

"எங்கேடா போயிட்டே?"

வைத்துவிட்டான்.

அவன் குரலைக் கேட்டதற்கா இத்தனைப் பரபரப்பு?

இழந்த உற்சாகம் மறுபடி வந்து தொற்றிக் கொண்டது.

ஷவருக்கு அடியில் வெகு நேரம் ஆனந்தமாக நனைந்தாள். சந்தனப் பவுடரை தோள்களிலும், பின் கழுத்திலும் தெளித்தாள். புதிய நைட்டியை உதறி அணிந்தாள். காய்ந்த பிரெட்டைக் கூட ருசித்துச் சாப்பிட்டாள். தூங்கப் போவதற்குத் தேவையில்லை என்று தெரிந்தும் உதட்டுச்சாயம் பூசினாள்.

நாளைக்குச் சொல்லி விடுவான்.

'உன்னைப் பற்றி எனக்கு எப்படித் தெரியும் என்றால்..'

விதம் விதமாக நிரப்பிப் பார்த்தாள். எதிலும் மனம் சமாதானமாகவில்லை.

போ, தூங்கு. அவனை எதற்காக எப்போதும் சுமந்து கொண்டிருக்கிறாய்?

ஆனால் அத்தனை உற்சாகத்தில் உறக்கம் வருவதாகத் தெரியவில்லை.

படிகளில் ஏறினாள். மொட்டைமாடியில் உலாவினாள்.

மீட்டிங் நிறைவாகி, ஆரவாரமாக மக்கள் கலைந்து கொண்டிருந்தார்கள்.

பேச்சாளர்கள் காலி செய்த மேடையின் விளிம்புகள் வரை இசைக் கருவிகள் நிரம்பின. வாத்தியங்கள் எலக்ட்ரானிக் நிரடல்களால் சுருதி சேர்த்தன. வெள்ளைப் புகை போட இரண்டு பையன்கள் மேடை நுனியில் குந்தி உட்கார்ந்தனர். மைக்கைக் கடித்து நன்றி சொல்லிக் கொண்டிருந்தவன்தான் கடைசியில் சன்மானத்தை வாங்கிக்

"இன்னும் எதுவுமே சாப்பிடல. அதுக்குள்ள எதுக்கு பில்லை நீட்றே?"

"உங்க அவசரத்துக்கு உடனே பில் மட்டும்தான் போட்டுக் கொண்டு வர முடிஞ்சது. பணத்தைக் கொடுத்துட்டுக் கிளம்புங்க..."

- பம்மல் நாகராஜன்



கொள்வான் என்று தோன்றியது.

நீ பெரிய பாடகியா வரணும்னு உங்கம்மா கனவு கண்டாங்க...

நிவேதனா மேடையில் நின்றிருந்த சூரிதாரை விரட்டி விட்டு மைக்கை வாங்கிக் கொண்டாள்.

'ம்ம்ஹா' என்று நெஞ்சிலிருந்து ராகம் இழுத்தாள். உச்சஸ்தாயிக்குப் போய் சரேலென்று சறுக்கி, இறங்கி... வளைத்துத் திரும்பி... இழுத்து உயர்த்தி...

படபடவென்று கைத்தட்டல்கள் பெருகி மேகங்களில் எதிரொலித்தன. தீபக் அழுத்தி அணைத்து கன்னத்தில் முத்தமிட்டான். 'கொன்னுட்டே!'

மற்றவர்களை விலக்கிக் கொண்டு ராஜ்குமார் முன்னேறினான். கையைப் பிடித்துக் குலுக்கினான். 'இதுக்காகத் தான் உங்கம்மா காத்திருந்தாங்க!'

'நாளைக்குப் பார்க்கலாம்' என்றானே, தவற மாட்டானே?

நிவேதனாவின் அடுத்த தினம் சற்று சிக்கிரமாகவே ஆரம்பித்துவிட்டது.

அழைப்பு மணிக்காகக் காத்திருந்து காத்திருந்து நரம்புகளில் முறுக்கேறி, தாங்க முடியாமல் வாசல் கதவைத் திறந்து வைத்தாள். மோட்டார் சைக்கிள்களின் படபடப்பிற்கெல்லாம் எழுந்தாள்.

எட்டரை மணிக்கு அவனிடமிருந்து ஃபோன் வந்தது.

"கொஞ்சம் பிரச்னை. சாயந்திரம் பார்க்கறேன்"

"ஆர்யூ எ சாடிஸ்ட்? எனக்கு இப்பவே பார்த்தாகணும். எங்க வரணும் சொல்லு. வரேன்" என்றாள்.

"ஆபீஸுக்கு நேரமாகலே?"

"என்னைப் போல புடைவை கட்டினவங்க ஆறு பேர் ஆபீஸ்ல இருக்காங்க. ஒண்ணு கொறைஞ்சாக் கெட்டுப் போயிடாது. உன்னை எங்கே பார்க்கலாம்?"

சற்றே தயங்கி விட்டு முகவரியைச் சொன்னான். "பேக்கரிக்கு அடுத்த தெரு.வின் முனையிலயே வெயிட் பண்றேன்"

கே.கே.நகரின் அந்தப் பிள்ளையார் கோவில் வாசலில், மரத் தொட்டியில், வெற்றி பெற்ற யாரோ தேங்காய்களை எண்ணி எண்ணி நொறுக்கிக் கொண்டிருந்தான். பத்துக் காசு பிச்சை கேட்ட சிறுமியை தேங்காயாலேயே அடிப்பேன் என்று மிரட்டித் துரத்தினான். மாலை அணிந்த புது மோட்டார் சைக்கிளின் தேகமெங்கும் சந்தனம் தெளித்து, சக்கரங்களுக்கடியில் எலுமிச்சைகள் நசுங்கக் காத்திருந்தன.

சாலையோரம் அதிகமாக ஒதுங்கி, சேற்றில் சக்கரம் சிக்கிய தண்ணீர் லாரியை அந்தப் பேட்டையே சேர்ந்து எழுப்பப் பார்த்துக் கொண்டிருந்தது.

பேக்கரியின் கூரை மீது வீசப்பட்ட முந்தின நாளின் மிச்சமான பிரெட் துண்டங்களைக் கவ்விச் செல்ல, காகங்கள் பேரணி நடத்தின.

வெண்ணெயும், கிரீமும், சூடான கோதுமையும் இணைந்து எழுப்பிய வித்தியாசமான வாசத்தை அனுபவித்துக் கொண்டு அவன் நின்றிருந்தான். அவளைப் பார்த்ததும் கை அசைத்து நிறுத்தச் சொன்னான். அவனிடம் வழக்கமான புன்னகை தொலைந்து போயிருந்தது. ஷேவ் முடித்து எழுபத்திரண்டு மணி நேரங்களுக்கு மேல் ஆகியிருந்தது.

"எங்கே போயிருந்தே?" என்றாள், வண்டியிலிருந்து இறங்கியதும்.

"தஞ்சாவூர்"

"அங்க யார் இருக்கா? உன் மொறைப் பொண்ணா?"

"அம்மா. தம்பி. ரெண்டு பேரையும் நீ இப்பப் பார்க்கப் போறே. அந்த வெள்ளை கேட்"

வெள்ளை கேட் பிரதான வீட்டின் பக்கவாட்டில் இருந்தது. நாலடி அகல சிமெண்ட் பாதையில், மின்னல்களாக வெடிப்பு. பெயிண்ட்டிற்காக ஏங்கும் சுவர்கள். இரும்புக் கைப்பிடி வைத்த படிகள். முடிவில் ஒல்லி ஒல்லியாய் மரக் கதவுகள்.

திறந்ததும் வரவேற்றது நேரெதிரே சுவரில் அவனுடைய பெரிய அளவு புகைப்படம்!

(தொடரும்)

# தென்றல் அல்ல புயல்!



மதுரை விமான நிலையத்திற்குச் செல்லும் சாலையில் இருக்கிறது மீனாட்சி நகர். கலாவதி என்றதும் பனிச்சென்று வீட்டு முகவரியைச் சொல்லி அனுப்புகிறார்கள். குறுகலான மாடிப் படிகளில் ஏறி, திறந்திருக்கும் கதவை மெல்லத் தட்டினால், இரண்டு வயது கூட நிறைவு பெறாத மழலையொன்று கதவைத் திறந்து, "அப்பா குளிக்கிறாங்க" என்கிறது. சப்தம் கேட்டு வெளிப்பட்டார் தோழி கலாவதி! அரசியல் குண்டர்களால் படுகொலை செய்யப்பட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கவுன்சிலர் லீலாவதியின் மூத்த மகள்.

"ஓர் ஆர்ப்பாட்டத்திற்காகக் கிளம்பிக் கொண்டிருக்கிறோம்! அதனாலென்ன! உட்காருங்கள், ஃவகமாகப் பேசிவிடலாம்" என்று அங்கிருந்த ஒரே ஒரு ஃபைபர் நாற்காலியை எடுத்துப் போட்டார்.



• கலாவதி, இரா.சுப்பு, தென்றல்

மிகச்சிறிய போர்ஷன். ஒரு மேஜை, அதிலொரு போர்ட்டபிள் கறுப்பு வெள்ளை டீ.வி. என்று எளிமையாக இருக்கிறது குடித்தனம். லீலாவதியின் படுகொலைக்குப் பிறகு பயந்து ஒதுங்கிவிடாமல், முழு நேரக் கட்சி ஊழியராகப் பணியாற்றி வருகிறார் கலாவதி. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தில் மாவட்டக் குழு உறுப்பினர். ஜனநாயக வாலிபர் சங்கத்தில் மாவட்டச் செயலாளராக பொறுப்பு வகிக்கும் முழு நேரக் கட்சி ஊழியரான இரா. சுப்புவை, இரண்டு வருடங்களுக்கு முன் காதல் திருமணம் செய்து கொண்டவர்.

இப்போது இரண்டு வயதில் ஒரு மகள். பெயர் தென்றல். இருவருக்குமே கட்சி தரும் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் மாத ஊதியத்தில் தான் குடும்ப நிர்வாகம். இதனால் அதற்குள்ளேயே தங்கள் செலவினங்களைச் சுருக்கிக் கொண்டிருக்கிறார்கள் இந்த கம்யூனிஸ்ட் காதலர்கள்.

"எனது இரண்டாவது தங்கை துர்காவும் காதல் திருமணம் செய்து கொண்டிருக்கிறாள். மூன்றாவது தங்கை டானியா, மதுரைப் பல்கலையில் முதுகலை படித்து வருகிறாள்" என்ற கலாவதியிடம் 'என்ன ஆர்ப்பாட்டத்திற்குக் கிளம்பிக் கொண்டிருக்கிறீர்கள்?' என்றோம்.

"கைவிடப்பட்ட முதியோர் ஓய்வூதியத்தை இந்த அரசு நிறுத்தி விட்டது. கௌரவ ரேஷன் அட்டைகள் என்பது நடுத்தரக் குடும்பத்தின் வயிற்றில் அடிக்கும் செயல். இது போன்ற மக்கள் விரோதப் போக்குகளைக் கண்டித்து, மாவட்ட ஆட்சியர் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்கிறோம்" என்றவர், "இப்போது ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பில் 'தீபம்' மகளிர் சுய உதவிக் குழுக்களை மாவட்டம் தோறும் அமைத்து ஊக்குவிக்கிறோம். இது ஒரு புதிய பரிமாணம்" என்று ஆர்ப்பாட்டத்துக்குக் கிளம்பினார்.

கலாவதியின் தோளில் தொற்றிக் கொண்ட தென்றலிடம், "உங்க பாட்டியைத் தெரியுமா?" என்றதும், சுறுசுறுப்பாக சுவரில் மாட்டப்பட்டிருந்த லீலாவதியின் படத்தைக் காட்டி, "இதோ இருக்காங்க!" என்றது.

"எங்கே, இன்குலாப்! ஜிந்தாபாத்! சொல்லு" என சுப்பு கேட்டது தான் தாமதம்! வலது கையைத் தூக்கி "இன்குலாப் ஜிந்தாபாத்" என்று கம்பீரம் கலந்த மழலைக் குரலில் குட்டிப் புயலானாள் தென்றல்.



# தூக்கம் தராத மெத்தை!



மெத்தை பற்றி சொன்னேனல்லவா?

'நாமும் ஜம்மென்று ஒரு மெத்தை வாங்கிப் போட்டுக் கொண்டு இரவில் ஜாலியாய் அதில் படுத்துத் தூங்கினால் என்ன என்ற ஆசை எனக்குள் ஏற்பட்டது. பாண்டி பஜாரில் இருந்த ஒரு கடையில் எட்டு இஞ்ச் உயரத்துக்கு ஒரு மெத்தை செய்ய ஆர்டர் கொடுத்தேன்.

"இவ்வளோ பருமனா எதுக்கு? படுக்கையிலேருந்து கீழே விழுந்தா, உங்க ஒட்டடைக் குச்சி எலும்பு உடைஞ்சிடப் போவுது" என்றார் கடைக்காரர். அட்வான்ஸ் வாங்கிக் கொண்டு நாலு நாள் கழித்து வரச் சொன்னார்.

நாலு நாளும், "ஆஹா! மெத்தை வரப் போகுது! சொகுசு மெத்தையில் ஜாலியாய்த் தூக்கம்!' என்று நினைத்துப் பார்க்கவே சந்தோஷமாக இருந்தது.

நாலாவது நாள் மாலை கடைக்குப் போனபோது, மெத்தை ரெடியாக இருந்தது. பணத்தைக் கொடுத்து விட்டு, ஒரு சைக்கிள் ரிக்ஷா பேசி, அதில் மெத்தையை ஏற்றினேன். சைக்கிள் ரிக்ஷாவிலேயே ஓர் ஓரமாய் ஒதுங்கி உட்கார்ந்து கொண்டு, ஸ்டைலாய் மெத்தை மீது சாய்ந்தபடியே, ஏதோ மகாராஜா, யானைமீது பவனி வருவதுபோல, ரிக்ஷாவில் கிளப் ஹவுஸுக்குப் போனேன்.

மெத்தையை, சைக்கிள் ரிக்ஷாவிலிருந்து இறக்குவதற்கு முன்பே, கண்ணில் பட்டவர்களையெல்லாம் அருகில் அழைத்தேன். மெத்தை வாங்கியிருப்பதைச் சொல்லி சந்தோஷப்பட்டேன். 'ரெண்டு ஆள், இதைத் தூக்கிட்டுப் போக முடியாது. எல்லாரும் ஒரு கை கொடுங்கள்' என்றேன். எல்லாருடைய பார்வையிலும் படும்படியான இடத்தில் அந்த மெத்தையைப் போட்டு, அமர்ந்தேன். ஏதோ மாயக் கம்பளத்தில் ஏறி வானில் மிதப்பதுபோல உணர்ந்தேன்.

இரவு படுத்தேன். சந்தோஷத்தில் நெடு நேரம் வரை தூக்கமே வரவில்லை. பிறகு எப்போது தூங்கினேன் என்பது எனக்கே

**15 ▪ நாகேஷ் ▪**

தெரியாது. தூங்கினபிறகு, நான் படுத்திருப்பது சொகுசு மெத்தையா, கட்டை பெஞ்ச்சா என்கிற வித்தியாசமும் எனக்குத் தெரியவில்லை.

சிறு வயதில் எனக்கு சிகரெட் பிடிக்கும் பழக்கம் வந்தது போதாதென்று, கிளப்ஹவுஸ் உபயத்தில், சீட்டு ஆடக் கற்றுக் கொண்டேன். இரவு பத்து மணி ஆனால் போதும், கிளப் ஹவுஸில் சீட்டுக்கச்சேரி களை கட்டிவிடும். பணம் வைத்து ஆடுவார்கள்.

தொடர்ந்து பல தடவை ஜெயித்துக் கொண்டிருந்த ஒருவரது வெற்றி, மற்றவர்களுக்கு ஒரு வித சந்தேகத்தைக் கிளப்பிவிட்டு விட, ஒரு சிலர் அவரைக் கூர்ந்து ரகசியமாகக் கவனித்ததில், அவரது தில்லுமுல்லு வெளிப்பட்டு விட்டது. வேடிக்கை பார்ப்பதில் ஆரம்பித்த சீட்டுக்கட்டு ஆர்வம், நாளடைவில் என்னையும் ஆடத் தூண்டியது. நானும் சீட்டு ஆடக் கற்றுக் கொண்டேன்.

ஒரு நாள், என் அப்பாவிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. ''அட! அப்பாவுடன்தான் தொடர்பே கிடையாதே! ஆனாலும், அண்ணன் மூலமாக எப்படியோ எனது முகவரியைத் தெரிந்து கொண்டு கடிதம் எழுதியிருக்கிறாரே'' என்ற ஆர்வம் பொங்க கடிதத்தைப் படித்தேன்.

தமக்கு உடம்பு சரியில்லை என்றும், ஒரு மருந்தின் பெயரைக் குறிப்பிட்டு, அது, தாராபுரத்தில் கிடைக்காததால், உடனடியாக சென்னையிலிருந்து அதனை வாங்கி அனுப்பும்படியும் குறிப்பிட்டிருந்தார். மேலும் மணி ஆர்டர் மூலம் மருந்து வாங்கப் பணம் அனுப்பி வைத்திருப்பதாகவும், உடனடியாக மருந்தை வாங்கி அனுப்பி வைக்கும்படியாகவும் அதில் சொல்லி இருந்தார்.

அவர் சொன்னபடியே, அன்றைய தினம் அப்பாவிடமிருந்து மணி ஆர்டரில் பணம் வந்தது. பணத்துடன், மருந்து வாங்க கடைக்குப் புறப்பட்டுப் போனேன்.

வழியில் நண்பர்கள், ஒரு கிளப்பில் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். என் தலையைப் பார்த்துவிட்டு, "நாகேஸ்வரா! வா. ஒரு கை குறையுது!" என்று அழைக்க, நான், ''மருந்து வாங்கி, ஊருக்கு அனுப்பணும்'' என்றேன்.

''மருந்துக் கடை எங்கே போயிடப் போகுது? தபால் ஆபீஸ் சாயந்திரம் வரை உண்டு. ஒரு அரை மணி நேரம் எங்களுக்கு கம்பெனி தரக்கூடாதா?" என்றவுடன், "சரி! எனக்கும் சீட்டைப் போடுங்க'' என்று அவர்களுடன் போய் உட்கார்ந்தேன்.




ஆட்டம் சூடு பிடித்தது. ஆனால் எனக்கு சூடு விழுந்து கொண்டிருந்தது. ஆமாம்! தொடர்ந்து எனக்கு நஷ்டம். விட்ட காசை எடுக்கும் வெறியில் தொடர்ந்து ஆடினேன். விதி வலியதாயிற்றே! மருந்து வாங்க வைத்திருந்த மொத்தக் காசையும் நான் இழந்தேன். எனக்கு 'பகீர்' என்று ஆனது.

இந்தக் கேவலத்தை வெளியில் சொல்ல முடியுமா? மருந்து வாங்குவதற்குக் காசுக்கு என்ன பண்ணுவது என்று தெரியாமல் திண்டாடினேன். இதற்கு மத்தியில், 'மருந்தை ஏன் இன்னும் வாங்கி அனுப்பவில்லை?' என்று அப்பாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

சீட்டாட்டக் கிளப் உறுப்பினர்களில் ஒருவருக்குச் சொந்தமாக மெடிக்கல் ஷாப் இருந்தது. அவரைப் போய்ப் பார்த்தேன். விஷயத்தைச் சொல்லி, கெஞ்சினேன். மருந்தைக் கொடுத்துவிட்டு, "கூடிய சீக்கிரத்தில்

மருந்துக்கான பணத்தைக் கொடுத்துவிடு" என்றார். கண்கள் கலங்க நன்றி சொல்லி விட்டு, மருந்தை ஊருக்கு அனுப்பி வைத்தேன். நல்ல காலம்! மருந்து தாமதமாகக் கிடைத்தபோதிலும், அதனைச் சாப்பிட்டு, என் அப்பா குணமடைந்தார்.

கிளப் ஹவுஸில் மாடிப் பகுதியில் நான் நின்று கொண்டிருந்தேன். திடீரென, "எங்கய்யா அந்த ஆளு?" என்று கடுமையான குரல் கேட்டது. 'அடே! நாகேஸ்வரா! லாண்டரிக்காரன் வந்துவிட்டான்!' என்றது என் மூளை. எப்படி அவனைச் சமாளிப்பது? இது அடுத்த கேள்வி. சட்டென்று ஒரு நண்பரின் அறைக்குள் நுழைந்தேன். நண்பரிடம் "கொஞ்ச நேரம் இங்கே நான் ஒளிந்து கொள்கிறேன். நீ ரூம் கதவைப் பூட்டி, சாவியை ஜன்னல் வழியாக என்னிடம் கொடுத்துவிட்டுப் போய்விடு!" என்றேன். நண்பரும் ஒத்துழைப்புக் கொடுத்தார்.




கன்னாபின்னாவென்று என்னைத் திட்டிக் கொண்டே மாடிக்கு வந்துவிட்டார் லாண்டரிக்காரர். அவரிடம் சலவைக்கு என் ஒரு செட் துணியைப் போட்டிருந்தேன். ஆனால், அதை டெலிவரி எடுக்க என்னிடம் மூணு ரூபாய் பத்துக் காசு இல்லை.

இரண்டு முறை டிமிக்கி கொடுத்துவிட்டேன் என்கிற கோபத்தில், இதோ அர்ச்சனை செய்தபடி மூன்றாவது தடவையாக வந்துவிட்டார்.

மாடி வெராண்டாவில் என்னைத் தேடிவிட்டு, காணவில்லை என்றதும், இன்னும் சுருதி கூட்டி திட்டிக் கொண்டிருந்தார். நான் அறைக்குள் உட்கார்ந்து அதைக் கேட்டுக் கொண்டிருந்தேன். கொஞ்ச நேரத்தில் லாண்டரிக்காரரின் குரல் ஓய்ந்தது. மெதுவாக நான் ஜன்னல் வழியாக வெளியே பார்த்தேன். ஐயோ! ஜன்னலின் மறு பக்கம் லாண்டரிக்காரர்! என்னை நேருக்கு நேர் பார்த்ததும், அவரது கோபம் உச்சத்தை அடைந்தது. ரூமைத் திறந்து கொண்டு வெளியில் வந்ததும், "மூணு ரூபா கொடுத்து டெலிவரி எடுக்க வக்கில்லாத உனக்கெல்லாம் சலவைத் துணி கேக்குதோ?" என்றார். நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போல இருந்தது எனக்கு.

"நீங்க போட்டுக்கிட்டிருக்கிறது என்னோட சட்டைபோல இருக்கு" என்றேன் அதிர்ச்சியுடன்.

"ஆமாம்! உன்னோடதுதான்! அதுக்கு என்னாங்கறே? மூணு ரூபா பத்துக் காசு கொண்டு வந்து முதல்ல கொடு! சட்டையை மறுபடி சலவை பண்ணித் தரேன்!" என்று சொல்லிவிட்டு, இடத்தைக் காலி பண்ணினார் லாண்டரிக் கடைக்காரர்!

நண்பர் ஒருவரிடம் பணம் புரட்டி மூணு ரூபாய் கொடுத்துவிட்டு, அப்புறம் பத்துக் காசு கொண்டு வந்து கொடுப்பதாகச் சொன்னேன்.

"பத்துப் பைசா போனாப் போகுது! நீ துணியை எடுத்துக்கிட்டுப் போ! இனிமே காசு இருந்தா மட்டும் துணியைச் சலவைக்குப் போடு!" என்று இலவச ஆலோசனை வேறு!

சினிமாவில் விதம் விதமான காஸ்டியூம்களைப் போடுகிறபோது, எனக்கு இந்தச் சம்பவம் அடிக்கடி நினைவுக்கு வரும்.

ஒரு நாள், எனக்கு ஃபோன் வந்திருப்பதாகச் சொன்னார்கள். போய்ப் பேசினேன். என் வாழ்க்கையில் அந்த ஃபோன் கால் திருப்பத்தை ஏற்படுத்தியது.

(தொடர்ந்து சிரிப்பேன்)

## நீங்கள் கேட்டவை - தராசு

● உமரி பொ.கணேசன், மும்பை - 37

? தமிழகம் முதல் மாநிலமாக எதில் உள்ளது?

! 'தாகூர்' படம் பார்க்கச் சென்ற ஆந்திர ரசிகர்கள் தள்ளுமுள்ளு நெரிசலில்தான் இறந்தார்கள். 'திருமலை' பட ரிலீஸன்று ஏற்பட்ட மோதலில், திட்டமிட்ட கொலையே இங்கே நடந்திருக்கிறது. சினிமா வெறியில் நாம்தானே ஃபர்ஸ்ட்!

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? தி.மு.க. கோஷ்டி மோதல்; அ.தி.மு.க. கோஷ்டி மோதல்; காங்கிரஸ் கோஷ்டி மோதல்; - ஒப்பிடுங்களேன்....?

! தி.மு.க. - ஆசிரியர் இல்லாத வகுப்பறை. அ.தி.மு.க. - சர்வாதிகாரப் போக்குள்ள ஆசிரியரின் வகுப்பறை. காங்கிரஸ் - மாணவர்களே ஆசிரியராகும் வகுப்பறை.

● எஸ்.ஆர். ஸ்வாமி, திருநெல்வேலி - 11 ❐

? சென்னை ஹைகோர்ட், எந்த வழக்கானாலும் அரசுக்குச் சரமாரியாகக் கேள்விகள் தொடுக்கிறது; திணறடிக்கிறது... ஆனால் தீர்ப்பு மட்டும் வித்தியாசமாக வழங்குவது ஏன்...?

! இதுதான் சட்டம் - தர்மம் ஆகிய வற்றுக்கிடையே உள்ள வித்தியாசம். சட்ட பூர்வமாக சரியாக அமையும் சில அரசு உத்திரவுகள் அதர்மமாகப் போவதுண்டு. நீதிமன்றம் சட்டத்தை மட்டுமே பார்த்து தீர்ப்பு வழங்க வேண்டி வரும்; ஆனால் கேள்விக் கணைகள் மூலம் தர்ம யுத்தம் நடத்தும். நீதிபதியின் கேள்வியில் உள்ள நியாயத்தைப் புரிந்துகொண்டு அரசு தன்னைத் திருத்திக் கொள்ள வேண்டும். ஆனால், அப்படி நடப்பதில்லையே!

● கே. கணேசன், சென்னை - 16

? நமது பிரதமர் வாஜ்பாய் திருமணமாகாதவர். ஆனால் சோனியாவோ, திருமணத்தின் மூலம் பிரதமர் பதவியைப் பிடிக்கப் பார்க்கிறார் என்கிறாரே பிரமோத் மகாஜன்?

! அயல்நாடுகளுக்குச் சென்றபோது பிரதமர் வாஜ்பாய், சோனியாவுக்கு அளித்த பல பாராட்டு மொழிகளுடன் இந்த மலிவான தாக்குதலை மக்கள் ஒப்பிட்டுப் பார்த்தால் நல்லது.

● ஜி.எஸ்.பிரபாகரன், சென்னை - 73

? தமிழக முதல்வர் கூறும் குட்டிக் கதைகள் புத்தமாக வெளிவந்தால் என்ன தலைப்பு வைக்கலாம்..?

! குட்டிச் சொன்ன குட்டிக் கதைகள்!

● எச்.எஸ்.முகம்மது ராஃபி, இராமேஸ்வரம்

? சிரியாவில் பாலஸ்தீனத்




• நாம்தானே ஃபர்ஸ்ட்!

❐ ரூ. 100 பரிசு பெறுபவர் : எஸ்.ஆர்.ஸ்வாமி, 43, எஸ்.ஐ.சி. காலனி, மகாராஜா நகர், திருநெல்வேலி - 11



★ வருத்தமூட்டும் வெறுப்பு



★ புத்தகத் தலைப்பு

தீவிரவாதிகள் முகாமை இஸ்ரேல் குண்டு வீசி அழித்ததுபோல், பாகிஸ்தானிலுள்ள தீவிரவாத முகாம்களை இந்தியா தாக்கி அழிக்க இயலாதா...?

! இயலும். அதற்கான வலிமையும் ஆயுதங்களும் உண்டு. ஆனால், முடிகிற காரியங்கள் எல்லாமே சரியான காரியங்கள் இல்லை... இத்தகைய போக்கு முடிவில்லாத் துயரத்தையே தரும்.

● எல். மீனாட்சிசுந்தரம், திருவண்ணாமலை

? மதுக்கடை போல வேறு எது எதை அரசாங்கம் எடுத்து நடத்தலாம்...?

! அடுத்ததாக... வேறென்ன, கள்ளச் சாராயக் கடைகள்தான்!

● வீ. உதயக்குமாரன், வீரன்வயல்

? தனுஷ் அதிர்ஷ்டசாலியா? திறமைசாலியா?

! இளமைசாலி!

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி

? 2003ம் ஆண்டுக்கான சங்கீத கலாநிதி விருதுக்கு டி.வி. சங்கரநாராயணன் தேர்வு செய்யப்பட்டது பற்றி...?

! சண்டை - பூசல், கோர்ட் - வழக்கு, இவற்றுக்கு இடையில் மியூசிக் அகாடமி இவ்வாண்டு செய்த உருப்படியான ஒரே காரியம்.

● எஸ். மைக்கேல், சென்னை ★

? நவீன இலக்கியத்துக்கு எந்த பங்களிப்பும் செய்யாத படைப்பாளிகள் இலக்கியவாதிகள் இல்லையா...?

! நவீன இலக்கியம் எது என்பதை யார் நிர்ணயிப்பது? கம்பராமாயணம்கூட அது எழுதப்பட்ட காலத்தில் நவீன இலக்கியம்தான். எவன் ஒருவன் தன் படைப்புகளை நேசிப்பதைக் காட்டிலும் அதிகமாகப் பிற தரமான படைப்புகளை நேசிக்கிறானோ, அவனே மெய்யான இலக்கியவாதி.

● தேவந்தி துரைராஜ், திருவண்ணாமலை

? காங்கிரஸ் - தி.மு.க. கூட்டணி அனேகமாக உறுதியாகிவிட்டது. பா.ஜ.க. - அ.தி.மு.க. உறவு ஏற்படுமா...?

! செயல்களுக்கு எதிர்ச் செயல்கள் இருந்தே தீரும். பா.ஜ.க. தனித்துப் போராடும் என்று நம்ப இடமில்லை. விளைவு : 'சபாஷ், சரியான போட்டி!'

★ ரூ. 50 பரிசு பெறுபவர் :
எஸ்.மைக்கேல், 13/3ஏ, எட்டாவது தெரு, ஸ்ரீதேவி நகர், ஆலப்பாக்கம், சென்னை - 116

● ஆர்.காஞ்சனா, நெய்வேலி - 3

? பொருளாதார அடிப்படையில் இட ஒதுக்கீடு கொண்டுவரும் மத்திய அரசின் முயற்சியை கி. வீரமணி ஏன் எதிர்க்கிறார்..?

! ரொம்ப முன்னேறிவிட்டதாகக் கருதப்படும் வகுப்பினரிடையேகூட பொருளாதார ரீதியில் மிகவும் பிற்பட்ட நிலையில் நிறைய மக்கள் உண்டு. அவர்களுள் சிலருக்கு உதவ ஒரு திட்டம் வகுப்பதை எதிர்ப்பது என்பது வருந்தத்தக்கது. இதற்குக் காரணம், ஆழமாக வேர் விட்டுள்ள ஒரு வெறுப்பு உணர்ச்சியே. இது மேலும் வருந்தத்தக்கது.



★ உருப்படியான காரியம்



★ மூன்றாவது காரணம்

● பொன்விழி, அன்னூர்

? 'தராசுவின் கனவுக் கன்னி யார்..?

! தைரியலக்ஷ்மி

● கி. தேவி, விருதுநகர்

? மாவட்டந்தோறும் வளர்ச்சித் திட்டப் பணிகளைத் துவக்க வரும் முதல்வரை வரவேற்கவே ஆடம்பரமாகப் பல இலட்சங்கள் செலவிடப்படுகின்றனவே?

! நலத்திட்டப் பணிகளைத் தொடங்கி வைக்க தடபுடல் விழா எடுக்கும் ஆட்சியாளர்கள், திட்டங்களை நிறைவேற்றிய பிறகும் இதுபோல் விழா எடுத்தால் நன்றாக இருக்கும். ஆனால் அப்படியொரு விழா கனவில்தான் நடக்கும்.

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

? நாட்டில் ஏமாற்றுபவர் அதிகமா? ஏமாறுபவர் அதிகமா...?

! அரசியல்வாதிகள் அதிகமா? வாக்காளர்கள் அதிகமா..?

# தவிப்பு

## ஜி.என்.வி.ராமன்

கணக்கு நோட்டை எடுத்துக் கொண்டு அப்பாவிடம் போனான் சுரேஷ். "அப்பா இதைக் கொஞ்சம் பாரு." ஒரு சுவாரசியமும் இல்லாமல் விவேக் நோட்டை வாங்கினார். கண்ணாடியைத் தேடினார். கணக்கைப் பார்த்தார். ஒரு முறை, இரண்டு முறை, அவரால் முடியவில்லை. இயலாமை அவர் பேச்சில் தெரிந்தது.

"இதையெல்லாம் டீச்சர் சொல்லிக் கொடுக்கிறது இல்லையா?"

"சொல்லிக் கொடுக்கறாங்க, ஆனா எனக்குப் புரியலை."

"பாக்கியெல்லாம் எப்படிப் புரியுது? டெண்டுல்கரின் ஆவரேஜ் என்ன? எவ்வளவு சதம் அடிச்சிருக்கார், கே.டி.வியில் என்ன படம் போடப்போறான்? இதையெல்லாம் யாராவது சொல்லிக் கொடுத்தா வருது? அதெல்லாம் தானா வரணும். கணக்குகளை மட்டும் எங்கிட்ட கொண்டு வா" என்று பொரிந்து தள்ளினார்.

சிறிது நேரத்துக்குப் பிறகு சுரேஷை அருகில் வரும்படி அழைத்தார். நோட்டைக் கையில் எடுத்து மூளையைக் குடைந்து கொண்டிருந்தார். பக்கத்து வீட்டிலிருந்து சிவராமன் வந்தார்.

"என்னப்பா நல்லாப் படிக்கிறியா?" பையனைப் பார்த்துக் கேட்டார். உடனே விவேக், "எங்கே படிக்கிறான்? எப்பப் பாரு விளையாட்டு. டீ.வி. இப்பக் கூட ஒரு கணக்கைப் போட முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான். எனக்கே ஆபீசில் ஆயிரத்தெட்டுப் பிடுங்கல். எனக்கு இப்பவெல்லாம் கான்சன்ட்ரேஷனே இல்ல."

உடனே சிவராமன், "தம்பி, பென்சிலைக் கொடு" என்று வாங்கினார். அல்ஜீப்ராவை மேலே இருந்து ஆரம்பித்து கொஞ்சம் கொஞ்சமாக இறங்கி, ஒரு வழியாகக் கணக்கை முடித்தார்.

"கரெக்ட், டீச்சரும் இப்படித்தான் சொல்லிக் கொடுத்தா" என்றான் பையன்.

"நானும் ஒரு மாஸ்டர் தான்."

"என்னது?"

ஆச்சரியப்பட்டார் விவேக்.

"நாலைந்து வருஷம் ஆசிரியராக இருந்திருக்கேன்" என்ற சிவராமன், பையனைப் பார்த்து, "சாயந்திரம் வீட்டுக்கு வாயேன். கணக்குச் சொல்லித் தரேன். வெட்கப்படாதே" என்றார். பையன் ஆசை ஆசையாய்த் தலையை ஆட்டினான்.

வீட்டிற்கு வந்ததும் சிவராமனின் மனைவி வித்யா அவர் மேல் பாய்ந்தாள். "கணக்கு வாத்தியாரா இருந்தது ஒரு பெருமையா? அதைப் போய்ச் சொல்லிட்டிருக்கீங்க? அப்புறம் அந்தப் பையனைக் கட்டாயம் வா, சொல்லித் தரேன்னு கூப்பிட்டிருக்கீங்க."

"என்ன தப்பு வித்யா?"

"தப்பா? இப்ப நீங்க கணக்கு வாத்தியார் இல்ல, ஒரு கம்பெனியிலே பர்சனல் மானேஜர். அந்த ஞாபகம் இருந்தாச் சரி. போற இடத்திலே எல்லாம் உங்க வாத்தியார் பெருமை வேண்டாம்."

"அந்தப் பையன் எதையும் சட்டுன்னு புரிஞ்சிக்கிறான். அந்த மாதிரி குழந்தைகளுக்குச் சொல்லி கொடுக்கறதுல..."

வித்யா இடுப்பில் கையை வைத்துக் கொண்டு அருகில் வந்தாள். "உங்களுக்கு எதுக்கு இந்தக் கவலையெல்லாம். ஒரு நாள் பார்ட்டியிலே மிஸஸ் விவேக் இதைச் சொல்லிச் சிரிக்கப் போறா. அப்புறம் ஆபீஸ் பூரா ஒரே சிரிப்பா யிடும்." சிவராமன் மௌனமாகி விட்டார்.

இந்த பார்ட்டி எல்லாம் நாலைந்து வருடங்களாகத் தான். அதாவது வித்யாவைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகுதான். அதற்கு முன்பு வாழ்க்கையில் இதையெல்லாம் அனுபவித்தது கூட இல்லை. பெரியதாக வீடு, வாய்க்கால். காவேரிக் கரைக்குக் குளிக்கப் போனால், "சார் சார்" என்று கூடவே வரும் பையன்கள், எதிரே பார்க்க நேர்ந்தால் கூட, வேட்டியை இறக்கி விடும் மரியாதை. கல்யாணம் முடிந்ததும் சென்னைக்கு வந்தவர், இந்த வாழ்க்கையில் சபலப்பட்டுப் போனார்.

"ஒன்றுமில்லாத பயலெல்லாம் உச்சாணிக்குப் போயிட்டான். நீங்க இவ்வளவு படிப்புப் படிச்சிட்டு, அப்பா, அம்மா, ஊரு, வாத்தியார் வேலைன்னு இன்னும் எவ்வளவு நாளைக்கு இருக்கப் போறீங்க?"

பதில் பேசவில்லை.

வாத்தியார் வேலையில் ஒரு திருப்தி

இருந்தது. தனக்குத் தெரிந்ததை நாலு பேருக்குச் சொல்லிக் கொடுக்கற திருப்தி. சட்டென்று அந்தப் பையன் நினைவுக்கு வந்தான். இங்கே உட்கார்ந்த இடத்திலேயே செய்யலாம். இந்தப் பையன் மூலமாக ஏழெட்டுப் பையன்களுக்குச் சொல்லிக் கொடுத்தால் மனத் திருப்தியாவது இருக்கும்.

ஒரு வாரம் ஓடிவிட்டது.

தினம் தினம் சீக்கிரமாக வீடு திரும்ப ஆரம் பித்தார் சிவராமன். முதல் நான் வித்யாவிடம், "அந்தப் பையன் வந்தானா?" என்று உற்சாக மாகக் கேட்டார். அவள் முகத்தைப் பார்த்து உற்சாகத்தைக் கை விட்டார்.

பொறுக்க முடியாமல் ஒரு நாள் விவேக் கிடம் விசாரித்தார். "அவனுக்கு உடம்பு சரி யில்லை, சரியாகட்டும், அனுப்பறேன்."

நிஜம் என்று சிவராமன் நினைத்துக் கொண் டார். இரண்டு நாட்கள் கழித்து விவேக்கைப் பார்க்கிற சாக்கில் அவன் வீட்டிற்குப் போனார். காப்பி, டிபன் என்று வழக்கமான உபசாரம்.

"பையன் இல்லையா? வந்தது வந்தோம், எதாவது சந்தேகம் இருந்தால் சொல்லிக் கொடுக்கலாமேன்னு..."

விவேக் மனைவியின் முகத்தைப் பார்த் தார். அவர் மனைவி இவரைப் பார்த்தாள். ஒரு பேச்சுக்குச் சொன்னால், இப்படியா பென்சிலும் கையுமா வருவாள்?

"அவனோட டீச்சரே சொல்லிக் கொடுக் கறா?"

சிவராமன் எழுந்தார். ஊசி குத்தின மாதிரி ஒரு வலியும் சோர்வும், மனத்தை அழுத்தின.

வீட்டிற்கு வந்தார். அப்படியே சோபாவில் சாய்ந்தார்.

அந்தப் பையன் இன்னமும் மனத் தில் வந்து சென் றான். சுட்டி கையான பையன். எதையும் உடனே கிர கித்துக் கொள் ளும் ஆற்றல். அல்ஜீப்ராவை சிரமம் இல்லா மல் புரிய வைக் கலாம். இன்னும் எத்தனையோ பையன்களுக்கும் உதவலாம்.

அத்தனைப் படிப்பும் அறிவும் இப்பொழுது யாருக்கும் எந்த வித உபயோகமும் இல்லாமல் போய்விட்டது. புதையல் மாதிரி, வீணாகி...

உடல் மரக்கிளையில் தொங்குகிற மாதிரி இருந்தது. ஞானத்தை வைத்துக் கொண்டு அலையும் பிரம்மராட்சஸனாக மாறிய மாதிரி தோன்றியது. "நான் தான் சிவராமன், ஏ பிளஸ் பீ இண்டு... சரியான ஆன்சர் சொல்லு. இல்லாவிட்டால் உன்னை அடித்துத் தின்று விடுவேன். பதில் சொல்லும் வரை நான் இப்படியே கிடக்கப் போகிறேன். பக்கத்துக் கிளையில் யார், காட்பாதரா? ஹா ஹா ஹா..."

"எழுந்திருங்கோ, என்னது இது? மிஸஸ் மணி வீட்டில் பர்த்டே பார்ட்டி இருக்கு. கிடு கிடுன்னு குளிச்சிட்டுக் கிளம்புங்கோ."

எதிரே வித்யா!

பிரம்ம ராட்சஸன் திரும்பவும் சிவராம னாக மாறியது. எழுந்தது. ஸ்நானம் செய்யப் போயிற்று, அத்தனைக்கும் சேர்த்து. ○






## முப்பத்து ஏழாம் அத்தியாயம்

## சத்ருக்னன் பீதி

சக்கரவர்த்தியிடம் சேனாதிபதி கூறிய வண்ணமே அன்று சூரியன் அஸ்தமித்த ஒரு முகூர்த்த நேரத்துக்கெல்லாம் யுத்த பேரிகை முழங்கியது. வாதாபிக் கோட்டையைச் சுற்றி நாற்புறமும் சூழ்ந்திருந்த பல்லவ வீரரின் மகா சைனியம் இடம் பெயர்ந்து கோட்டை மதிலை நோக்கி முன்னேறத் தொடங்கியது. காற்றில் அசைந்தாடும் கொடிகளாகிய அலைகளோடு கூடிய அந்தச் சேனா சமுத்திரமானது வாதாபிக் கோட்டையை மூழ்க அடிக்கும் நோக்கத்துடன் பொங்கி முன்னேறுவது போலக் காணப்பட்டது.

பல்லவ சைனியத்தின் யானைப்படை நாலு கோட்டை வாசல்களையும் நோக்கிச் சென்ற காட்சி, கருங்குன்றுகள் இடம் பெயர்ந்து செல்லும் காட்சியையொத்திருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்துக்காகவே வெகு நாளாகப் பயிற்சி பெற்றுக் காத்துக் கொண்டிருந்த பிரம்மாண்டமான யானைகள் துதிக்கைகளில் இரும்புலக்கைகளையும் வயிரம் பாய்ந்த மரத் தூண்களையும் தூக்கிக் கொண்டு அசைந்து அசைந்து சென்ற போது பூமி அதிர்ந்தது; புழுதிப் படலங்கள் கிளம்பி வானத்தை மறைத்தன.

ஓர் இலட்சம் வீரர்களும் பத்தாயிரம் யானைகளும் சேர்ந்தாற் போல் இடம் பெயர்ந்து சென்றதனால் ஏற்பட்ட ஓசை, சண்ட மாருதம் அடிக்கும்போது மகா

**அமரர் கல்கி**

சமுத்திரத்தில் உண்டாகும் பெருங் கோஷத்தை ஒத்திருந்தது.

சற்று நேரம் வரையில் அவ்வளவு சைனியமும் இருட்டிலேயே இடம் பெயர்ந்து சென்றன. திடீரென்று இங்கொன்று அங்கொன்றாகத் தீவர்த்திகளும் தீப்பந்தங்களும் தோன்றலாயின. கொஞ்ச நேரத்துக் கெல்லாம் அவை பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம் என்ற கணக்கில் எரியத் தொடங்கின. அந்தத் தீவர்த்திகளிலும் தீப்பந்தங்களிலும் எழுந்த புகை, நாற்புறமும் பரவிச் சூழ்ந்து ஒரு பயங்கரமான மாயலோகக் காட்சியை அளித்தது.

சேனாதிபதி பரஞ்சோதி தமது கூடாரத்துக்கு வெளியில் நாற்புறமும் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் அமைதியின்றி அங்குமிங்கும் நடந்ததையும், கத்தியினால் பூமியைக் கிறிக்கோலம் போட்டதையும் பார்த்தால் அவர் யாரையோ, எதையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அப்போது சடையனும் இன்னும் நாலு பேரும் வாதாபிக் கோட்டை வாசலிலிருந்த கணபதியைத் தூக்கிக் கொண்டு வந்து சேர்ந்தார்கள். விக்கிரகத்தைக் கூடாரத்துக்குள் கொண்டு போய் வைக்கும்படி பரஞ்சோதி கட்டளை இட்டார். அவர்கள் பின்னால் பரஞ்சோதியும் உள்ளே சென்று சடையனைப் பார்த்து, "அப்பனே! நீயும் உன்னுடைய ஆட்களும் இங்கேயே இருந்து இந்தக் கணபதிராயனைப் பத்திரமாய்ப் பாதுகாக்க வேணும். என்னுடைய மனோரதம் நிறைவேறினால், சிவகாமி தேவிக்கு எவ்விதத் தீங்கும் நேரிடாமல் வாதாபிக் கோட்டைக்குள்ளேயிருந்து பத்திரமாகக் கொண்டு சேர்த்தேனேயானால், இந்த விநாயகப் பெருமானை என் கிராமத்துக்குக் கொண்டு போய்க் கோவில் கட்டி வைத்துத் தினம் மூன்று வேளை பூஜை செய்விப்பதாக வேண்டுதல் செய்து கொண்டிருக்கிறேன்!" என்றார்.

மீண்டும் அவர், "சடையப்பா! இங்கே இருந்து நீங்கள் இந்த விக்கிரகத்தைக் காத்துக் கொண்டிருப்பதனால் வாதாபிக் கொள்ளையில் உங்களுக்குப் பங்கு இல்லாமல் போய்விடும். அதற்கு நான் ஈடு செய்து கொடுக்கிறேன்!" என்றார்.

"சுவாமி! ஆக்ஞை எப்படியோ அப்படியே நடந்து கொள்ளுகிறோம்!" என்றான் சடையப்பன்.

சேனாதிபதி பரஞ்சோதி, பின்னர் கணபதியின் விக்கிரகத்தை நோக்கிக் கைகூப்பிக் கொண்டு கண்களை மூடிய வண்ணம் சிறிது நேரம் பிரார்த்தனை செய்தார்.

அதே சமயத்தில் வெளியில் யாரோ ஓடிவரும் சத்தம் கேட்டது. அடுத்த கணம் சத்ருக்னன் தலைவிரிகோலமாய் உள்ளே ஓடிவந்தான். அவனுடைய முகம் பேயடித்தவன் முகம் போல் இருந்தது.

பரஞ்சோதி அவனைத் திரும்பிப் பார்த்து, "சத்ருக்னா! இது என்ன கோலம்? ஏன் இப்படிப் பீதி கொண்டவனைப்போல் இருக்கிறாய்? ஏதாவது பெரிய ஆபத்து நேர்ந்ததா? போன காரியத்தில் வெற்றி கிடைக்கவில்லையா?" என்று கேட்டார்.

"சேனாதிபதி! என் வாழ்க்கையில் எத்தனையோ பயங்கரமான ஆபத்துக்களில் சிக்கிக் கொண்டிருக்கிறேன். ஆனால், நேற்றும் இன்றும் எனக்கு ஏற்பட்ட ஆபத்தைப் போல் இதுவரையில் ஏற்பட்டதில்லை" என்று சொல்லிவிட்டுப் பக்கத்தில் நின்றவர்களைப் பார்த்தான்.

அந்தக் குறிப்பை உடனே உணர்ந்து சேனாதிபதி அவர்களை வெளியில் போகச் சொன்னார். அவர்கள் போனவுடன் சத்ருக்னனைப் பார்த்து, "சத்ருக்னா! கோட்டையைத் தாக்க ஆரம்பித்தாகிவிட்டது. சிறிதும் தாமதிக்க நேரமில்லை. உன்னுடைய கதையைச் சுருக்கமாகச் சொல்லிமுடி! போன காரியத்தில் வெற்றி அடைந்தாயா, இல்லையா? அதை முதலில் சொல்!" என்றார்.

"சேனாதிபதி! கோட்டைக்குள் போக இரகசியச் சுரங்க வழி இருக்கிறது. அது இருக்கும் இடத்தையும் கண்டுபிடித்து விட்டேன். ஆனால், அதன் வழியாகக்

கோட்டைக்குள் போவது சுலபமான காரியமில்லை. கோட்டைத் தாக்குதலோ ஆரம்பமாகி விட்டது. இனிச் சுரங்க வழியில் போய்த்தான் என்ன பிரயோஜனம்? எல்லாவற்றிற்கும் தங்களிடம் யோசனை கேட்டுக் கொண்டு போக வந்தேன்!'' என்று சொல்லிப் பிறகு, தான் வந்த வரலாற்றைக் கூறினான்.

## முப்பத்து எட்டாம் அத்தியாயம்

## பயங்கரக் குகை

சேனாதிபதி பரஞ்சோதியிடம் ஒற்றர் தலைவன் சத்ருக்னன் என்றுமில்லாத பதைபதைப்போடு கூறிய வரலாறு வருமாறு:

சேனாதிபதியும், சக்கரவர்த்தியும் கட்டளையிட்டபடி சத்ருக்னனும் குண்டோதரனும் நகரத்துக்குள் போவதற்கு இரகசியச் சுரங்க வழி இருக்கிறதா என்று கோட்டையைச் சுற்றியுள்ள பிரதேசங்களில் தேட ஆரம்பித்தார்கள். காபாலிகர்களின் பலி பீடத்துக்கு அருகிலுள்ள மேடும் பள்ளமுமான பாறைகளிலேதான் சுரங்க வழி இருந்தால் இருக்க வேணுமென்று அந்தப் பாறைகளிலேயெல்லாம் நுணுக்கமாகத் தேடிக் கொண்டிருந்தார்கள். அப்படித் தேடி வரும் போது ஒரு நாள் இரவில் ஏதோ தீ எரிவதைப் பார்த்து அதன் அருகே சென்றார்கள். தீயின் அருகில் ஒரு மனிதனும் ஸ்திரீயும் காணப்பட்டனர். அந்த மனிதன் நாகநந்தி பிக்ஷு என்று தெரிந்தது. ஸ்திரீயோ பயங்கரத் தோற்றங் கொண்ட காபாலிகை. அவர்களுடைய சம்பாஷணையை மறைந்திருந்து ஒற்றுக் கேட்டதில் விளக்கமாக ஒன்றும் தெரியவில்லை. ஆனால், புலிகேசி, சிவகாமி என்ற பெயர்கள் அடிக்கடி கேட்டன. காபாலிகையைத் தமக்காக ஏதோ ஒத்தாசை செய்யும்படி நாகநந்தி கேட்டுக் கொண்டிருந்ததாக மட்டும் தெரிந்தது. பொழுது விடியும் சமயத்தில் பிக்ஷுவும் காபாலிகையும் ஒரு குகையை மூடியிருந்த பாறையை உருட்டித் தள்ளிவிட்டுக் குகைக்குள்ளே போனார்கள். அவர்கள் உள்ளே போனதும் குகைத் துவாரம் மறுபடியும் மூடப்பட்டது.

சத்ருக்னனும் குண்டோதரனும் வெகு நேரம் காத்திருந்து பார்த்த பிறகு அந்தப் பாறையைத் தாங்களும் பெயர்த்துத் தள்ளிவிட்டுக் குகைக்குள்ளே போகலாமென்று எண்ணினார்கள். அதே சமயத்தில் உட்புறமிருந்து பாறை அசைக்கப் பட்டதைக் கண்டு நல்லவேளையாக ஓடி ஒளிந்து கொண்டார்கள். காபாலிகை மட்டும் வெளியில் வந்தாள். அவள் குகை வாசலைவிட்டு அப்பால் போகும் சமயத்தில் குகைக்குள்ளே போய்ப் பார்க்கலாம் என்று காத்திருந்தார்கள். பகலெல்லாம் அவள் குகைத் துவாரத்தை விட்டு அசையவில்லை. சாயங்கால வேளையில் அவள் கொஞ்சம் அப்பால் போன சமயம், குண்டோதரனை வெளியில் நிறுத்திவிட்டுச் சத்ருக்னன் மட்டும் குகைக்குள் நுழைந்தான். அப்பா! அந்தக் குகையின் பயங்கரத்தை நினைத்தால் இனிமேல் வாழ்நாள் முழுதும் இரவில் தூக்கமே வராது. அப்படி மனிதரின் மண்டை ஓடுகளும் எலும்புகளும் அங்கே குவிந்து கிடந்தன. நாற்றமோ சகிக்க முடியவில்லை. குகைக்குள்ளே ஒரே இருட்டாகயிருந்த படியால் அதற்குள் சுரங்க வழி இருக்கிறதா என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. திடீரென்று கொஞ்சம் தெரிந்த வெளிச்சமும் மறைந்துவிட்டது. சத்ருக்னன் தான் நுழைந்து வந்த துவாரம் எங்கே என்று பார்த்தான். துவாரம் இருந்த இடம் தெரியவில்லை. காபாலிகை வெளியில் இருந்தபடியே குகைத் துவாரத்தை அடைத்துவிட்டாள் என்று ஊகித்ததும்

அவன் அடைந்த திகிலைச் சொல்ல முடியாது. கபாலங்களும் எலும்புகளும் கும்மிருட்டும் துர்நாற்றமும் நிறைந்த அந்தப் பயங்கரக் குகைக்குள்ளே அவன் எத்தனை நேரம் கழித்தானோ தெரியாது. எவ்வளவோ முயற்சி செய்தும் துவாரம் இருந்த இடத்தையே அவனால் கண்டு பிடிக்க முடியவில்லை.

நாலு யுகங்கள் என்று தோன்றிய காலம் அவன் அந்த இருண்ட குகைக் குள்ளே அங்குமிங்கும் பயனின்றி அலைந்து உழன்ற பிறகு திடீரென்று சிறிது வெளிச்சம் ஒரு பக்கத்தில் காணப் பட்டது. குகையின் துவாரம் திறந்தது. காபாலிகை உடனே உள்ளே நுழைந் தாள். அவள் கையில் ஒரு மனிதக் கபா லமும் எலும்புகளும் கொண்டு வந்தாள். சத்ருக்னன் குகையின் ஒரு கோடியில் சென்று பாறைச் சுவரோடு ஒட்டிக் கொண்டு நின்றான். காபாலிகை கையில் கொண்டு வந்த கபாலத்தையும் எலும்பு களையும் ஓரிடத்தில் தனியாகப் பத்திரப் படுத்தி வைத்த பிறகு குகையின் மத்தி யில் தரையில் உட்கார்ந்து ஒரு பெரிய பாறாங்கல்லைப் பெயர்த்தாள். பெயர்த்த இடத்தில் அவள் இறங்கியபோது, அது தான் சுரங்க வழியாயிருக்க வேண்டும் என்று சத்ருக்னன் ஊகித்துக் கொண் டான். இத்தனை நேரம் அந்தப் பயங் கரக் குகையில் ஆகாரம் தண்ணீர் இன் றிக் காத்திருந்தது வீண் போகவில்லை என்று எண்ணிச் சந்தோஷப்பட்டான். சுரங்கத்தில் இறங்கிய காபாலிகை தன் மனத்தை மாற்றிக் கொண்டாள் என்று தோன்றியது. மறுபடியும் மேலே ஏறி னாள். திறந்த சுரங்கவாயை மறுபடியும் மூடிவிட்டு அதன்மேல் படுத்துத் தனக் குத் தானே பேசிக் கொண்டிருந்தாள். அவளுடைய பேச்சிலிருந்து சில முக்கிய விஷயங்கள் தெரியவந்தன. அவள் நாக நந்தி என்கிற புத்த பிக்ஷுவை காதலித் தாள் என்றும், அதன் காரணமாகச் சிவ காமியைத் துவேஷித்தாள் என்றும், புலி கேசி இறந்து விட்டான் என்றும், அவனு டைய எலும்பையும் கபாலத்தையும் தான் அவள் சற்றுமுன் குகைக்குள் கொண்டு வந்தாள் என்றும், நாகநந்தி பிக்ஷு புலிகேசியைப் போல் வேஷம் போட்டு நடித்து வாதாபிச் சக்கரவர்த்தி யாகி, சிவகாமியைச் சக்கரவர்த்தினி யாக்க விரும்புகிறார் என்றும் அதைத் தடுக்க இந்தக் காபாலிகை கங்கணம் கட் டிக் கொண்டிருக்கிறாள் என்றும் தெரிந் தது. வெகு நேரம் இப்படி அவள் தனக் குத்தானே பிதற்றிக் கொண்டிருந்த பிறகு மௌனமானாள். அவள் தூங்குகிறாள் என்று எண்ணிய சத்ருக்னன் அந்தச் சம யத்தில் தப்பி வெளியேறத் தீர்மானித் தான். திறந்திருந்த குகைத் துவாரத்தை நோக்கி மெள்ள மெள்ள அடிவைத்து நடந்தான். துவாரத்துக்கருகில் வந்ததும் விரைவாக அதில் நுழைந்து வெளியில் குதித்தான். குதித்த அதே சமயத்தில் அவனுடைய ஒரு கையைக் குகைக்குள் ளேயிருந்து யாரோ பற்றினார்கள். சத் ருக்னன் திடுக்கிட்டுப் பார்த்தான். காபாலிகை குகையின் உட்புறத்தில் நின்ற படி அவனுடைய ஒரு கையைக் கெட்டி யாகப் பிடித்துக் கொண்டு பயங்கரமாக உறுமினாள். சத்ருக்னனுடைய சப்த நாடியும் ஒடுங்கிவிட்டது. 'செத்தோம்' என்று எண்ணிக் கொண்டான். ஆயினும் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளக் கடைசி முயற்சியாகக் கையைத் திமிறினான். எனினும், காபாலிகையின் இரும்புப் பிடியிலிருந்து அவனால் விடுவித்துக் கொள்ள முடியவில்லை.

காபாலிகை அப்போது, "லம்போதரா! லம்போதரா" என்று கூவினாள். "இதோ வந்துவிட்டேன், தாயே!" என்று குண் டோதரன் பக்கத்துப் பாறை மறை விலிருந்து ஓடிவந்ததைப் பார்த்ததும் சத் ருக்னனுக்கு வியப்பினால் வாய் அடைத் துப் போயிற்று. சத்ருக்னனைப் பார்த்துக் குண்டோதரன் கண்களினால் சமிக்ஞை செய்து கொண்டே அவனருகில் ஓடி வந்தான். குகையின் உள்ளே நின்ற காபாலிகை, "லம்போதரா! இந்தத் திருட்டு ஒற்றனைச் சற்றே பிடித்துக் கொள். கத்தியை எடுத்துக் கொண்டு வரு கிறேன். விட்டு விடமாட்டாயே?" என் றாள். "ஒரு நாளும் விடமாட்டேன்.

அம்மா! இவனை முதல் பலி நானே கொடுக்கப் போகிறேன்!'' என்று சொல்லிச் சத்ருக்னனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் குண்டோதரன். காபாலிகை உள்ளே சென்றாள். உடனே குண்டோதரன் சத்ருக்னனுக்குச் சமிக்ஞை காட்டிப் பிடியையும் தளர்த்த, சத்ருக்னன் தன்னை விடுவித்துக் கொண்டு ஓடினான். குண்டோதரன் பெருங் கூச்சல் போட்ட வண்ணம் அவனைத் துரத்திக் கொண்டு ஓடினான். கொஞ்ச தூரத்தில் ஒரு பாறை மறைவுக்கு



## அருள்வாக்கு

நாம் எல்லோரும் ஸ்வயஞ்ஜ்யோதியான ஆத்மாதான் என்றாலும் அது நமக்கே தெரியாதபடி கர்மா மேகமாக மறைக்கிறது. கர்மா மூடிய ஜீவனை அதிலிருந்து வெளியிலே கொண்டு வர வேண்டிய பொறுப்பு நமக்கு இருக்கிறது. நம்மை லோகத்தில் வெறுமனே தனியாக விட்டு வைத்திருக்கவில்லை. பெண்டாட்டி, பிள்ளை குட்டி என்று சேர்த்து வைத்திருக்கிறது. இதுவும் கர்மாவால் ஏற்பட்டதுதான். கர்மவாஸனை ஒரு பக்கம் நம் மனஸுக்குள் அழுக்குகளை ஏற்றி ஆத்மாவை உணர முடியாமல் பண்ணுகிறதென்றால், கர்ம பந்தம் பல உறவுகளாக வந்து ஒரு வீட்டிலே கட்டிப் போட்டுக் கடமைகளைப் பண்ண வைக்கிறது. உடம்பு என்ற வீட்டுக்குள் இருக்கும் ஜீவன், அப்புறம் அந்த ஜீவனுக்கு பந்துக்கள் என்பவர்களால் ஏற்பட்டிருக்கும் வீடு, இவற்றுக்கு ஒருத்தன் பண்ண வேண்டிய கடமைகளைப் பண்ணினாலன்றி கர்மாவைத் தீர்க்க முடியாது. இத்தனை பழைய கர்மா பாக்கியை வைத்துக் கொண்டு இப்போதே ஆத்மா தெரியணும், ஈச்வரன் தெரியணும் என்றால் தெரியாது. ஸத்கர்மாவால் பாபகர்மாவைப் போக்கிக் கொண்ட பின்தான் மேகம் விலகி ஸூர்யப் பிரகாசம் தெரியும். இந்த ஸத்கர்மா பலவிதமான கடமைகள் ரூபத்தில் இருக்கிறது. ஆத்மஞானம் அல்லது ஈச்வர பக்தி என்று ஒரே ஆவேசமாகப் போகிற அபூர்வமான சில பேர்களுக்குத் தான் ஒரே flashல் கர்மா அறுந்து விழுமே தவிர, மெஜாரிடி ஜனங்களுக்கு ட்யூட்டிகளை சுத்தமாகப் பண்ணிப் பண்ணி ரொம்பவும் gradual ஆகத்தான் கர்மாவைப் போக்கிக் கொள்ள முடியும்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

வந்ததும் குண்டோதரன் நின்று, "சுவாமி! உங்களுடைய கதி என்ன ஆயிற்று என்று தெரிந்து கொள்வதற்காக இந்தக் காபாலிகையின் சிஷ்யப் பிள்ளை ஆனேன். என்னைப் பற்றிக் கவலை வேண்டாம். நான் இங்கிருந்து இவளைச் சமாளித்துக் கொள்கிறேன். நீங்கள் சீக்கிரம் போங்கள். கோட்டைத் தாக்குதல் ஆரம்பமாகி விட்டதாகத் தோன்றுகிறது!'' என்றான்.

''குகைக்குள்ளே சுரங்க வழி இருக்கிறது. குண்டோதரா! நான் போய்ச் சேனாதிபதியிடம் சொல்லி ஆட்களுடன் வந்து சேருகிறேன். அதுவரை நீ இந்த ராட்சஸியை எப்படியாவது சமாளித்துக் கொண்டிரு. அவளைச் சுரங்க வழியில் போக விடாதே!'' என்று சத்ருக்னன் சொல்லி விட்டு ஓட்ட ஓட்டமாகச் சேனாதிபதியைத் தேடி ஓடி வந்தான். பிறகு குண்டோதரனுடைய கதி என்ன ஆயிற்று என்பது சத்ருக்னனுக்குத் தெரியாது.

மேற்கூறிய வியப்பும் பயங்கரமும் நிறைந்த வரலாற்றைக் கேட்டதும், சேனாதிபதி பரஞ்சோதி, ''சத்ருக்னா! ரொம்பவும் அவசரமான சமயத்தில் இப்படிப்பட்ட முக்கியச் செய்தியைக் கொண்டு வந்திருக்கிறாய். நன்றாய் யோசிப்பதற்குக் கூட நேரம் இல்லை. கோட்டைத் தாக்குதலோ ஆரம்பமாகி விட்டது. நாளைப் பொழுது விடிவதற்குள் கோட்டைக்குள் பிரவேசித்து விடுவோம். எல்லாவற்றுக்கும் நீ நூறு வீரர்களுடன் அந்தக் காபாலிகையின் குகை வாசலுக்குப் போ! சுரங்க வழி மூலமாக யாரும் வெளியில் தப்பித்துக் கொண்டு போகாமல் பார்த்துக் கொள். முடிந்தால் நீயும் குண்டோதரனும் சுரங்க வழியாகக் கோட்டைக்குள்ளே வந்து சேருங்கள். கோட்டை வாசல் திறந்ததும் நான் நேரே சிவகாமி தேவியின் வீட்டிற்குச் செல்கிறேன். கணேசரின் கருணை இருந்தால் சிவகாமி தேவியைக் காப்பாற்றி ஆயனரிடம் ஒப்புவிக்கும் பாக்கியம் நமக்குக் கிடைக்கும்" என்று கவலையோடு கூறினார்.

(தொடரும்)

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**
Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 24344442, 24327764 TUESDAY HOLIDAY
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**PROPRIETOR : P. RAVINDHIRAN**

எங்கு ஜோதிடம் பார்த்தாலும் **P.R.** ஜுவல்லரிக்கு வந்து ரூ.400/-க்கு ராசிக்கல் வாங்கி பயன் பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.

| ராசி | ராசிக்கல் | வெள்ளி மோதிரம் விலை | |
|---|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | பவழம் - | 2 CARAT | 400/- |
| ரிஷபம், துலாம் | வைரம் - | 5 CENT | 2250/- |
| மிதுனம், கன்னி | மரகத பச்சை - | 20 CENT | 400/- |
| கடகம் | முத்து - | 2 CARAT | 400/- |
| சிம்மம் | மாணிக்கம் - | 20 CENT | 400/- |
| தனுசு, மீனம் | புஷ்பராகம் - | 1 CARAT | 400/- |
| | கனகபுஷ்பராகம் - | ½ CARAT | 1000/- |
| மகரம், கும்பம் | நீலம் - | 20 CENT | 400/- |



எங்களிடம் நியூமராலஜிபடியும் கல் மோதிரங்கள் கிடைக்கும்.

**TOPAZ, MOONSTONE, AMETHYST, TARQUISE, TIGER EYE, BLOOD STONE, OPAL, AQUAMARINE.**

மதர் மோதிரம், மதர் டாலர் தங்கத்திலும், வெள்ளியிலும் ரெடியாக கிடைக்கும்.

தங்கத்தில் ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 1800/- முதல் 5000/-ம் வரை உடனே கிடைக்கும்.

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபக சக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும்.

தபால் மூலம் மோதிரம் 1க்கு ரூ 450/-

M.O. (or) D.D. அனுப்பவும்.

தபால் எழுதினால் முழு விவர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

குறிப்பு : தினசரி காலை ராஜ் டீவியில் 6.55 மணிக்கு சிறப்புப் பேட்டியை பார்க்கவும்

கடகராசி - முத்து * சிம்மராசி - மாணிக்கம் * தனுசு ராசி, மீனராசி - புஷ்பராகம் * மகரராசி, கும்பராசி - நீலம் *

மேஷ ராசி, விருச்சிக ராசி- பவழம் * ரிஷப ராசி, துலாம் ராசி - வைரம் * மிதுன ராசி, கன்னி ராசி - மரகத பச்சை

# ஜெயிச்சாச்சு!

ரூ.50,000 பரிசு!

## கோவை மாவட்டம் பரிசுப் போட்டி முடிவு

**கோ**வை மாவட்ட வாசகர்களுக்கான போட்டியில் ஏரானமான கூப்பன்களை அனுப்பி, கல்கி ஆசிரியர் குழுவை திக்குமுக்காட வைத்துவிட்டனர் வாசகர்கள். அவர்களில் முப்பத்தாறு கேள்விகளுக்கும் சரியான விடை எழுதியவர்கள் ஆறு பேர். இவர்களில் குலுக்கல் முறையில் ரூ.50,000 பரிசை மொத்தமாக அள்ளிக் கொண்டார் வேலாண்டிப்பாளையம் வாசகர்

**டி.வி. ஸ்ரீநிவாஸன்,**

**46F, ஜானகி நகர், சாஸ்திரி ரோடு, வேலாண்டிப்பாளையம் அஞ்சல், கோவை - 25.**

ஆறுதல் பரிசுகளாக விடைகளைச் சரியாக எழுதிய மற்றவர்களுக்கும் ஒன்று, இரண்டு விடைகளைத் தவறாக எழுதியவர்களுக்கும், பி.ஆர். ஜுவல்லரி வழங்கும் வெள்ளி காமாட்சி விளக்குகள் அனுப்பப்படும்.

போட்டியில் ஆர்வமுடன் கலந்து கொண்ட அனைவருக்கும் நன்றி.

## ரூ.50,000 பரிசு குவிஸ் போட்டிக்கான வினா - விடைகள்.

### குவிஸ் போட்டி - 1

1. 'தென்னக **மான்செஸ்டர்**' எனக் குறிப்பிடப்படுகிறது கோயமுத்தூர்.

2. பிரபல காவியக் காதலி ஒருத்தியின் பெயர் கொண்ட கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ள அணை **அமராவதி**.

3. கோயமுத்தூருக்குக் கிழக்கே அமைந்துள்ளது பெரியார் பிறந்த **ஈரோடு** மாவட்டம்.

4. படப்பிடிப்புகளுக்குப் பெயர் பெற்ற ஐந்தெழுத்து நகரம் **பொள்ளாச்சி**.

5. சத்யமங்கலத்தில் உள்ளது பிரபல **பண்ணாரி** அம்மன் கோவில்.

6. வெட்கிரைண்டரைக் கண்டுபிடித்த பெருமை **கோவை** நகருக்கு உண்டு.

### குவிஸ் போட்டி - 2

1. பேரூர் பட்டீஸ்வரர் கோயிலைக் கட்டிய மன்னனின் பெயர் **கரிகாற்சோழன்**.

2. பனியன் உற்பத்தி, கொடி காத்த குமரன் என்றெல்லாம் குறிப்பிட்டவுடன் நினைவுக்கு வரும் ஊர் **திருப்பூர்**.

3. கோவையிலிருந்து பத்துக் கிலோ மீட்டர் தொலைவில் **பீளமேடு** என்ற பகுதியில் அமைந்துள்ளது விமான நிலையம்.

4. கோவை மாநகராட்சியால் நிர்வகிக்கப்படும் (ஒரு மினி ஜூ அடங்கிய) பூங்கா, பிரபல சுதந்தரப் போராட வீரர் **வ.உ.சி.** பெயரில் விளங்குகிறது.

5. கோவைக்கு அருகிலுள்ள தீம் பார்க் **பிளாக் தண்டர்**. (பெயரில் இடி இடிக்கும்).

6. கோவை அருகே சிவன், பிரம்மா, விஷ்ணு மூவருக்கும் சேர்த்து அமையப் பெற்ற கோயில் **கொடுமுடி நாதேசுவரர் கோயில்**.

### குவிஸ் போட்டி - 3

1. கோவை மாவட்ட ஆட்சியாளரின் பெயர் **முருகானந்தம்**.

2. **ம.தி.மு.க.** கட்சித் தலைவரின் பெயரைத் திருப்பி போட்டால் இந்த குவிஸ் தொடர்பான ஊரின் பெயர் கிடைத்துவிடும்.

3. கோவை அருங்காட்சியகம் **மேட்டுப் பாளையம்** சாலையில் உள்ளது. (தற்போது காட்டூரில் காளீஸ்வரா நகர் என்ற இடத்திற்கு மாற்றப்பட்டுள்ளதாக கோவை வாசகர் கோபாலன் தெரிவித்துள்ளார். இந்த இடத்தின்



பெயரும் சரியான விடையாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது).

4. சினிமா தயாரிப்பாளர் தேவருக்கு உகந்த முருகனின் திருத்தலம் **மருதமலை.**

5. வ.உ.சி. பூங்காவுக்கு எதிரே உள்ள **நேரு** மைதானத்தில் கால்பந்துப் போட்டிகள் வழக்கமாக நடைபெறும்.

6. பல துறைகளிலும் அரிய கண்டுபிடிப்புகள் செய்த கோவையின் மறைந்த பிரபல விஞ்ஞானி **ஜி.டி. நாயுடு.**

**குவிஸ் போட்டி - 4**

1. 'கோவை ***சரளா***' ஒரு பிரபல நகைச்சுவை நடிகை.

2. பொள்ளாச்சியிலிருந்து 35 கிலோ மீட்டர் தூரத்தில் ஆனைமலையில் உள்ள டூரிஸ்ட் ஸ்பாட் **டாப்ஸ்லிப்.**

3. கோவை நகருக்குள்ளே திருச்சி ரோட்டில் இருக்கிறது '**சிங்காநல்லூர்** போட் ஹவுஸ்.'

4. மேட்டுப்பாளையத்தில் உள்ளது பிரபல **வனபத்ரகாளி** அம்மன் கோயில்.

5. 'ஸ்ரீகிருஷ்ணா' **மைசூர்பா** ஸ்வீட் வகைக்குப் பெயர் பெற்றது.

6. பிற்காலத்தில் மகாராஷ்டிர ஆளுனராகவும் விளங்கிய **சி.எஸ்.** ***(சி.சுப்ரமணியம்)*** கோவை செங்குட்டுப்பாளையத்தில் பிறந்தவர்.

**குவிஸ் போட்டி - 5**

1. அகழ்வாராய்ச்சி நடக்கும் கொடுமணல் என்ற கிராமம் **நொய்யல்** ஆற்றங் கரையில் உள்ளது.

2. டாப்ஸ்லிப்பிலிருந்து பரம்பிக்குளம் போகும் வழியிலுள்ள கன்னிமாரா பல நூறு ஆண்டு வயது கண்ட ஒரு **தேக்கு** மரம்.

3. கொங்கு மண்டலத்தில் மாடுகளுக்குப் பெயர் போன ஊர் **காங்கேயம்.**

4. இரண்டு ஜங்ஷன்களுக்கிடையே ஸ்டேஷன்களே இல்லாத இருப்புப்பாதை கோவைக்கும் **போத்தனூர்**க்குமிடையே உள்ளது.

5. காரமடை ரங்கநாதர் கோவிலில் மாசி மாதத்தில் நடைபெறும் '**பந்த** சேவை' வெகு பிரபலம்.

6. கோவையிலுள்ள நிரந்தரத் தொழில் கண்காட்சி மைதானம் '**கொடிசியா** டிரேட் ஃபேர் சென்டர்'

**குவிஸ் போட்டி - 6**

1. பிரபல நொய்யல் ஆறு **வெள்ளியங்கிரி** மலையில் உற்பத்தி ஆகிறது.

2. தனது விழிப்புணர்வுப் பாடல்களால் பெரும்புகழ் பெற்றவர் '**உடுமலை நாராயண கவி**'.

3. பல நகைச்சுவை நாடகங்களை எழுதி, நடித்துள்ள 'கோவை **அனுராதா** ' பெண் பெயரில் ஒளிந்துள்ள ஓர் ஆண்தான்.

4. கோவை **கடாம்பாறை** யில் நீர்மின் விசை உற்பத்தி செய்யப்படுகிறது.

5. கோவை - சிறுவாணி சாலையில் அமைந்துள்ள தீம் பார்க் '**கோவை கொண்டாட்டம்**'

6. முழுக்க பெண்களுக்கென இயங்குகிறது கோவை நகருக்குள்ளேயே அமைந்த **அவினாசி லிங்கம்** நிகர்நிலைப் பல்கலைக்கழகம்.

**வாழ்த்துக்கள்!**

# ஆதீனங்களுக்கு எதற்கு அரசியல்?



**ஆதீனத்திற்குச் சொந்தமான கடைகள், வீடுகள் போன்றவற்றுக்குக் கிடுக்கிப் பிடி போட்டு வாடகை வசூல் செய்பவர்; தீவிர அரசியலில் ஆர்வம் கொண்டவர்; காலத்திற்கு ஒவ்வாத ஆதீனச் சம்பிரதாயங்களைக் கடைப் பிடிப்பவர்; இலங்கைத் தமிழருக்காக இரண்டு முறை உண்ணாவிரதமிருந் தவர் என்று பரபரப்புக்குப் பஞ்சமில் லாதவர், இருநூற்றுத் தொண்ணூற்று இரண்டாவது குருமகா சன்னிதானமான மதுரை ஆதீனம்! இடக்கு மடக்குக் கேள்விகளோடு அவரைச் சந்தித்தோம்!**

**ஆதீனங்கள் நீதிமன்றத்திற்கு வரக் கூடாது என்று பேட்டி கொடுத்திருக் கிறீர்களே?**

மூத்த ஆதீனமான மதுரை ஆதீனம் தொடங்கி, சிருங்கேரி சாரதாபீடம் வரை, ஆதீன கர்த்தர்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கோ, அரசு அலுவலகங் களுக்கோ, நீதிமன்றங்களுக்கோ செல் வதில்லை. குறிப்பாக நீதிமன்றத்திற்குச் செல்வதே இல்லை. ஏதேனும் வழக்கு விசாரணை என்றால், நீதிபதிகள் நேரில் ஆதீன மடத்திற்கு வந்து விசாரித்து விட்டுச் செல்ல வேண்டும். அதேபோல் ஆதீனங்கள் புதிதாகச் சொத்து வாங்கினாலும் விற்றாலும், ரிஜிஸ்டரார் ஆதீனத்திற்கு வந்து போவது தான் வழக்கம். ஆதீனங்களுக்குத் துப்பாக்கி லைசென்ஸ் வேண்டும் என்றால், விசார ணைக்கு கலெக்டர் நேரில் வர வேண்டும். இதுதான் பாரம்பரியம். இதுதான் மரபு.

**நீங்கள் தொடங்கிய அகில இந்திய இந்து மக்கள் அருளாட்சிக் கழகம் என்னவாயிற்று?**

இப்போது அந்த இயக்கம் செயல்பட வில்லை.

**மடாதிபதிகள், ஆதீனங்கள் அரசியலில் ஈடுபடுவது சரியா? அயோத்தி போன்ற சென் சிடிவ் பிரச்னைகளில் தலையிடுவது முறையா?**

சமயம் சார்ந்த பிரச்னைகளை சமயத் தலைவர்களிடம்தான் விட வேண்டும். அதில் அரசின் பங்கு இருக்கலாமே தவிர, சமயத் தலைவர்கள் இல்லாமல் இது போன்ற பிரச் னைகளைத் தீர்த்து விட முடியாது. அயோத்தி பிரச்னை பற்றிப் பேசுவதாலோ, சில கருத்துகளை எடுத்து வைப்பதாலோ அரசியலில் ஈடுபடுவதாகச் சொல்ல முடி யாது.

**உங்களைப் போன்ற ஒரு மதகுரு அற நிலையத்துறை அமைச்சராக வரலாம் என்று நீங்கள் விருப் பம் தெரிவித்ததாக, கடந்த தேர்தலின் போது தகவல்கள் வெளியானதே... உண் மையா?**

இதில் துளிக்கூட உண்மை இல்லை! மத வாதிகள், குருமார்கள் என சமயத் துறையைச் சார்ந்த தலைவர்கள் யாராக இருந்தாலும், இந்தத் தவறைச் செய்து விடக் கூடாது. அப்படி வந்தால் முதலமைச்சரின் கீழ் பணி புரிய வேண்டி இருக்கும். இது ஆதீன மரபுக்கு எதிரானது. மந்திரிகள் ஆட்சியாளர்கள் எல் லோரும், நமக்குக் கீழே இருந்து நமது ஆலோ சனைகளைக் கேட்டுச் செயல்படுத்த வேண் டுமே தவிர, நாம் அவர்களது தலைமை யின்கீழ் பணியாற்றக் கூடாது. முடியாது.

**அப்படியானால் கடந்த தேர்தலில் நீங்கள் தி.மு.க சார்பில் மதுரைத் தொகுதி ஒன்றில் போட்டியிடப் போவதாக வந்த தகவல்களும் வதந்திதானா?**

வதந்தி என்று நீங்களே சொல்லி விட் டீர்கள். நேரம் வீணாகிறது. போய் வாருங் கள்!

(கை நிறையத் திருநீறு தந்து அனுப்புகிறார்.)



# மணக்கும் மதுரை மார்க்கெட்!

விடிந்தும் விடியாத அதிகாலைப் பொழுது. மதுரை மீனாட்சி அம்மன் கோவிலின் வலப்புறம் உள்ள அந்தப் பூ மார்க்கெட் பரபரப்பான நெரிசலுடன் காணப்படுகிறது. மல்லிகை மொட்டுகள் கூடைகூடையாக ஏற்றப் படுகின்றன. அடுத்த சில நிமிடங்களில் அவை விமானங்களில் ஏறி, இந்திய நகரங்களுக்கும், வெளிநாடுகளுக்கும் பயணம் செய்கின்றன. இது மதுரையின் அன்றாடக் காட்சி.

மதுரை நகருக்குள் அதிகாலை ஐந்து மணி யிலிருந்து இரவு ஏழு மணி வரை, மல்லிகை மொட்டுகளை எப்போது வேண்டுமானாலும் வாங்கலாம்... மணம் வீசும் மல்லிகையின் பின்னணியை அறிய மதுரை நகரைக் கடந்து சுமார் இருபது கிலோ மீட்டர் தூரம் பயணம் செய்ய வேண்டும்.

திருப்பரங்குன்றம் மலையைச் சுற்றி காமராஜர் பல்கலைக் கழகம் வரை உள்ள மதுரை புறநகர்ப் பகுதியில், சுமார் முப்பது கிராமங்களை உள்ளடக்கிய பகுதி அது. இரண்டாயிரத்து ஐந்நூறு ஏக்கர் பரப்பளவில் விவசாயிகள் மல்லிகை சாகுபடி செய்கிறார்கள்.

"அதிகாலையில் நான்கு மணியிலிருந்து மதியம் ஒரு மணி வரை மல்லிகைப் பூ பறிப்போம். ஒரு ஆள் ஒரு நாளைக்கு சுமார் நான்கு கிலோவிலிருந்து ஐந்து கிலோ வரை பறிப்போம். கூலி ஒரு நாளைக்கு பதினைந்து ரூபாயிலிருந்து இருபது ரூபாய் வரை கிடைக்கும்" என்கின்றனர் இந்தப் பகுதி பெண் விவசாயக் கூலிகள்.

"ஓர் ஏக்கருக்கு ஆயிரம் மல்லிகைச் செடிகள் நடலாம். நடவு செய்த ஒரு மாதத்திலிருந்து மல்லிகைப் பூ கிடைக்கும். ஐந்து முதல் ஆறு வருடங்கள் வரை தொடர்ச்சியாகப் பலன் அடையலாம். மழைக் காலங்களில் மல்லிகைப் பூ கிடைக்காது. புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில் மல்லிகைச் சாகுபடி அவ்வளவாக இருக்காது" என்கிறார் ஆவுடையம்மாள்... மல்லிகைத் தோட்ட உரிமையாளர்.



''மல்லிகைத் தோட்டம் உள்ள உங்களுக்கு மல்லிகைப்பூவின் மீது ஆசை கிடையாதா?'' என்று கேட்டபோது "வெளியூர் செல்லும் போது அல்லது விழாக்காலங்களில் மட்டும் தலையில் வைத்துக் கொள்வோம். மற்ற நாட்களில் விருப்பமில்லை'' என்கின்றனர் கோரஸாக.

மதுரை மார்க்கெட்டில் குவிந்து கிடக்கும் மல்லிகை மொட்டுகளைப் பார்க்கும்போது அள்ளிக்கொள்ள ஆசை வரும்... மலைபோல்

• மல்லிகைத் தோட்டம்





குவிந்து கிடக்கின்றன.

"காலையில் ஐந்து மணிக்கு வரும் பூவுக்குத் தான் கூடுதல் விலை கிடைக்கும். அந்த நேரத்தில் வரும் பூக்களையெல்லாம் வெளிநாடுகளுக்கு விமானம் மூலம் அனுப்பி விடுவோம். அதற்கு அடுத்து வரும் பூக்களுக்கு ஒரு மணி நேரத்திற்கு ஒரு முறை விலை குறையும். காலை ஐந்து மணியிலிருந்து இரவு ஏழு மணி வரை மார்க்கெட்டுக்குப் பூ வரும். விலை வித்தியாசத்திற்காக ஒவ்வொரு விவசாயியும் பூ பறிக்கப் பறிக்க, மார்க்கெட்டிற்குக் கொண்டு வந்து விடுவார்கள்.

மல்லிகை மொட்டுகள் தேக்கம் ஏற்படும் போது, அதை வாசனைத் திரவியமாக மாற்றும் தொழிற்சாலையும் வைத்திருக்கிறார்களாம் பெரிய வியாபாரிகள்.

"நான் எம்.ஏ., பி.எட். படிச்சிருக்கேன். வேலை கிடைக்கவில்லை. மூன்று ஏக்கரில் மல்லிகை விவசாயம் பண்ணுகிறேன். காலையில் முப்பது ரூபாய்க்குப் போன மல்லிகை இப்ப மணி சாயங்காலம் ஆறு ஆச்சு, கிலோ மூன்று ரூபாய்க்குக் கொடுத்து விட்டுப் போகிறேன். மல்லிகைப் பூவின் விலையை விவசாயிகள் நாங்க நிர்ணயம் பண்ண முடியலை. வாங்குகிற வியாபாரிங்க முடிவு செய்யுறாங்க. போதிய விலை கிடைக்கலைன்னா, வியாபாரிங்க சென்ட்டாக மாற்றி விடுகிறார்கள். எங்களுக்கு அந்த வசதியில்லை. விவசாயிகள் கூடி விலை நிர்ணயம் பண்ண முடியலே. ஏற்றுமதி செய்யும் பூவுக்கெல்லாம் விலையே சொல்லாமல் கொள்முதல் பண்ணுகிறார்கள்" என்று குமுறுகிறார் துரை என்கிற பட்டதாரி விவசாயி.



• துரை

அடுத்த கட்டமாக பூவைக் கட்டி விற்கும் சிறிய பூக்கடைகளுக்குச் சென்றோம். மல்லிகைப் பூவைச் சரமாகத் தொடுக்கும் அந்த அழகு தமிழ்நாட்டிலேயே மதுரையை விட்டால் வேறு எங்கும் காண முடியாது. அந்த அளவிற்கு அழகாகத் தொடுப்பவர்கள் மதுரை பூ வியாபாரிகள்...

பறிக்கும் இடத்திலிருந்து சரமாக வாங்கும் வரை, மல்லிகை மொட்டுகளாகவே மதுரையில் வாங்கலாம். பல சமயங்களில் மல்லிகை மொட்டுகளைச் சரமாகத் தொடுத்துபின் ஐஸ் கட்டிகளுக்கு மத்தியில் வைத்து விடுகிறார்கள். மறுநாள் வரை மலராமல் மொட்டாகவே வைத்து விற்பனையும் செய்து விடுகிறார்கள்!

படங்கள் : 'பைரவி' முருகன்

அட்டை மாடல் : ஊர்வம்பு லட்சுமி

படம் : ஸ்ரீஹரி

• ஆவுடையம்மாள்



# பாப்பாப்பட்டி பலியாடு!

*18.10.2003 காலை 11 மணி*

உசிலம்பட்டியிலிருந்து படுமட்டமான புராதனச் சாலைகள் வழியே சவாலான பயணம். படு அமைதியாக இருக்கிறது ஊர். பாப்பாப்பட்டி கிராமத்துச் சாவடியில் படுத்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தனர் பாதுகாப்புக்கு வந்திருந்த பத்துப் பன்னிரண்டு போலீசார். இங்கே பஞ்சாயத்துத் தேர்தல் நடந்து முடிந்து, தலித் சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவர், ஊராட்சி மன்றத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்பதை நம்புவதே கொஞ்சம் சிரமமாகத்தான் இருந்தது. அதுவும் இங்கே நானூற்று அறுபத்தேழு தலித் வோட்டுக்கள் மட்டும்தான். ஆனால் வெற்றி பெற்ற அழகர் பெற்றிருப்பதோ, தொள்ளாயிரத்து எழுபது வாக்குகள்! "மீத வோட்டையெல்லாம் எங்க தேவர் சமுதாயத்து ஜனங்கதான் போட்டாக. எதுக்கு? அ.தி.மு.க காரங்க, மதுரையிலேருந்து இங்கே ஒரு ஆளைக் கொண்டு வந்து நிறுத்தினாங்க. நாங்க ஒரு உள்ளூர் ஆளை நிறுத்தலைன்னா, வெளியூர்க்காரன் 'அன்னப் போஸ்ட்' ஆயிடுவான். அதுக்காகத்தான் அழகரை நிறுத்தினோம். இரண்டாயிரம் தேவர் வோட்டுக்கள் கொண்ட பாப்பாப்பட்டியைப் பொதுத் தொகுதியா மாத்துறதுலே, இந்த அரசியல்வாதிகளுக்கு என்ன கஷ்டம்?" என்கிறார் பி.ஏ பட்டதாரியான தேவர் சமுதாய இளைஞர் முருகன்!



• நடுங்கும் அழகர்

பாப்பாப்பட்டியின் புதிய பஞ்சாயத்துத் தலைவர் அழகரைத் தேடினோம். ஊர் நடுவே இருந்த பஞ்சாயத்து மரத்தடி மேடையில், குத்துக்காலிட்டு பயத்தோடு உட்கார்ந்திருந்தார். அவர் உயிருக்குப் பாதுகாப்புக் கொடுத்து, நிழல் போல் பின் தொடரும் போலீசார் இருவரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர். பயந்து, மருண்டு, வார்த்தைகளை விழுங்கியபடியே பேசினார் அழகர்.



• பிச்சையா

"எனக்கு எழுதப் படிக்கத் தெரியாதுங்க. கையெழுத்து மட்டும்தான் போடுவேன். தேவர் மக்கள், 'நீ நில்லுடா, நாங்க ராஜினாமா செய்யச் சொல்லும்போது செஞ்சாப் போதும்'ன்னாங்க. அவங்க வயல்லே வேலை செஞ்சு நாங்க வயித்தைக் கழுவுறோம். அதனாலே அவங்க வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்து நின்னேன். இங்கே அவங்களை எதிர்த்துகிட்டு நாங்க வாழ முடியாது. அதே மாதிரி அவங்



• போலீஸ் காவலில்...



களும் எங்களைத் தரக்குறைவா நடத்துறது இல்லே. இங்கே தீண்டாமை கெடையாது. ஆனால் என்னை மாதிரி தாழ்த்தப்பட்டவன் தலைவரா வர்றதை அவங்க விரும்பலை. அவங்களுக்கு அது கௌரவப் பிரச்னை...'' என்று பேசிக் கொண்ட போனவரை இடைமறித்து, "தேவர் சமுதாயத்தினர் உடனே ராஜினாமா செய்யச் சொன்னால் செய்வீர்களா? இல்லை மறுப்பீர்களா? என்ற போது "ஊர்ப் பொல்லாப்பு எனக்கெதுக்கு?" என்று தலையைக் குனிந்து கொண்டார்.

**20.10.2003 காலை 11 மணி**

உசிலம்பட்டி தாசில்தார் முன்னிலையில் பாப்பாப்பட்டி பஞ்சாயத்துத் தலைவராகப் பதவியேற்று, அதற்கான சான்றிதழ்களைப் பெற்றுக் கொள்கிறார் அழகர். அடுத்த வினாடி, கையோடு கொண்டு வந்திருந்த ராஜினாமாக் கடிதத்தை அதிகாரிகளிடம் நீட்டுகிறார். அதிர்ந்து போய் வேறு வழியில்லாமல் பெற்றுக் கொள்கிறார்கள். தமது ராஜினாமாவுக்குக் காரணம் சக தலித் மக்களின் மிரட்டல் என்பதாக, கடிதத்தில் அழகர் குறிப்பிட்டிருக்கும் காரணத்தைப் படித்துப் பார்க்கும் அதிகாரிகள், 'இது என்ன புதுக்கதை?' என்று மண்டையைப் பிய்த்துக் கொள்கிறார்கள்.

* பரிதாபப்படும் சுப்பன்



# நேரடி ரிப்போர்ட்

**உண்மை நிலவரம்:**

மதுரை, தேனி நெடுஞ்சாலையிலிருந்து நீண்ட தொலைவில் உள்ள பாப்பாப்பட்டி, கீரிப்பட்டி, நாட்டாமங்கலம் போன்ற மலையடிவார கிராமங்கள், முல்லை பெரியாறு அணைப் பாசனத்தை நம்பியிருப்பவை. பாப்பாப்பட்டி பஞ்சாயத்தில் கரையான்பட்டியிலும், நாட்டாமங்கலம் பஞ்சாயத்தில் நாகலாபுரம், சர்க்கரைப்பட்டி, அய்யம்பட்டி ஆகிய ஊர்களிலும், தலித் மக்கள் வசித்து வருகிறார்கள். கீரிப்பட்டியில் தேவர் சமுதாய குடியிருப்புகளுக்கு அருகிலேயே தலித் மக்கள் வசித்து வருகின்றனர். இந்த பஞ்சாயத்துக்களில் இதுவரை ஒருமுறைகூட ஜாதிச் சண்டை வந்தது கிடையாது. அப்புறம் ஏன் தலித்துகளுக்கு என்று அறிவிக்கப்பட்ட பஞ்சாயத்துகளை, தேவர் சமுதாய மக்கள் ஏற்க மறுக்கிறார்கள்!




"எங்களைவிட ஒரு வோட்டு அவங்களுக்கு அதிகமிருந்தாலும் பரவாயில்லீங்க. ஆனால் பாருங்க, கொட்டக்காச்சியேந்தல்ன்னு தலித் மக்களுக்காக ஒதுக்கப்பட்ட ஒரு பஞ்சாயத்து. இங்கே மொத்தமே நாலு தலித் குடும்பம்தான் குடியிருக்காங்க. மொத்தம் இங்கே எட்டு தலித் வோட்டுக்கள்தான். பெரும்பான்மையாக இருக்கிற எங்க மக்கள் எப்படி வோட்டுப் போடுவாங்கன்னு எதிர்பார்க்கலாம்? இது ஒண்ணும் ஜாதி வெறி இல்லீங்க! வேணும்னே எங்க உணர்வுகளைக் கிண்டிப் பார்க்க நினைக்கிற அரசியல்வாதிகளோட சதிங்க" என்கிறார், தேர்தலே நடக்காத கீரிப்பட்டியைச் சேர்ந்த தேவர் சமுதாய இளைஞர் பிச்சையா.

''பாவம்ங்க அழகர்! பாப்பாப்பட்டிக்காரங்களுக்கு இந்த முறை அவர்தான் பலியாடு'' என்று பரிதாபமாகச் சொல்லும் சுப்பன், கடந்தமுறை கீரிப்பட்டியில் தலித் வேட்பாளராகப் போட்டியிட்டு, ஊராரின் மிரட்டலால் கடைசி நேரத்தில் வாபஸ் பெற்ற விவசாயத் தொழிலாளி. பஞ்சாயத்துத் தேர்தல் தொடர்ந்து சீர் குலைக்கப்படும் இந்த கிராமங்களில், தீண்டாமை என்பது வெளிப்படையாக இல்லாவிட்டாலும், உணர்வுகளைப் பயன்படுத்திக் கொண்டு அரசியல் நாடகம் நடத்துகிறார்கள் ஆட்சியாளர்கள்.



* முருகன்

# குறையொன்றுமில்லை

'ததிபாண்டன் வீட்டுப் பானைக்கு மோக்ஷம் கிடைத்தது. எப்படி' என்று பிள்ளை பெருமாள் அய்யங்கார் ரங்கநாதரிடம் கேட்கிறார்... ததிபாண்டனைப் பற்றித் தெரியுமல்லவா...

ததிபாண்டன் கோகுலத்தில் இருந்த கிருஷ்ண பக்தன். ஒரு சமயம் பகவான் அவன் வீட்டுக்குள்ளே நுழைந்தான். யசோதையும் கோபஸ்த்ரீகளும் குழந்தையைத் துரத்திக்கொண்டு வருகிறார்கள்.

ததிபாண்டன் நித்யம் குழந்தை கிருஷ்ணனுக்காக பானையிலே தயிர் எடுத்து வைப்பான். ஆனால் பகவான் அதைச் சாப்பிட வரமாட்டான்!

'வந்தாய் போலே வாராதாய்
வாராதாய் போல் வருவானே!'

- இதுதான் பகவானின் குணம்!

'வருவான் வருவான்' என்று நாம் நினைத்துக் கொண்டு காத்துக் கொண்டிருக்கிற வேளையில் அவன் வரமாட்டான். வரமாட்டான் என்று நாம் நினைத்துக் கொண்டிருந்தோமானால், திடீரென்று வந்து நிற்பான்!

நித்யம் தயிர் எடுத்து வைத்த ததிபாண்டன், அன்றைய தினம் அப்போதுதான் புதிதாகப் பானை வாங்கி வைத்திருந்தான். பெரிய பானை! இனிமேல்தான் அதிலே தயிரைக் கொட்ட வேண்டும். அதற்குள்ளே கிருஷ்ணன் வேகமாக ஓடி வந்தான். ஓடி வந்து, காலியான பானைக்குள்ளே ஏறி தொப்பென்று உள்ளே குதித்து உட்கார்ந்து கொண்டான்! அப்படியானால், பானை எவ்வளவு பெரிதாக இருந்திருக்கும் என்று பார்த்துக் கொள்ளுங்கள்!

குழந்தை உள்ளே குதிப்பதைப் பார்த்தான் ததிபாண்டன். அது தப்பித்து ஓடி வருகிறது என்பதைப் புரிந்து கொண்டான். 'சரியாகச் சிக்கிக் கொண்டாயிற்று!' என்று பானை மேலே மூடி போட்டது மாதிரி ஏறி உட்கார்ந்து கொண்டுவிட்டான், ததிபாண்டன்!

அவன் ஏறி உட்கார்ந்து கொண்டதுமே யசோதை வந்தாள்... கோபஸ்த்ரீகளெல்லாம் வந்தார்கள்.

"ததிபாண்டா! என் குழந்தை கிருஷ்ணன் இங்கே வந்தானா?..'' என்று கேட்டாள் யசோதை.

''கிருஷ்ணனா?... கிருஷ்ணனை நான் பார்த்து ஆறு மாசமாயிற்றே; இங்கே வரவேயில்லையே'' என்று அப்பட்டமான பொய்யை ரொம்ப அழகாகச் சொன்னானாம் ததிபாண்டன்.

பொய் சொன்ன ததிபாண்டனுக்கு மோக்ஷம் கிடைத்தது; உண்மையே சொன்ன தசரதனுக்கு ஸ்வர்கம்தான் கிடைத்தது என்கிறது புராணம்!

தசரதனுக்கு மோக்ஷம் கிடைக்கவில்லை. அதனால்தான் ஆசார்யர்கள் 'தசரதனைக் காட்டிலும் உத்தமமானவன் ததிபாண்டன்' என்று கொண்டாடுகிறார்கள்.

காரணமென்ன...?

விசேஷ தர்மம், சாமான்ய தர்மம் என சாஸ்திரத்தில் இரண்டு விதம் சொல்லப்பட்டிருக்கிறது.

சாமான்ய தர்மத்துக்குப் பக்கத்திலே விசேஷ தர்மம் வருமானால், சாமான்ய தர்மத்தை விட்டுவிட்டு, விசேஷ தர்மத்தைத்தான் நாம் கடைப்பிடிக்க வேண்டும். அமாவாஸை அன்றைக்கு கிரஹணம் வருகிறது என்று வைத்துக் கொள்வோம்... கிரஹண தர்ப்பணம்தான் பண்ண வேண்டும். அமாவாஸை தர்ப்பணத்தை அன்று விட்டுவிடலாம். ஏனென்றால் அன்றைய தினம் விசேஷ தர்மம் கிரஹணம்தான். அமாவாஸை தர்ப்பணம் பண்ணவில்லையே; அதையும் பண்ணுகிறேன் என்று நாம் பண்ணிக் கொண்டிருக்கக் கூடாது.

கிருஷ்ணம் தர்மம் சனாதனம்... கிருஷ்ணனாகிற தர்மத்தை ரக்ஷிப்பதற்காக சாமான்ய தர்மமாகிற உண்மை பேசுதல் என்பதைக் கைவிட்டான் ததிபாண்டன். கிருஷ்ணனை ரக்ஷித்தான்.

தசரதனோ, விசேஷ தர்மமாகிற ராமனைக் காட்டுக்கு அனுப்பி, சாமான்ய தர்மமாகிற கைகேயிக்குக் கொடுத்த வாக்கிலே

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

நின்றான்! அதனால், சாமான்ய தர்மத்தைக் காத்து, விசேஷ தர்மத்தை விட்ட தசரதனுக்கு ஸ்வர்கம்தான் கிடைத்தது. சாமான்ய தர்மத்தைவிட்டு விசேஷ தர்மத்தைக் காத்த ததிபாண்டனுக்கோ, மோக்ஷமே கிடைத்தது.

"கிருஷ்ணன் இங்கே வரவேயில்லையே!" என்று ததிபாண்டன் சொன்னதும், யசோதை அங்கேயிருந்து புறப்பட்டுப் போய்விட்டாள்.

குழந்தை எத்தனை நாழி உள்ளே உட்கார்ந்திருக்கும் - பானைக்குள்ளே...? மூச்சுத் திணறுகிறது அதற்கு!

மூடி போல் மேலே உட்கார்ந்திருக்கிற ததிபாண்டனை ஒரு குத்து குத்தியது!

"என்ன அக்கிரமம்! உட்கார்ந்தே இருக்கிறாயே நீ...! எழுந்திரு, நான் வெளியே வரவேண்டும்" என்றது.

அதற்கு ததிபாண்டன் சொல்கிறான் :

"ஹே கிருஷ்ணா! உனக்கு மோக்ஷம் வேண்டுமானால் எனக்கு மோக்ஷம் கொடு!..."

அதற்கு அந்தக் குழந்தை கேட்கிறது :

"எனக்கு மோக்ஷமா...?"

"ஆமாம்! இந்தப் பானையிலேயிருந்து நீ வெளியே வரவேண்டுமா வேண்டாமா? இந்த கடத்திலேயிருந்து வெளியே கிளம்பு..."

நம் சரீரத்துக்கு கடம் என்று பெயர். சாஸ்திர ரீதியாகப் பேசினால் நாம் ஒவ்வொருத்தரும் ஒரு கடம்! ஆஸ்திக சமாஜத்திலே உபன்யாஸம் நடந்ததாமே... நித்யம் எத்தனை கடங்கள் வந்திருந்தன?' என்று தான் நாம் கேட்க வேண்டும்!

பானையும் நாமும் ஒன்றுதான்! அதிலேயும் தீர்த்தத்தைக் கொட்டி நிரப்பலாம்; நம் சரீரத்திலேயும் தீர்த்தத்தைக் கொட்டி நிரப்பலாம். அதுவும் ம்ருண்மயமானது; நம் சரீரமும் ம்ருண்மயமானது!

"இப்படிப்பட்ட பானையிலிருந்து நீ வெளியே கிளம்பவேண்டாமா" என்றான் ததிபாண்டன்! "நீ வெளியே கிளம்ப வேண்டுமானால், எனக்கு முதலில் மோக்ஷத்தைக் கொடு!" என்று கேட்கிறான்!

அதற்கு பகவான் சொல்கிறான் :

"உனக்கு மாத்திரம் என்னடா...? அந்த பானைக்கும் சேர்த்து மோக்ஷம் கொடுக்கிறேன்!"

"பானைக்குக் கூட மோக்ஷம் கொடுப்பாயா...?"

"நான் சொன்ன வண்ணம் செய்யும் பிரான். கட்டாயம் கொடுப்பேன்!"

எழுந்தான் ததிபாண்டன். பகவான்

பானையிலேயிருந்து வெளியிலே குதித்தான். புஷ்பக விமானம் வந்து இறங்கியது. அதிலே ததிபாண்டன் ஏறிக் கொண்டான். அவன் பானையும் கூட ஏறி உட்கார்ந்து கொண்டது!

என்ன அதிசயம் பாருங்கள்! எத்தனையோ அதிமானுஷமான சேஷ்டிதங்கள் செய்துள்ளான் பகவான். அதிலே இந்தப் பானைக்கு மோக்ஷம் கொடுத்த வைபவம் விசேஷமானது! இப்போதுகூட வைகுண்டத்துக்குப் போனால், அந்தப் பானையை நாம் பார்க்கலாம்!

அசேதனத்துக்கும் மோக்ஷம் உண்டு என்பதற்கு சாட்சியாக அது அங்கே இருக்கிறது.

பிள்ளை பெருமாள் அய்யங்கார் என்ன கேட்கிறார்...?

"அந்தப் பானை கர்ம யோகம் பண்ணியிருக்கிறதா? அந்தப் பானை ஞான யோகம் பண்ணியிருக்கிறதா? அது என்ன, பக்தி யோகம் பண்ணிற்றா, பிரபத்தி பண்ணியதா?... வெறும் மண் பாண்டம்; குடம்! அந்த விலை நான் தாள மாட்டேனா?" என்றார்!

இதைக் கேட்டதும் எழுந்து உட்கார்ந்திருந்த ரங்கநாதன் திரும்பவும் படுத்துக் கொண்டு விட்டான்; இன்றைக்கு வரையில் அவன் எழுந்திருக்கவே இல்லை!

பக்தர்கள் எவ்வாறு மடக்கி விடுகிறார்கள் பாருங்கள் பகவானை..!

ஆகையினாலே, பகவான் பக்தர்களை வணங்கி நிற்கிறான்.

யார் அவனை வணங்குகிறார்களோ, அவர்கள் விரும்பியதையெல்லாம் கொடுப்பான். என்ன வேண்டுமானாலும் கொடுப்பான் அவன்.

அவன் சரித்திரத்தை நன்றாகச் சொல்ல கற்றுக் கொள்ள வேண்டும் நாம். அவன் கதையை நன்றாகக் கேட்டு, அவன் எதிரிலே போய் உட்கார்ந்து, ஒவ்வொரு அத்தியாயமாகப் படிக்க வேண்டும். அவ்வாறு படித்தால் பகவான் கேட்பான். இன்னொருத்தர் என்ன நினைப்பார் என்பது அனாவசியம். பகவான் கேட்கிறான்; அது போதும்.

ஒருத்தர் உட்கார்ந்து ராமாயணம் சொல்லிக் கொண்டிருந்தார். எதிரில் இரண்டு வாழைப்பழத்தை வைத்துவிட்டு,

"பிறகு ராமன் வனத்தை அடைந்து..." என்று ஆரம்பித்துப் பேசிக் கொண்டிருந்தார்.

எதிரிலே ஒருத்தரையும் காணோம்!

இன்னொருத்தர் வந்து இவரைக் கேட்டார்–



"சின்ன வயசுல கோவிச்சுக்கிட்டுப் போன உங்க தம்பி இருபது வருஷத்துக்கப்புறம் மறக்காம தபால் போட்டிருக்கானா... பரவாயில்லையே...!"

"எங்க பூர்வீக கால் கிரவுண்ட் நிலத்தையும்கூட அவன் மறக்கலே, 'நலம் நிலமறிய ஆவல்'னுதான் தபால் வாசகமே ஆரம்பிக்குது..."

- அதிராம்பட்டினம் யூசுப்

"யாருக்காக நீர் உபன்யாஸம் பண்ணுகிறீர்!... எதிரிலே ஒருத்தரையும் காணோமே! யாருக்கு உபன்யாஸம் பண்ணுகிறீர்?"

"யார் கேட்க வேண்டுமோ அவர் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருக்கிறாரே" என்றார் அவர்!

"யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்..' என்று ஆஞ்சநேயன் இதோ உட்கார்ந்திருக்கிறானே" என்றார்.

யார் பக்தியோடு கேட்கிறார்களோ, அவர்களுக்கல்லவா நாம் சொல்ல வேண்டும்!

கீதையிலே பரமாத்மா என்ன சொல்கிறான்...?

"என்னிடத்திலே பக்தி இல்லாதவர்களுக்குச் சொல்லாதே! அசூயை உள்ளவர்களுக்குச் சொல்லாதே..." என்றான்.

இவ்வளவு கீதையைச் சொல்லிவிட்டு, 'பக்தியில்லாத, அசூயைப்படக் கூடியவர்களுக்கு, தபஸ் இல்லாதவர்களுக்கு இதைச் சொல்லாதே..' என்றான்.

பகவத் விஷயம் மிக உயர்ந்ததான காரணத்தினாலே, அதை எப்படிச் சொல்ல வேண்டும், எந்த இடத்திலே சொல்ல வேண்டும் என்பதையெல்லாம் பரமாத்மாவே எடுத்துக் காட்டுகிறான்.

ஆகவே பர பக்தி, பர ஞானம், பரம பக்தி - பரம பக்தி என்ற நிலை ஏற்பட்டு விட்டதானால், ஒரு முகூர்த்த காலம் கூட நம்மால் பகவானை நினைக்காமல் இருக்கவே முடியாது.

(வளரும்)



# பிதாமகன்

- ○ பெயில்
- ○ ஜஸ்ட் பாஸ்
- ○ ஆவரேஜ்
- ○ அபவ் ஆவரேஜ்
- ● டிஸ்டிங்ஷன்

கனவுத் தொழிற்சாலையில் தொடர்ந்து கேட்கப்படும் கேள்விகளில் இது முதன்மையானது. வியாபார நோக்கத்தைக் காலில் போட்டு மிதித்துவிட்டு, யதார்த்தத்தைத் தூக்கிப் பிடிக்கும் துணிச்சலான முயற்சிகளுக்கு இங்கே இடமுண்டா? முந்திரிக் கொட்டை மாதிரி உடனே கேரளத்தையும், வங்காளத்தையும் பாருங்கள் என்று கைகாட்டுகிறவர்கள், 'பிதாமகன்' பார்க்க நேர்ந்தால், தங்கள் நிலைப்பாட்டை நிச்சயம் மறுபரிசிலனை செய்வார்கள்.

உயர்ந்த ரசனை, சராசரி ரசனை என இரண்டு தளங்களில் இயங்குகிற தமிழ் ரசிகர்களுக்குப் பிடித்தமான பழிவாங்கும் உணர்ச்சிதான், பாலா கையிலெடுத்திருக்கும் பிதாமகன் கதையின் மைய இழை. ஆனால் திரைக்கதையில் பார்த்துப் பழகின கதைக் களமோ, கதா பாத்திரங்களோ இல்லை. மாறாக, பரீட்சார்த்த புதிய கதை சொல்லும் உத்தி மூலம் பாத்திரங்களைத் தனது கட்டுக்குள் வைத்துக்கொண்டு இயக்குனர் காட்டும் பயாஸ்கோப், இதுதாண்டா சினிமா! என்பதுபோல் இருக்கிறது. ஏற்கெனவே ரசிகர்கள் மனங்களில் கமர்ஷியல் இமேஜுடன் பதிவாகி இருக்கும் விக்ரம், சூர்யா, லைலா, ரசிகா போன்ற கலைஞர்களை, இரத்தமும் சதையுமான பாத்திரங்களாய் உயிருடன் உலவ விட்டிருப்பதன் மூலம், பாத்திரப் படைப்பில் மீண்டும் தனது ஆளுமையை நிரூபித்திருக்கிறார். சிதைச் சாம்பலில் மண்டையோடுகளைப் பார்த்துப் பழகிய சித்தன், தனது நண்பனின் மண்டையோட்டைப் பார்த்து மிரண்டு துடிக்கும்போது, விக்ரம் தமிழர்களின் அதிர்ஷ்டம் என்று சொல்ல வைத்து விடுகிறார். சூர்யாவும், லைலாவும் கூட நடிப்பில் புதிய எல்லைகளைத் தொட்டிருக்கிறார்கள்.

மௌனத்தைக் கொண்டே பல காட்சிகளை நிரப்பியிருக்கும் இசைஞானி, கதைக் களத்தில் பிரவேசிக்கிற உணர்வை உண்டு பண்ணும் ஒளிப்பதிவாளர் பாலசுப்ரமண்யம், இருவருமே இயக்குனருக்கு இணையாய் உழைத்திருக்கிறார்கள். பிதாமகன் விக்ரம், சூர்யா படமல்ல. பாலாவின் தனித்துவமிக்க படைப்பு.

- விஷுவல்தாசன்





# அகம்

வரவேற்பறை
மட்டுமேயல்ல வீடு.

ஆடை விலகத் தூங்குமறை
சமையலறை கழிவறை
பண்டகசாலை, கூர்தீட்டப்பட்ட
ஆயுதங்கள்
காத்திருக்கும் உக்கிராண அறை
குப்பைகளும் ரகசியங்களும்
புதைக்கப்பட்டிருக்கும் தோட்டம்
எல்லாமும் வீடுதான்.

நாம் போகும்
வீடுகளில்
எப்போதும்
வரவேற்பறைகளிலேயே
அமரவைக்கப்படுகிறோம்.
நம்மிடம்
வருகிறவர்களையும்
அப்படியே
இருத்துகிறோம்.

அவரவர் பெருமைகளாலும்
புகைப்படங்களாலும்
வரவேற்பறையின்
சுவர்கள்
போர்த்தப்பட்டுள்ளன.
ஓவியங்கள்,
பூங்கொத்துகள்
எதுவுமில்லையென்றால்
பாடம் செய்து வைத்த மானின்
தலைகளைப்போல்
நம் முகங்களைக் கழற்றி
அவர்கள் முன்னால் வைக்கிறோம்.

கனத்த திரைகளும்
கதவுகளும்
அறைகளிலிருந்துப் பெருகிவரும்
நாற்றத்தையும்
இரத்தத்தையும்
கசிய விடுவதில்லை.

பல சமயங்களில்
வரவேற்பறைகளிலிருந்தே நாம்
திரும்ப நேரிடுகிறது.

**அழகிய பெரியவன்**

# ஆஹா!

# ரூ. 50,000 பரிசு!

திருச்சி வாசகர்களுக்காக மட்டுமே **கல்கி** வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி

அடுத்த வாரம் புதிய போட்டியை எதிர்பாருங்கள்!



ஆஹா! ரூ. 50,000 பரிசு!

## திருச்சி குவிஸ் போட்டி கூப்பன் - 6

1. தமிழக ரயில்வே ஸ்டேஷன்களிலேயே மிக நீண்ட சுரங்கப்பாதை அமைந்திருப்பது .................................. ரயில்வே ஸ்டேஷனில்தான்.
2. திருச்சி மாவட்டத்தில் 'இனிஷியலோடு உள்ள' பேரூராட்சி ..................................
3. திருச்சியையும் சேலத்தையும் பிரிக்கும் எல்லைக்கோடு என்று .................................. மலைப் பகுதியைச் சொல்லலாம்.
4. கரூர் செல்லும் சாலையில் அமைந்துள்ள .................................. அணை 1836ல் கட்டப்பட்டது.
5. சிறந்த சிற்ப வடிவமைப்பு கொண்ட குரங்குநாதர் கோவில் என்றழைக்கப்படும் கோரங்கநாதர் ஆலயம் .................................. என்ற ஊரில் உள்ளது.
6. கோரைப் பாய்க்குப் பெயர் பெற்ற .................................., பிரபல கர்நாடகப் பாடலாசிரியரான சுப்ரமண்ய ஐயரையும் அளித்துள்ளது.



அவ்ளோதான் கூப்பன். ரூ.50,000 மெகா பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது ஈஸியான வேலைதான்.

இதுவரை இடம் பெற்ற ஐந்து கூப்பன்களையும், இந்த ஆறாவது கூப்பனையும் நிரப்பி, உங்கள் பெயர், விலாசத்துடன் எங்களுக்கு அனுப்புங்கள்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய திருச்சி மாவட்ட கல்கி வாசகர் ஒருவருக்கு ரூ.50,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியான பதிலை எழுதியிருந்தால், இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- ஆறுதல் பரிசுகளாக, நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனமான அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை, வழங்கும் ரூ.85/- மதிப்புள்ள 'சோ' எழுதிய 'எங்கே பிராமணன்?' புத்தகம் - 120 நபர்களுக்கு.
- உறையின் மீது 'ஆஹா! ரூ. 50,000 (திருச்சி)' என்று குறிப்பிட வேண்டும்.
- விடைகள் 20.11.2003க்கு முன்னதாக வந்து சேர வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்படமாட்டாது.
- இந்தப் போட்டி திருச்சி மாவட்ட கல்கி வாசகர்களுக்கு மட்டுமே.
- இப்பரிசு வருமானவரி விதிமுறைக்கு உட்பட்டது.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.

யம பயத்தைப் போக்குகின்ற தலம். நீண்ட ஆயுளைத் தருகின்ற தலம். ஆயிரம் பிறை கண்டவர்கள் தொழுது ஏத்தி மங்கலத்தை ஏற்கும் தலம். வேறு எதுவாக இருக்க முடியும்? திருக்கடையூர்தான். இங்கே ஈசனுக்கு ஒரு சிறப்பு, அம்பிகைக்கு ஒரு சிறப்பு, விநாயகப் பெருமானுக்கு ஒரு சிறப்பு. காலனுக்குக் கூடச் சிறப்பு, யமனுக்கு காலகாலர் நேர் எதிரே சந்நிதி இருக்கிறது.

சிவ பெருமானை அண்டியவர்களை மரியாதையுடன் நடத்த வேண்டும் என்று அறிந்து கொண்ட தர்மராஜன், மரணத்தை வெல்லும் ஆற்றலை அடியார்களுக்கு அருளுவதால், இந்தத் தலத்துக்கு ம்ருத்யுஞ் ஜய க்ஷேத்ரம் என்று பெயர். தேவாரத்தில் திருக்கடவூர் என்றுதான் பாடப் பெற்றது. அது மருவி திருக்கடையூர் என்று சொல்லி வருகிறோம். அமிர்கடமே சிவலிங்கமாகி யிருப்பதாக ஐதீகம். அதனால் கடவூர்.

கோபுர வாசலிலேயே கணபதியின் வடிவமான யானையைக் காண்கிறோம். விநாயகப் பெருமானுக்குக் கள்ள வாரணர் என்று பெயர். பாற்கடலில் தோன்றிய அமுத கலசத்தை எடுத்து ஒளித்து வைத்துவிட்டாராம். பிறகு தேவர்கள் ஆடிப்பாடிக் கெஞ்சித் கூத்தாடித்தான் அமுதத்தை அடைய முடிந்தது. அவர் எவ்வளவு கருணை மிகுந்தவர் என்று அபிராமி பட்டர் கூறுகிறார் :

துதியேன் எனினும், தொழுகேன் எனினும்
உன் தொண்டர் தமை
மதியேன் எனினும் வணங்கேன் எனினும்
வலியவந்து
கதியே தரும்வழி காட்டிடுவாய்!
நின் கருணையினால்
விதியே புகழ்கட வூர் வாழும்
கள்ள விநாயகனே!

என்ன தவறு செய்தாலும் அதைப் பொறுத்துக் கொண்டு தாமாகவே வந்து உய்ந்து போகும் வழியைக் காட்டி விடுவார் கள்ள விநாயகர்.

# ஆனந்த வாரிதி



• ம.தர்மராஜன்

திருக்கடவூரில் நாம் அமிர்தகடேச்வரரைத் தரிசனம் செய்து விட்டுக் காலஸம்ஹாரமூர்த்தியின் ஸந்நிதியில் நிற்கிறோம்.

சுடர் மணிக் குழையும் மலர்க் கரத்து
உழையும்
தும்பிகள் இடை இடை நுழையும்
தும்பைமா லிகையும் வம்புவார்
ஜடையும்
துண்ட வெண் பிறையும் முந்நூலும்
நடன பங்கயமும் இரணகங் கணமும்
நங்கை பங்கு அமர்ந்த ஸுந்தரமும்
நயனம் மூன்று உடைய கோலமும்
கண்டோர்
நமனையும் காண வல்லவரோ?

சிவ பெருமானுடைய எழில் தோற்றமல்லவா இது? காலனைக் காய்ந்த கோலம் இத்தனை அழகுடையதா? நங்கையைத் தமது மேனியில் சேர்த்துக் கொண்டதனால்



இத்தனை அழகோ? நடனம் செய்கின்ற பாதத்தின் சிவந்த தாமரை போன்ற வண்ண அழகோ? இந்த அழகிய பாதத்தில் தான் என்ன வலிமை? குழந்தை மார்க்கண்டேயனுக்காக அவனுடைய அன்புக்கும் நம் பிக்கைக்கும் கட்டுப்பட்டு, யம பாசத்தினால் கட்டுண்டவர் இவரா? இப்படி அந்த அழகை ஆராதிக்கும்போதே, சரிந்து கிடக்கும் யமனையும், நெஞ்சில் பாய்ந்த திரிசூலத்தையும் காண்கிறோம்.

அப்படியும் ஈசனின் காலஸம்ஹாரக் கோலம் பயத்தைப் போக்கும் அழகாகவே நமக்குத் தெரிகிறது.

# ஆனந்தி 3

அபிராமி பட்டர் வரலாறு அனைவரும் அறிந்ததே. தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னர், "அமாவாசை இன்னும் எத்தனை நாழி இருக்கிறது?" என்று அபிராமி பட்டரைக் கேட்ட போது, அவர் 'இன்று பௌர்ணமி' என்று பதில் சொல்லிவிட்டார். அரசருக்குத் தை அமாவாசையைப் பௌர்ணமி என்று சொன்னது அவமதிப்பாகப்பட்டது. அரசர்



கோபமாகச் சென்றதை அறிந்த பட்டர், அபிராமி அந்தாதியைப் பாடத் தொடங்கினார்: 'விழிக்கே அருளுண்டு'' என்ற பாடலை அவர் பாடியபோது, அபிராமி அம்மை தன் காதில் அணிவித்திருந்த தாடங்கத்தை வானில் எறிந்தாள். அது முழு நிலவாகப் பிரகாசித்தது. அமாவாசை இருளில் பூரண சந்திரன் தகதகவென்று ஒளி வீசுவதைக் கண்ட மன்னர், அபிராமி பட்டரிடம் வந்து மன்னிப்புக் கோரி, அவரைக் கௌரவித்தார். நிலமும் நெல்லும் மான்யமாகத் தரும்படி செப்புப் பட்டயம் எழுதிக் கொடுத்தார்.

ராம என்றால் அழகு என்று பொருள். அபிராமி என்றால் பேரழகி என்று கொள்ளலாம். அபிராம சுந்தரி என்று வேறு அன்னையை அழைக்கிறோம். அழகும் அழகும் இணைந்த பேரழகு. வடமொழியில் பாலா என்ற சொல், தமிழில் வாலையாகி விடுகிறது. ''வாலைக்குமரியடி கண்ணம்மா'' என்று பாரதியார் பாடியிருக்கிறாரே.

அபிராமி பட்டர் அதிசயிக்கிறார்.

மறி கடல்கள் ஏழையும், திகிரி இரு<br>நான்கையும்<br>மாதிரக் கரி எட்டையும்<br>மாநாகம் ஆனதையும் மாமேரு<br>ஆனதையும்<br>மாகூர்மம் ஆனதையும் ஓர்<br>பொறி அரவு தாங்கிவரு புவனம் ஈர்<br>ஏழையும்<br>புத்தேளிர் கூட்டத்தையும்<br>பூ மகனையும் திகிரி மாயனையும்<br>அரையினில்<br>புலி ஆடை உடையானையும்<br>முறைமுறைகளாய் ஈன்ற முதியளாய்ப்<br>பழைமை தலை<br>முறைகள் தெரி யாத நின்னை<br>மூவுலகில் உள்ளவர்கள் 'வாலை'<br>என்றறியாமல்<br>மொழிகின்ற தேது? சொல்லாய்!<br>அறிவுடைய பேர் மனத்து ஆனந்த<br>வாரிதியே<br>ஆதி கடவூரில் வாழ்வே<br>அமுதீசர் ஒரு பாகம் அகலாத<br>சுகபாணி<br>அருள்வாமி அபிராமியே!

சாட்டையில்லாப் பம்பரம் போல் சுழன்று கொண்டிருக்கும் இந்த அண்ட சராசரங்கள் எல்லாவற்றையும் படைத்தவள் ஆதிபராசக்தி. பதினான்கு உலகங்கள். ஏழு கடல்கள், எல்லாவற்றையும் உண்டாக்கி, திரி மூர்த்திகளையும் ஈன்றவள் பராசக்தி. இதற்கு முன்னால் அவள் எத்தனை காலம் இருந்தாள், இன்னும் என்ன படைத்தாள், என்பது யாருக்குத் தெரியும்?

அப்படிப்பட்ட உன்னை, யுகயுகாந்திரங்களுக்கெல்லாம் முற்பட்ட முதியவளாகிய உன்னை, "வாலை" (பாலா) என்று அழைக்கிறார்களே! (வாலைப் பருவம் என்பது எட்டு வயதுக்குட்பட்ட பருவம்.)

முறைமுறைகளாய் ஈன்ற முதியவள் அவள். இவற்றையெல்லாம் எத்தனை தடவை படைத்தாள் என்பதுதான் யாருக்குத் தெரியும். கல்பகோடி காலம் என்கிறோம். அதற்கும் முன்னால் பராசக்தி இன்னுமொரு கல்பகோடி காலமாக இருந்திருக்கிறாள்.

ஆனால் அப்படிப்பட்ட சுந்தரி, எழிலரசியான அபிராமி, அமுதீச்வரரின் பாகம் பிரியாளாக, ஞானம் என்ற கிளியைக் கையிலேந்தியிருக்கிறாளே. நம்மைக் காக்கவே அப்படி ஈசனுடன் ஒன்றியிருக்கிறாள். அந்த அருளை என்னவென்று சொல்வது?

அந்த அருளே ஆனந்தக் கடல்.

(தொடரும்)

## சகல தோஷ பரிகார (ஸ்ரீ சனீஸ்வரபகவான் ) ஸ்தலமான

# திருநள்ளாறில்

## வாரம் தோறும் சனிக்கிழமையன்று

நடைபெறும் அன்னதான பணியில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம் !

பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு திரு நள்ளாற்றீஸ்வரப்பெருமான் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.
**தருமை ஆதீனம் குரு மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சத்குரு சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாச்சாரியார் சுவாமிகளின்** அருளாசியுடன் ஐந்தாண்டுகளுக்கு மேலாக திருஅண்ணாமலையில் பௌர்ணமி கிரிவலத்தில் தொடர்ந்து அன்னதானப்பணியில் ஈடுபட்டு வரும் **ஆன்மீகம்** தெய்வீக மாத இதழ் வாசக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க, ஒவ்வொரு சனிக்கிழமை தோறும் திருநள்ளாறில் தெற்கு வீதியில் அமைந்துள்ள **தருமை ஆதீன கட்டளை மடத்தில்** அன்னதான திருப்பணி நடைபெறுகிறது. அத் திருப்பணியில் பங்கு கொண்டு சனிப்ரீதி செய்வித்து சகல க்ஷேமங்களும் பெற அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்.

திருநள்ளாறில் எள் எண்ணெய் தீபமேற்றி அங்க வரும் அன்பர்களுக்கு எள் சாதத்துடன் அன்னதானம் செய்தால் சனீஸ்வர பகவான் மனம் மகிழ்ந்து எல்லாவகையான தோஷங்களிலிருந்தும் விடுவிப்பார் என்பது திண்ணம். அனைவரும் சகல சௌபாக்கியங்களையும் பெற வேண்டும் என்ற இறை சிந்தனையோடு **ஆன்மீக மாத இதழ்** சார்பாக நடத்தப்படும் **ஆன்மீக அன்னதான அறக்கட்டளை** என்ற அமைப்பின் மூலம் திருநள்ளாறில் அன்னதானம் செய்து நற்பலன்களைப் பெறுவோம்.

தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

- **ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**
- **ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**
- **ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு வருடங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.**

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளிக்கவசக் கோலத்திலும் ஸ்ரீ தர்பாரண்யேஸ்வரர், ஸ்ரீ ப்ராணேஸ்வரி அம்மன் வண்ணப்படமும், ஸ்ரீ திருஞான சம்பந்தர் அருளிய கோளறு பதிகம் எனும் நவகிரஹ சாந்தி புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

ரூ. 5000 - அனுப்பும் அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு சனிக்கிழமையன்று திருநள்ளாறில் அன்னதானம் செய்து ஆறு ஆண்டுகளுக்கு ஆன்மீகம் மாத இதழ் தங்களுக்கு அனுப்பிவைக்கப்படும்.

எல்லோரும் எல்லாவளமும் பெறவேண்டும் என்ற இறை சிந்தனையோடு ஐந்தாண்டுகளுக்கு மேலாக **காசி**, **இராமேஸ்வரம், திரு அண்ணாமலை** ஆகிய புண்ணிய ஸ்தலங்களில் **அமாவாசை, பௌர்ணமி** நாட்களில் மாதா மாதம் நடைபெறும் அன்னதான திருப்பணிகளைப் போலவே **ஒவ்வொரு சனிக்கிழமை தோறும் திருநள்ளாறில் தெற்கு வீதியில் அமைந்துள்ள தருமை ஆதீன கட்டளை மடத்தில் அன்னதான திருப்பணி** தொடர்ந்து நடைபெறும்.

இந்த அன்னதானத்திருப்பணி (திருக்கோயிலுக்கு உட்பட்டது அல்ல) ஆன்மீகம் இதழ் வாசகர்களுக்காகவும், அன்னதான சேவையில் கைங்கர்யத் தொண்டு புரிந்து வரும் அனைத்து அன்பர்களுக்காகவுமே நடத்தப்படுகிறது.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் Aanmeeka Annadhana Charitable Trust, Chennai - 4 என்ற பெயரில் Cheque / D. D/ M. O. மூலம் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். அன்னதான திருப்பணிகளை நலம் தரும் இறை பணி சேவைகளாக ஆன்மீக அன்னதான அறக்கட்டளை செய்து வர தங்களது ஒத்துழைப்பை என்றும் பேரன்புடன் வேண்டுகிறோம்.




**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி


# ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

**AANMEEKA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, Fax : 044-52066525. E-mail : siva siva @ vsnl.net




சனிபகவான் யந்திரம்

ஸ்ரீ சனிபகவானின் ஸ்தலமான திருநள்ளாறில் சனிக்கிழமையில் செய்யும், அன்னதான சேவையின் போது வாழைஇலை போட்டு எள் சாதத்துடன் செய்யும் அன்னதானத்திற்கு இணையான தர்மமே நவகிரஹ பரிகாரங்களில் உயர்ந்ததாகும்.




# உசிலம்பட்டி பெண்குட்டிகள்!

இரண்டாம் வகுப்பு வரை படித்திருக்கும் முத்துப்பேச்சிக்கு இப்போது பதினான்கு வயது. ஐந்தாம் வகுப்பைத் தாண்டாத மீனாட்சிக்குப் பதினைந்து. எட்டாம் வகுப்பு வரை படித்தால் திருமணச் செலவுக்கு அரசாங்கம் பணம் கொடுக்கும் என்பதற்காகக் கஷ்டப்பட்டுப் படித்திருக்கும் புவனேஸ்வரிக்குப் பதினாறு வயது. அடித்துப் பிடித்து பன்னிரண்டாம் வகுப்பை எட்டிப் பிடித்துவிட்ட பூங்கொடிக்குப் பதினெட்டு வயது. யாரிந்த 'டீன்' பெண்கள்?

பெண் சிசுக் கொலை என்றதும் நெஞ்சுக்குள் பகீர் பயத்தை பரவ விடுகிற உசிலம்பட்டி, நடுப்பட்டி, கருமாத்தூர் பகுதிகளைச் சேர்ந்தவர்கள். இவர்களின் வயதுக்கு என்ன?

"எங்க வயசுக்கு மீறின விஷயங்களைத் தெரிஞ்சுக்கிட்டோம். இப்போ நாங்க நாற்பது பேருக்குப் பயிற்சி கொடுப்போம்" என்று 'தில்'லாகப் பேசும் இவர்களுக்கு இளவயதுத் திருமணத்தின் தீமைகள் தெரியும். இள வயது கர்ப்பம் உயிருக்கே உலை வைக்கும் என்பதும் தெரியும். இன்னும் தாய்ப்பாலின் முக்கியத்துவம், குடும்ப நலம், பெண் சிசுக்கொலைக்கு இந்திய தண்டனைச் சட்டத்தில் இரக்கம் காட்ட முடியாது என்பதுவரை, பல விஷயங்களை மூன்று நாள் பயிற்சி முகாமில் தெளிவாகக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். எங்கே? இண்டியன் கவுன்சில் ஃபார் சைல்டு - வெல்ஃபேர் தமிழ்நாடு என்ற தன்னார்வ அமைப்பின் அலுவலகத்திற்கு வந்து பயின்று, தெளிவோடு திரும்பிப் போகிறார்கள்.

ஐ.சி.சி. டபிள்யூ போல, பல தன்னார்வ அமைப்புகள், வறண்ட காற்றும், கள்ளிக் காடுகளும் நிறைந்திருக்கும் உசிலம்பட்டியைச் சுற்றியுள்ள கிராமத்துப் பெண்களுக்கு விழிப்பூட்டியிருக்கிறது. சுய உதவிக் குழுக்களாக அவர்களை ஒருங்கிணைத்தார்கள். பெண் சிசு வதைக்கு முட்டுக்கட்டைப் போட்டுள்ளார்கள். கடந்த இரண்டு ஆண்டுகளில் ஒரே ஒரு வழக்கு மட்டுமே உசிலம்பட்டி யூனியனில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்புவரை தன்னார்வ அமைப்புகளின் களப்பணியாளர்




* சுய உதவிக் குழுக்களுக்கு தொழிற்பயிற்சி



* மாதரை கிராமத்தில் ஐ.சி.சி. டபிள்யூவின் நிரந்தரப் பயிற்சி முகாம்

கிராமங்களுக்குச் சென்று, விழிப்புணர்வு ஊட்ட முயன்றார்கள். இப்போது அணுகு முறையே வேறு! தன்னார்வ அமைப்புகள், மத்திய, மாநில அரசுகளின் ஊரக வளர்ச்சி முகமைகள் தொடங்கும் மகளிர் சுய உதவிக் குழுக்களில் சேர்ந்து, சேமிப்பு, சிறு தொழில் என்று உயர



• புரிஞ்சுக்கிட்டோம்! தெரிஞ்சுக்கிட்டோம்



• வட்டமாக உட்கார்ந்து விழிப்புணர்வு!



வேண்டும் என்றால், முதலில் "எனது குடும்பத்தில் பெண் சிசுவதைக்கு இடமேயில்லை" என்று உறுதி தர வேண்டும். இப்படி உறுதி மொழி கொடுத்து சுய உதவிக் குழுவில் சேரும் பெண்களின் எண்ணிக்கை படிப்படியாக உயர்ந்து, இன்று சுய உதவிக் குழுக்கள் இல்லாத கிராமங்களே இல்லை என்ற நிலையை உருவாக்கி இருக்கிறார்கள்.

சுய உதவிக்குழுக்கள் அமைந்துள்ள உசிலம்பட்டி கிராமத்துப் பெண்களுக்குத் தொழிற் பயிற்சியும், சுய முன்னேற்றப் பயிற்சியும் கொடுத்து வருவதன் மூலம், பெண் சிசுவதையை வேரோடு பிடுங்கி எறிந்திருக்கிறார்கள்.

"ஒரு காலத்தில் பெண் சிசுவதை தண்டனைக்குரிய குற்றம் என்று பேசிய தன்னார்வத் தொண்டர்கள் அடித்து விரட்டப்பட்டார்கள். இன்று அதே கிராம மக்களும், பெண்களும் கர்ப்பமானவர்களைத் தாங்களே கண்காணித்து வழி நடத்துகிறார்கள். அடுத்த தலைமுறைப் பெண்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது. இன்னும் பத்தாண்டுகளில், எங்களைப் போன்ற தன்னார்வ அமைப்புகளுக்கு இங்கே வேலையே இருக்காது" என்கிறார் ஐ.சி.டபிள்யூவின் மூத்தக் களப்பணியாளர் ஒருவர்.



• என்னை மாற்றிக் கொள்ளும் சக்தி என்னிடம் உண்டு

ஒரு கோடியோ, இரண்டு கோடியோ அல்ல! மொத்தம் பதினான்கு கோடி ரூபாய்! ஆயுள் காப்பீட்டுப் பாலிசிகள் விற்றதன் மூலம், இத்தனை பெரிய தொகையை எல்.ஐ.சிக்கு ஈட்டிக் கொடுத்திருக்கிறது பி. அரங்கசாமி தலைமையிலான குழு. அதுவும் கடந்த ஒரே ஆண்டில் இத்தனை பெரிய தொகை! இதற்காக மண்டல அலுவலகம் அரங்கசாமிக்கு மாபெரும் பாராட்டு விழா எடுத்து, வளர்ச்சி அதிகாரியாக இருந்து வரும் இவரை, மேலாளராகப் பதவி உயர்வு செய்தது. ஆனால் அந்தப் பதவியை மறுத்துவிட்டிருக்கிறார் அரங்கசாமி.

* விண்ணமங்கலம் கிராமத்தில் குடிசையிலிருந்து ஐ.ஏ.எஸ். தேர்வில் வென்ற டி. ஜெயசீலனைப் பாராட்டும் அரங்கசாமி



# தினசரி முப்பது முகங்கள்!

“இந்தப் பதவி உயர்வை ஏற்றுக் கொண்டால் மக்களோடு நேரடியாகப் பழக முடியாது. தினசரி முப்பது முகங்களையாவது சந்தித்தால்தான் எனக்குத் தூக்கமே வரும்” என்று கூறி அசர வைக்கும் இந்த ஐம்பது வயதுக்காரர், தஞ்சை மாவட்டம் திருக்காட்டுப்பள்ளி அருகேயுள்ள விண்ணமங்கலம் கிராமத்தைச் சேர்ந்தவர்.

தஞ்சையில் முதுநிலை ஆசிரியராகப் பணிபுரிந்து கொண்டிருந்தபோது, தஞ்சை விவசாயிகள் அறுவடை முடிந்து நெல்லை விற்றவுடனே, கடைத்தெருவுக்கு வந்து தங்க நகை, ஜவுளி என்று பணத்தைக் கரைத்து விடுவதைக் கண்டு வருந்தினார். இவர்களைச் சேமிப்பின்பால் ஈர்க்க எல்.ஐ.சி பாலிஸி விற்பனையைப் பகுதி நேரப் பணியாகக் கையிலெடுத்திருக்கிறார். அரங்கசாமியின் அணுகுமுறை, மக்கள் தொடர்பு, இவற்றைக் கண்ட விவசாயிகள் இவரைத் தேடிவர, “வேலையை விட்டு விட்டு முழு நேர முகவராக ஆகிப் போனேன்” என்கிறார்.

இன்று அரங்கசாமியின் ஆண்டு வருமானம் ரூபாய் பத்து லட்சம். ஆனால் இவரது அம்மா இவரை ஊதாரி என்று திட்டிக் கொண்டிருக்கிறாராம். காரணம், தனக்குக் கிடைத்து வரும் வருமானத்தின் பெரும் பகுதியைச் சமூக சேவையிலேயே கரைத்து வருகிறார் அரங்கசாமி.

காவரி பொய்த்துப் போனதில் கடந்த ஆண்டு பொங்கல் விழா கொண்டாட முடியாமல் தனது கிராம மக்கள் தவிப்பதை அறிந்து, அரிசி, வெல்லம், கரும்பு, புத்தாடை என ஒரு கிராமத்திற்குச் சென்று கொண்டாடி விட்டு வந்திருக்கிறார்.

தீபாவளியை ரெட்டிப்பாளையம் நாட்டுப்புறக் கலைஞர்களோடு கொண்டாடியிருக்கிறார். இவருக்கு ஏதேனும் லட்சியம்?

“உ.உ.இ வங்கியைத் தொடங்கியே தீருவேன். அதாவது உணவு, உடை, இருப்பிட வங்கி!”

- ஜெய்

"ப்ரஸன்னதாம் பகவான் ஸ்ரீலக்ஷ்மி ந்ருஸிம்ஹ"



# ஸ்ரீ அஹோபில ந்ருஸிம்ஹ மஹா யக்ஞம்



ஸ்ரீ V.V. ஸ்ரீதர் குருஜி அவர்கள் சாயா அதர்வண வேதம் மற்றும் க்ருஷ்ண மோஹன வித்யா இவற்றின் குரு பரம்பரையில் வந்துள்ள ஆசாரியர் ஆவார். அவர் இதுவரையில் 54 யாகங்களை நடத்தியுள்ளார். சென்ற ஆண்டுகளில், குறிப்பாக அஹோபிலத்திலும் (1999), காலேஷ்வரத்திலும் (2000) ஷீரடியிலும், திருநெல்வேலியிலும் (2001) ஸ்ரீவில்லிபுத்தூரிலும் (2002) நடத்தியுள்ளார்.

தொடர் வரிசையில் 55 முதல் 60வது யக்ஞமாக ஆந்திர மாநிலத்திலுள்ள ஸ்ரீ அஹோபிலத்தில் இவ்வாண்டு நவம்பர் மாதம் 22ம் தேதி முதல், டிசம்பர் மாதம் 11-ம் தேதி வரை சிறப்பாக நடத்தப்பட உள்ளது.

ஜாதி, சமய, பால் வேறுபாடின்றி உலக நலன் கருதியும், திருமணத் தடைகள் நீங்கவும் ரோஹ நிவாரணம் பெறவும், ஸகலவிதமான க்ரஹதோஷங்கள் மற்றும் பித்ரு தோஷங்கள் நீங்கவும், குடும்ப பந்த வளர்ச்சி அடையவும், வியாபார விருத்தி குறித்தும், பிற பல ஸ்ரேயஸுகள் பெற வேண்டியும் சிறப்பான முறையில் ப்ராத்தனைகள் செய்யப்பட உள்ளது.

பல்லாயிரக்கணக்கானவர்கள் இவ்யக்ஞத்தில் கலந்து கொள்வர் என்று எதிர்பார்க்கப்படுகிறது. யாவர்க்கும் அன்னதானம் அளிக்க உள்ளதால், இச் சீரிய பணிக்கு உதவிபுரிய தாராள சிந்தை உள்ளவர்கள் தங்களது மேலான அன்பளிப்புகளை D.D.யாகவோ/காசோலையாகவோ, பொருளாகவோ எல்லா உதவிகளையும் அளித்திடக் கோருகிறோம். 80-Gன்படி வருமான விலக்கு உண்டு.

*நன்கொடை அனுப்புவோர்க்கு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.*
*மேலும், விவரங்களுககு அணுக வேண்டிய முகவரி:*

---

## ஸ்ரீஜ்வாலா ட்ரஸ்ட் (Regd)

**நெ. 1/1, அக்ஷ்ய்யா அபார்ட்மெண்ட்ஸ்,**
**1, அண்ணாசாமி தெரு, பெரம்பூர், சென்னை 600 011.**
**போன்: 25513959**

# மெல்லினம்

## 20

சந்திரா டீச்சரை சாதாரணமாக ஜக்குவுக்கு மிகவும் பிடிக்கும். வகுப்பில் ஒரு போதும் அவர் பிள்ளைகளை மிரட்டுவது கிடையாது. அதிக பட்ச தண்டனையாக கடைசி பெஞ்சில் போய் உட்காரச் சொல்லுவதைத் தவிர, வன்முறையில் விருப்பம் இல்லாதவர் அவர். தன்மீது எத்தனை அக்கறை இருந்தால் வீட்டுக்கு வந்து, 'பையன் கொஞ்சநாளாக என்னவோ மாதிரி இருக்கிறான்' என்று கவனிக்கச் சொல்லுவார்? அது ஆபத்துதான். அநாவசியமான கேள்விகள் வீட்டில் வந்து விட்டன. 'என்ன ஆச்சு, என்ன ஆச்சு' என்று எல்லாரும் பிய்த்துப் பிராண்டி விட்டார்கள்தான். அப்போது டீச்சர்மீது கோபம் வந்ததும் உண்மையே.

ஆனால் ஒரு புத்திசாலிப்பையனின் இயல்பான கோணத்தில் நினைத்துப் பார்த்தால், ஜக்குவுக்கு டீச்சர் கம்ப்ளைண்ட் பண்ணியதில் எந்தத் தவறும் இல்லையே என்றுதான் தோன்றியது. ஆமாம். நான் கொஞ்ச நாளாக சரியாகத்தான் இல்லை. எனக்கு என்னவோதான் ஆகிவிட்டது. அப்பா துளிக் கூட அன்பு குறையாமல்தான் நினைவு தெரிந்த நாளாக நடந்து கொள்கிறார். ஆனாலும் ஏனோ அவரைப் பிடிக்காமல் போய்விட்டது. காரணமே புரியாமல் அடிக்கடி அம்மாவை நினைத்து பயமாக இருக்கிறது. என்றைக்காவது ஒரு நாள் சொல்லிக் கொள்ளாமல் அப்பா தன்னையும் அம்மாவையும், தாத்தா பாட்டியையும் விட்டுவிட்டு, அந்த நிர்மலாவுடன் எங்கேயாவது ஓடிப்போய் விடுவார் என்று பல ராத்திரிகளில் கனவுச் சாயலுடன் சிந்தனையில் யாரோ வந்து ஒலிபரப்பிவிட்டுப் போகிறார்கள்.

அவள் இங்கே இல்லை. அமெரிக்காவில் இருக்கிறாள் என்பது தனக்கே தெரியும் போது, அப்பாவுக்குத் தெரியாமல் இருக்காது. அமெரிக்காவில் இருந்தால் என்ன? போன் பண்ணிப் பேசாமலா இருப்பார்கள்? அப்பா அடிக்கடி ப்ரவுசிங் செண்டருக்கு இப்போதெல்லாம் போய்விட்டு வருகிறார். கேட்டால் ஈமெயில் செக் பண்ணுவதாகச் சொல்கிறார். அப்படி யார் அப்பாவுக்குத் தொடர்ந்து ஈமெயில் அனுப்புவதற்கு இருக்கிறார்கள்? அது ஏன் அந்த அமெரிக்காவுக்குப் போன நிர்மலாவாக இருக்கக் கூடாது?

கேள்விகள் மற்றும் சந்தேகங்கள்.

இந்த அம்மாவுக்கு எப்படி இந்த விஷயம் இன்னும் தெரியாமலே இருக்கிறது? எத்தனை மக்காக இருக்கிறாள் அவள்? இத்தனை வருஷத்தில் அந்த டைரியை எடுத்துப் படிக்கவே தோன்றியிருக்காதா அவளுக்கு?

அவன் அந்த டைரியைக் கண்டெடுத்த தினத்துக்கு அப்புறம், பல சமயம் வேண்டுமென்றே அதை அம்மா கண்ணில் படும்படி சமையல் அறை அலமாரிகளில் கொண்டு வைத்துவிட்டுக் காத்திருந்திருக்கிறான்.

"இதை யார் இங்கே கொண்டுவந்து வெச்சது? ஜக்கு... இதைக் கொண்டு அப்பா டேபிள்ல வை" என்று சொல்லிவிடுவாள். அவனும் சமர்த்தாக அதை எடுத்துக் கொண்டு போய் அப்பாவின் கண்ணில் பட முடியாத தனது பிரத்தியேக ரகசிய இடத்தில் செருகிவிடுவான். மக்கு அம்மா. நாலைந்து முறை அவன் அதை அவள் கண்ணுக்குத் தென்படுகிற மாதிரி வைத்தும் ஒரு சூட்சுமம் வேண்டாமோ? என்னத்துக்கு இது அடிக்கடி இங்கே வருகிறது என்று தோன்றவேண்டாமோ? என்னைத்தவிர யார் கொண்டு வந்து வைப்பார்கள்?

'ஏண்டா ஜக்கு இதை இங்கே கொண்டு வரே?' என்று ஒரு வார்த்தை கேட்கலாம் என்று ஏன் அவளுக்குத் தோன்றவில்லை?

கேட்டுவிட்டால் அடுத்தக்கணம் பிரச்னை தீர்ந்துவிடும். நீயே படிச்சுப் பார்' என்று சொல்லிவிடலாம். பிறகு புரட்சிக்குப் பின் எப்படியும் ஒரு தீர்வு கிடைக்கும். ஓயாமல் தன் மண்டையைக் குடைந்து கொண்டிருக்கும் ஒரு விஷ வண்டை எடுத்து அம்மாவின் மண்டைக்குள் நுழைத்துவிடுகிற தீர்வு.

இப்படித் தோன்றும்போதெல்லாம் அவனுக்கு இன்னொன்றும் கூடத் தோன்றும். எத்தனை குரூரமாகச் சிந்திக்கிறேன் நான்? தனக்கே இத்தனை துயரம் தரும் விஷயம் அம்மாவை உயிருடன் விட்டு

வைக்குமா? கொல்லையில் ஒரு பெரிய கிணறு இருக்கிறது. வெகு ஆழத்தில் எங்கோ நீர் தென்படும் பூதக்கிணறு. மோட்டார் போட்டு இறைத்து இறைத்து அடியாழத்துக்குப் போய்விட்டது நீர். ஐம்பதடியோ என்னவோ ஆழம். விழுந்தால் உயிர் போகிறதோ இல்லையோ, அத்தனை எலும்புகளும் நொறுங்கிவிடும்.

ஐயோ!

இந்தச் சிந்தனை வந்ததும் அவன் டைரியை எடுத்துத் தன் புத்தக அலமாரியின் பின்னால் போட்டு, மேலே ஹிந்து பேப்பர் சிலவற்றைக் கசக்கி மூடிவிடுவான்.

எதையும் ஒளித்து ஒளித்தே வைக்க விரும்புகிறது மனம். வெளிப்படுத்திவிடக் கூடிய விஷயம் இல்லை. அம்மா என்கிற மிகப்பெரிய தடுப்புச் சக்தி இதில் சம்பந்தப்பட்டிருப்பதால்தான், தான் இத்தனை தயங்குகிறோமோ என்று அவனுக்குத் தோன்றியது.

ஆனால் இந்தச் சந்திரா டீச்சருக்கு என்ன வந்தது? தன் மனத்தை ஒரு மந்திரச் சாவி கொண்டு திறந்துவிடும் உத்தேசத்துடன்தான் இப்படி பக்கத்து சீட்டில் வந்து உட்கார்ந்துவிட்டாளா? கல்விச் சுற்றுலா. இன்பச் சுற்றுலா. நிச்சயம் இன்பம் கூடிவரப் போவதில்லை. மாறாக டீச்சரிடம் என்னத்தையாவது உளறிக் கொட்டி, பிரச்னையைச் சற்றும் விரும்பாத புதுப்பரிமாணத்துக்குக் கொண்டு போகப் போகிறேனா?

அவனுக்கு மிகவும் பயமாக இருந்தது. ஆனால் டீச்சர் எப்போதும் போலவே அன்புடன் இருந்தாள். எப்போதும்



பா.ராகவன்

போலவே புன்னகையுடன் இருந்தாள். எப்போதும் காட்டும் அதே கனிவு. அக்கறை. அவள் ஒரு பிறவி நல்ல டீச்சர் என்று எப்போதும் ஜக்குவுக்குத் தோன்றும்.

"ஜக்கு, நீ ஏன் எப்பவும் இப்பல்லாம் என்னவோ போல இருக்கே? ஒரு மாசமாவே சரியில்லை நீ? என்ன ஆச்சு? அன்னிக்கு உங்க வீட்டுக்கே வந்து சொல்லிட்டுப் போனேனே. அப்புறமும் நீ மாறலை. வாட்ஸ் யுவர் ப்ராப்ளம்?"

பக்கத்தில் வேறு யாருக்கும் கேட்காத கீழ்க்குரலில், கனிவு தோய்த்துத்தான் கேட்டாள்.

"ஒண்ணும் இல்லே மிஸ்" என்றான் ஜக்கு.

"பார். நீ ப்ரில்லியண்ட் பாய். எப்பவும் ஃபர்ஸ்ட் ரேங்க் வர்றவன். நீ எப்பவும் எப்படி இருப்பேன்னு எனக்குத் தெரியாதா? சொல்லு? நான் உன்னை கோச்சுக்க மாட்டேன். திட்டமாட்டேன். உங்க வீட்டுல கூட இனிமே எதுவும் வந்து சொல்ல மாட்டேன். என் கிட்டே மட்டும் சொல்லு. என்ன உன் ப்ராப்ளம்? உடம்புக்கு ஏதும் சரியில்லையா? வீட்டுல அப்பா, அம்மா சண்டை போடறாங்களா? உன்னை கவனிக்க மாட்டேங்கறாங்களா?"

"அதெல்லாம் இல்லை மிஸ்."

"பின்னே?"

அவனுக்கு அழுகை வந்துவிடும்போலிருந்தது. இதென்ன இப்படியொரு தர்மசங்கடம்? அவன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. டீச்சரிடமிருந்து தன்னால் தப்பிக்க முடியாதோ என்றும் அச்சமாக இருந்தது. எதையாவது காரணம் என்று சொல்லாவிட்டால் அவள் விடமாட்டாள் போலிருந்தது. சில விநாடிகள் அவசர அவசரமாக மனத்துக்குள் யோசித்துப் பார்த்துக் கொண்டான். எதற்கும் இருக்கட்டும் என்று பிள்ளையாருக்கு மூன்று பிரதட்சிணம் செய்வதாகவும் வேண்டிக் கொண்டான். பிறகு, "நீங்க இதை எங்கப்பாகிட்டே கேக்க மாட்டீங்கன்னா சொல்றேன் டீச்சர்" என்று சொன்னான்.

"சேச்சே. நான் எதுக்குக் கேக்கணும். எனக்கு நீ தான் முக்கியமே தவிர உங்கப்பா இல்லே. சொல்லு. தைரியமா சொல்லு. நான் அவர்கிட்டே பேசவே மாட்டேன். ஆனா எனக்கு உன் ப்ராப்ளம் தெரிஞ்சாகணும். நான் எதாவது ஹெல்ப் பண்ண முடியுமான்னு பாக்கறேன்."

மீண்டுமொருமுறை கடவுளை வேண்டிக் கொண்டு, துணிச்சலை வரவழைத்துக் கொண்டு அவன் சொன்னான்: "தெரியலே மிஸ். கொஞ்சநாளா என்னவோ பயம்மா இருக்கு. என்னவோ கெட்டது நடக்கும்னு அடிக்கடி தோணுது. எனக்கா, எங்கப்பாவுக்கா, அம்மாவுக்கான்னு தெரியலே. ரொம்ப பயமா இருக்கு. படிக்கவே முடியலே... ராத்திரி தூக்கமே வரமாட்டேங்கறது..."

"சீச்சீ! அப்படியெல்லாம் ஏன் நினைக்கறே? நீ எவ்ளோ ப்ரில்லியண்ட் பாய்! உனக்குப் போய் கெட்டது நடக்கறதாவது? நோ சான்ஸ்! என்னதிது? ம்? ஏதாவது கெட்ட கனவு கண்டியா எப்பவாவது? யாரானா உன்னை பயமுறுத்தினாங்களா?"

"அதெல்லாம் இல்லே மிஸ்."

"வீட்டுல உன்னை யாராவது திட்டினாங்களா எப்பவாவது?"

"அதெல்லாம் இல்லே மிஸ்."

"அப்பா அடிச்சாரா?"

"இல்லே மிஸ்."

"காரணமே இல்லாம ஏன் அப்படி உனக்குத் தோணணும்? ஏதாவது ரீசன் இருக்கும் இல்லே?"

சற்று நேரம் பேசாமல் யோசித்தபடி இருந்த சந்திரா டீச்சர் பிறகு மீண்டும் திடீரென்று "உங்க தாத்தாவுக்கு என்ன வயது?" என்று கேட்டாள்.

"எழுபத்தஞ்சு ஆறது மிஸ்."

"அவர் அடிக்கடி நான் செத்துப் போயிடுவேன், அப்படி இப்படின்னு ஏதாவது சொல்லுவாரா வீட்டுல?"

"சேச்சே. மாட்டார் மிஸ்."

"பாட்டி?"

"எங்க பாட்டி சுலோகம் சொல்ல மட்டும்தான் வாயே திறப்பா."

"அப்புறமென்ன? பார், உங்க பாட்டி எவ்ளோ சுலோகம்லாம் சொல்றாங்க? உங்கம்மாவும் சொல்லுவாங்கதானே? அப்புறம் எப்படி கெட்டதெல்லாம் நடக்கும்? தினசரி சுலோகம் சொல்லறவங்க வீட்டுல ஒரு கெடுதலும் வராது. தெரியுமா உனக்கு?"

"அப்படியா மிஸ்?"

"ஆமா. அதுவுமில்லாம உன்மேல உன் பேரண்ட்ஸ் எவ்ளோ அன்பா, அக்கறையா இருக்காங்க? இன்னிக்கு அத்தனை காலைல எவ்ளோ ஆசையா உன்னைக் கொண்டு வந்து பஸ் ஏத்தி விட்டாங்க? நீயே சொல்லு. கேட்டதெல்லாம் வாங்கித்தராங்க இல்லே? அடிக்கறதில்லே. திட்றதில்லே. அவங்களும் சண்டை போட்டுக்கறதில்லைன்னு நீயே சொல்றே. அன்பான குடும்பம். பாதுகாப்பா வயசான தாத்தா, பாட்டியெல்லாம் இருக்காங்க. உனக்கு ஏன் இந்தத் தேவையில்லாத பயமெல்லாம்? அதுவும் படிக்கிற பையன் நீ! எதாவது கண்ட சினிமா, சீரியல் பார்த்தியா?"

அந்தப் பேச்சை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தே தீரவேண்டும் என்று நினைத்தவன் "சீரியல்ஸ் சிலது பார்ப்பேன் மிஸ். மந்திரவாதி சீரியல்ஸ்."

## கடிகாரச் சாவி இரண்டு கிலோ!

மதுரையில் இருநூறு கிலோவில் ஒரு கடிகாரம் இயங்கிக்கொண்டிருக்கிறது. நாயக்கர் மகாலிலுள்ள முன்பக்கக் கோபுரத்தில் இருக்கிறது இக்கடிகாரம். 1873ல் லார்டு நேப்பியர் என்ற கவர்னரால் நிறுவப்பட்ட இந்தக் கடிகாரத்தை, 1913ல் ஒரு தடவை பழுது பார்த்தனர். அதன் பிறகு இக்கடிகாரமும் ஜீவனை இழந்து விட்டது. கிட்டதட்ட தொண்ணூறு ஆண்டுகள் ஓடாத கடிகாரத்திற்கு

இப்போது உயிர்கொடுத்து விட்டார்கள். மதுரையிலுள்ள கடிகாரம் பழுது நீக்குவோர் சங்கத் தலைவர் சந்தானத்தின் தலைமையில், இருபத்தைந்து ஞாயிற்றுக் கிழமைகளில் பத்துப் பேர் முனைந்து உழைத்து, சரி செய்து, ஓடச் செய்து விட்டனர். கருவிகள் செலவுகள் என, சங்கத்தினர் இருபத்திரண்டாயிரம் செலவிட்டனர். கடிகாரச் சாவி மட்டும் இரண்டு கிலோ எடையுள்ளது.

படமும், தகவலும்:
இரா. கல்யாண சுந்தரம்



"அதான்!" என்று டீச்சருக்கு ஒரு முடிவு கிடைத்துவிட்டதில் அவனுக்குத் தாற்காலிகமாக ஒரு நிம்மதி கிடைத்தாற்போலிருந்தது.

"அதையெல்லாம் பாக்காதே. படிக்கிற வயசுல எதுக்கு சீரியல்ஸ்?ம்? கார்ட்டூன் நெட்வொர்க் பார். அதுபோதும். ஜாலியா இருக்கும்."

"சரி மிஸ். இனிமே சீரியல்ஸ் பார்க்க மாட்டேன். ப்ராமிஸ்."

"தட்ஸ் தி ஸ்பிரிட்! உற்சாகமா இரு ஜக்கு. ஜாலியா இரு. எப்பவும் இப்படி நீ உம்முனு இருந்தா எனக்கே கஷ்டமா இருக்கே, உங்க பேரண்ட்ஸுக்கு எப்படி இருக்கும்? ம்?"

"சாரி மிஸ். இனிமே சரியா இருக்கேன்" என்று அவன் சொன்னான்.

தலையைக் கோதிக்கொடுத்துவிட்டு டீச்சர் எழுந்து தன் பழைய இருக்கைக்குப் போனதும் தான் அவனுக்கு நிம்மதியாக இருந்தது. கூடவே மனத்துக்குள் 'ஜக்கு நீ ஏன் இவ்ளோ கெட்டுப் போயிட்டே? மிஸ்கிட்டே போய் எவ்ளோ பொய் சொல்றே?" என்றும் ஒரு குரல் கேட்டது.

'நான் ஒரு பொய்யும் சொல்லலை. ப்ராமிஸ்தானே எல்லாம்? வீட்டுல ஏதோ ஒரு கஷ்டம் வரப்போகுதுன்னு எனக்குத் தோணறது நிஜம் தானே' என்றும் அவனே சொல்லிக் கொண்டான்.

ஒரு பத்து நிமிஷம் ஆகியிருக்கும். நாற்காலிக்கு அடியிலிருந்து விக்கி அவன் காலை நக்கிக் கூப்பிட்டது.

"என்னது?"

"கஷ்டம் வரப்போகுதா? யாராலே?"

"ஏன் கேக்கறே?"

"இல்லே, உனக்குத் தெரியுமோன்னு கேட்டேன்."

"யாராலே வரும்? வந்தா எங்கப்பாவாலேதான்."

"அதான் இல்லைங்கறேன்."

"பின்னே?"

"உன்னாலேதான்."

"என்னாலா?"

"ஆமா, பயந்துடாதே. உனக்கு எச்சரிக்கை குடுக்கறது என் கடமைன்னு லார்ட் ஆஞ்சநேயர் இப்பத்தான் எனக்கு சொன்னார். அதான் சொல்றேன்."

"என்னால என்ன கஷ்டம்?"

"ம்? பின்னே? இந்த டூர்ல நீ பாதியிலேயே நைஸா நழுவி, காணாமப் போகப்போறியே, அது உங்க வீட்டுக்குக் கஷ்டமில்லியா?"

(தொடரும்)

● ஆவரேஜ்

தேசபக்தியைப் போலவே தமிழ் சினிமாவில் கூவி விற்கப்படும் மற்றொரு விஷயம் தீவிரவாதம். ஆனால் தீவிரவாதிகள் யார்? அவர்களது கொள்கைதான் என்ன? மக்களுக்கும் அவர்களுக்குமான தொடர்பு? அவர்களது குரலைக் காது கொடுத்துக் கேட்கலாமா? என நீளும் கேள்விப் பட்டியலைத் தூக்கிக் குப்பையில் போட்டுவிட்டு, அவர்களை வில்லன்களாக மட்டுமே சித்திரிப்பதில் நம் தமிழ்த் திரைக் கதாசிரியர்கள் கில்லாடிகள். கொஞ்சம் விதிவிலக்காக இருக்கிறது ஒற்றன்.




காஷ்மீர் பிரச்னை பற்றி வாய் திறக்காவிட்டாலும், பாராளுமன்றத்தில் தாக்குதல் நடத்த வருகிறவர்கள், பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐயால் பயிற்சி கொடுத்து அனுப்பப்படும் முஸ்லிம் தீவிரவாதிகள் என்பதாகக் காட்டுகிறார் இயக்குனர். முஸ்லிம் தீவிரவாதிகள் வேறு, அப்பாவி முஸ்லிம் மக்கள் வேறு. அவர்களின் மனநிலை வேறு என்பதையும் காட்டிவிடுகிறார். (வெல்டன்! இளங்கண்ணன். இயக்குனர் ஷங்கரிடம் இணை இயக்குனராக இருந்திருக்கிறார்.)

சரி! அர்ஜுனுக்குப் படத்தில் என்ன வேலை! பாகிஸ்தானில் பயிற்சி பெற்று இந்தியாவுக்குள் ஊடுருவும் தீவிரவாதிகளைத் தொடக்கத்திலேயே மோப்பம் பிடித்து, என்கவுண்டர்களால் கிள்ளி எறியும் 'ரா' உளவுப்பிரிவின் அதிகாரி.

மாறுவேடங்களில் வந்து, துப்பாக்கி பிடித்துச் சுடுகிறார். சும்மா சொல்லக் கூடாது, துப்பாக்கிச் சண்டைகள் ஆகட்டும், மோதல்கள் ஆகட்டும், ஸ்டண்ட் மாஸ்டர் பீட்டர் ஹெயினின் சண்டைக் காட்சிகளில் மின்சாரமே உற்பத்தி செய்யலாம் போலிருக்கிறது. அம்மா, அப்பா, அண்ணன் எல்லோரும் தீவிரவாதிகளின் பிடியில் சிக்கியிருக்கும்போது, அது பற்றிய பிரக்ஞையற்று அர்ஜுனுடன் டூயட் பாடும் வழக்கமான கதாநாயகி பாத்திரம் சிம்ரனுக்கு.

பிரவீன்மணியின் இசையில் 'ஓர் பார்வை' பாடல் மட்டும் தாலாட்ட, எஞ்சியவை டப்பாங்குத்து ஆடுகின்றன. படத்தில் பளிச்சென்று தெரியும் விஷயம் ஆக்ஷன் பிளாக்குகளில் பட், பட்டென்று ஷாட்டுகளுக்கு ஃபாஸ்ட் கட் கொடுத்து அசத்தியிருக்கும் சாய் சுரேஷின் படத்தொகுப்பு.

தேசபக்தியும் திரை மசாலாவும் கலந்த கூட்டாஞ்சோறு!

— விஷுவல்தாசன்

## செட் டாப் பாக்ஸ்

# ஆண்கள் உலகில்...



• எஸ்.வி. சேகர்

'மெட்டிஒலி'யில் அல்டாப் மாப்பிள்ளையாக ரகளை பண்ணும் திருச்செல்வம், இப்போது விகடன் டெலிவிஸ்டாஸ்க்காக கோலங்களை இயக்கிக் கொண்டிருக்கிறார்.

"ஆண்கள் உலகில் ஒரு பெண்ணின் நிலைதான் இத் தொடரின் ஒரு வரிக் கதை. தனது எல்லா உணர்வுகளையும் வெளிக்காட்ட நினைக்கும் ஒரு பெண், சந்திக்க நேரும் சிக்கல்களை மிக இயல்பாகச் சொல்லியிருக்கிறோம்" என்கிறார் திருச்செல்வம்.

தேவயானி, நளினி, பொன்வண்ணன், சுபலேகா சுதாகர், மஞ்சரி என்று பெரிய நட்சத்திரப் பட்டாளமே இதில் கலக்கிக் கொண்டிருக்கிறது. 'மெட்டி ஒலி'யில் இயல்பான வசனம் எழுதும் பாஸ்கர் சக்தி தான் இத் தொடருக்கும் வசனம்.



• தேவயானி

விஜய் டீ.வியில் 'ஆல் இன் ஆல்' சேகர் நிகழ்ச்சியில், இடக்கு மடக்கு பண்ணும் எஸ்வி. சேகரிடம் நாமும் 'இடக்கி'னோம்!

**அது என்ன ஆல் இன் ஆல் சேகர்?**

இன்னிக்கு, ஒருத்தருக்கு எல்லா விஷயமும் தெரிஞ்சிருக்கணும்னு அவசியமில்லை. எல்லாம் தெரிஞ்ச மாதிரி ஷோ காட்டினாப் போதும்.

**கன்ஸ்ஹியூமர் கோர்ட்னு வெச்சிருக்கீங்களே, நீங்க கன்ஸ்யூமர்களைக் கேலி பண்ணறீங்களா? இல்லை கோர்ட்டை இண்டலடிக்கிறீங்களா?**

ரெண்டுமில்லை. கோர்ட் போல கேள்விகள் கேட்டு, பதில்களை வரவழைத்து, கன்ஸ்யூமர்கள் மத்தியில் ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தறேன். அதைக் கொஞ்சம் நகைச்சுவையா செய்யறேன். அவ்வளவுதான்.

**ரெண்டு பேரை மோத விட்டுட்டு, வேடிக்கை பார்த்துக்கிட்டிருக்கீங்களே? ஏன் இந்தச் சிண்டு முடியற வேலை?**

இது சிண்டு முடியற வேலையும் இல்லை, கிராப் முடியற வேலையும் இல்லை. நீங்க கேட்கிறாப் போல எனக்கும் தோணிச்சு. நாம எதுக்கு வேடிக்கை பார்க்கணும்னுதான், இப்போ கேள்விகளை நானே கேட்கிறேன்.



• சிவசங்கர் பாபா



• திருச்செல்வம்

ஜெயா டீ.வியின் லேட்டஸ்ட் ஹிட் நிகழ்ச்சி 'தேன் கிண்ணம்'. தினமும் காலை 9.30 மணி முதல் 10.30 மணி வரை எப்போது கேட்டாலும் தெவிட்டாத திரையிசைப் பாடல்களை, ஒவ்வொரு நாளும் வித்தியாசமான யுக்தியில் தொகுத்து வழங்குகிறார்கள். திங்கள்தோறும் வி.ஐ.பி. சாய்ஸ் என்பதால், எஸ்பி.பி., குன்னக்குடி வைத்தியநாதன், சிவசங்கர் பாபா போன்ற பிரமுகர்கள் தங்கள் மனசுக்குப் பிடித்த பாடல்களைத் தொகுத்து வழங்கவிருக்கிறார்களாம்.

சிவசங்கர் பாபா தயாரித்துக் கொடுத்த பட்டியலில் இருந்தவை மொத்தம் 110 பாடல்கள்!

முதல் பாடல்... 'புத்தியுள்ள மனிதன் எல்லாம்!'

— அப்பு, மௌலி, ஆதர்ஷ்

படங்கள்: அப்துல்

# நடக்குமென்பார்: நடக்கும்!

**மேஷம்** : சுயமாகத் தொழில் செஞ்சுக்கிட்டிருக்கீங்களா? அப்படியானா, உங்களுக்கு இதுதாங்க பீக் டைம்! உங்க பேங்க் பேலன்ஸ் எக்கச்சக்கமா ஏறும். சுய தொழில் காரங்களுக்கு அடுத்தபடியா, நிர்வாகத்துறையில் இருக்கறவங்க, ஜிவ்'வுன்னு உயருவாங்க!

**ரிஷபம்** : உத்தியோகஸ்தர்களே, நீங்க கொஞ்சம் கவனமா இருக்கணும். 'வேலியிலே போற ஓணானைப் பிடிச்சு'ன்னு ஒரு சொலவடை இருக்கு. அது மாதிரி ஏதாவது ஏடாகூடம் ஆயிடும். குறிப்பா உயர் அதிகாரிகள் கிட்டே எச்சரிக்கையா இருங்க.

**மிதுனம்:** இந்த வாரம் முழுக்கத் தெளிவான சிந்தனையோட எல்லாக் காரியங்களையும் செஞ்சு பாராட்டு மழையிலே நனைவீங்க. சரளமான பண வசதி இருக்கும். பிரபுதனவான்கள், முக்கியஸ்தர்கள் உதவிக்கரம் நீட்டினா, யோசிக்காதீங்க.



**கடகம்** : குடும்பத்துலே குதூகலம் நிறைஞ்சு இருக்கும். பண வரவுக்குக் குறைச்சல் இல்லைங்கறதாலே, மனசு முழுக்க உற்சாகம் நிரம்பி வழியும். கோர்ட், கேஸ்னு நடையா நடந்துகிட்டு இருந்தீங்க, இல்லையா? இனிமே, பிரச்னை எல்லாம் நல்லபடியா தீர்ந்து போய் நிம்மதிப் பெருமூச்சு விடுவீங்க.

**நடிகர் விக்ரமுக்கு (துலாம்) புதிய முயற்சிகள் வெற்றி தரப் போகுதாமே!**

**சிம்மம்** : அலுவலகத்துலே எல்லோருடைய ஒத்துழைப்பும் அபரிதமிதமாக இருக்கும். பதவி உயர்வு, விரும்பிய இடத்துக்கு இடமாற்றம்னு சாக்லேட் நியூஸ் சமாச்சாரங்கள் நடக்கவிருக்கு! எந்தத் தொழிலானாலும், புதிய முயற்சிகள் பெரும் திருப்பங்களைக் கொண்டு வரும்.

**கன்னி** : ஏனோ தானோ என்றிருந்த உடல் நலம், மேன்மை பெற்று உற்சாகமான மனநிலை பெறுவீர்கள். எலெக்ட்ரானிக்ஸ், விஞ்ஞானம் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றம் அடைவார்கள். சட்டம், காவல், இராணுவம் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு அற்புதமான கால கட்டம். திறமை கூடும்!

**துலாம்** : 'ஜாண் ஏறினால் முழம் சறுக்கும்' நிலைமை உங்களுக்கு இதுவரை இருந்தது என்னவோ வாஸ்தவம்தான்! ஆனால் உங்களுடைய மன உறுதி, விடா முயற்சி, கடுமையான உழைப்பு இவற்றுக்கெல்லாம். பலன் கிடைக்காமல் போகுமா என்ன? புதிய முயற்சிகள் வெற்றிகளைத் தந்து உங்களை உற்சாகப்படுத்தும். குறிப்பாக பண நெருக்கடி இருக்காது. குடும்பத்தில் அமைதியும், அன்பும் நிறைந்து காணப்படும்.

**விருச்சிகம்** : குடும்பஸ்தானத்தை குரு பகவான் கருணை விழிகளால் பார்க்கிறார். எனவே, குடும்பத்தில் இதுவரை, இருந்து வந்த குழப்பங்களும் விரோத மனப்பான்மையும் குறைந்து ஒற்றுமை ஏற்படும். பெண்களுக்கு பொன், பொருள், ஆடை ஆபரணச் சேர்க்கை உண்டு. ஏற்றுமதி இறக்குமதி வியாபாரத்தில் கவனம் தேவை.

**தனுசு** : புதியவர்கள் யாரேனும் அறிமுகம் ஆனால், நல்ல நட்புறவு ஏற்படுத்திக் கொள்ளுங்க. அவங்களாலே உங்கக் காரியங்கள் 'மளமள'ன்னு நடக்கக் கூடிய வாய்ப்பு இருக்கு. 11ம் இடமான லாபஸ்தானத்துலே சூரியன், புதன், கேது சஞ்சாரம்ங்கிறதாலே எடுத்த காரியங்கள் அனைத்திலும் வெற்றியே கிடைக்கும்.

**மகரம்** : வரவு எட்டணா, செலவு பத்தணா வாழ்க்கை உங்களுடையது. நீங்களும்தான் எப்படியெல்லாமோ பட்ஜெட் போடறீங்க. ஆனா பெரிய துண்டு விழறதைத் தடுக்கவே முடியலையே. ஆனால் எல்லாமே சுபச் செலவுகள் தாம் என்பதால் நன்மையே ஏற்படும்.

**கும்பம்** : உங்கள் ராசிநாதன் சனி 5ம் இடத்தில் பூர்வ புண்ணியஸ்தானத்தில் சஞ்சாரம் என்பதால் தெய்வ பலம் காரணமாக புனித காரியங்களில் ஈடுபாடு அதிகரிக்கும். குல தெய்வப் பிரார்த்தனை, பூஜை நிறைவேறும். வெளி நாட்டில் வசிக்கும் மக்களிடமிருந்து நல்ல தகவல் வந்து சேரும்.

**மீனம்** : பேச்சிலும், செயலிலும் நிதானம் தேவை. அலுவலகத்தில் கூடுதல் பொறுப்புகளை ஏற்க வேண்டியிருந்தால், சிரத்தையுடன் செயல்படவும். இதனால் பிற்காலத்தில் நன்மையே விளையும். பண விஷயம் கொஞ்சம் வறட்சியாகவே இருந்தாலும் எதிர்பாராத வகையில் உதவி வந்து சேரும்.

## அக்னிசர்மா பக்கம்

**நவம்பர் 5 முதல் 11 வரை...**



ஸ்ரீ வாருணேஸ்வரர் துணை

குடந்தை - வடமட்டம் அருகே அமைந்துள்ள சிவனாரகரம் (நாகை மாவட்டம் - மயிலாடுதுறை வட்டம்) ஸ்ரீ ஜலமுகுள நாயகி சமேத ஸ்ரீவாருணேஸ்வரர் மற்றும் ஸ்ரீ அய்யனார், ஸ்ரீ பிடாரி அம்மன் ஆலய மகா கும்பாபிஷேகம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் அனுக்ரஹத் துடனும், வருகிற 12.11.2003 புதன்கிழமை காலை 9 மணிக்கு மேல் நடைபெறுகிறது. இத் திருப்பணிக்கு பண உதவி / பொருளுதவி செய்த அன்பர்கள் அனைவரும் இக் கும்பாபிஷேகத்திற்கு வந்து இறையருள் பெற வேண்டுகிறோம். இத் திருத்தலம் கீர்த்திமான் என்ற காவிரியின் கிளையாற்றின் கரையில் வருண தீர்த்தமாக அமைந்துள்ளது.

இக் கும்பாபிஷேகத்திற்குப் பிறகு நடைபெறவிருக்கும் மண்டலாபிஷேக பூஜைகளுக்கும் / கோவிலின் பராமரிப்புக்கும் பக்தர்கள் தங்களால் இயன்ற பண உதவியை Cheque/DD மூலமாக ***Varuneswarar Temple Renovation Fund A/c No. 1150 Bharat Oversear Bank Ltd, Kumbakonam 612 001*** என்ற விலாசத்திற்கு அனுப்பவும். பொருளுதவி செய்வோர் திரு விஸ்வநாதன்/ திரு. ராமமூர்த்தி 0435 - 2449452க்கு தொடர்பு கொள்ளவும் வேண்டுகிறோம்.

இப்படிக்கு

**இறைவன் நற்பணி மன்றம்**
**சிவனாரகரம் 612 201**

---

# மங்கையர் மலர்

## திருமண மலர்

## பயனடைந்தவர்கள் பாராட்டு!



மஞ்சுளா - பரமேசுவரன்



பி.கோபாலகிருஷ்ணன்
நங்கநல்லூர்,
சென்னை - 61

**எ**னது மூத்த மகனுக்கு ஒரு நல்ல வரன் கிடைக்க உதவி செய்த மங்கையர் மலருக்கு என்றென்றும் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். நான் கொடுத்த விளம்பரம் ஏப்ரல் 2003 இதழில் வெளியானது. தபால் மூலம் நிறைய கடிதங்கள் வந்தாலும், தொலைபேசி மூலம் அறிமுகமாகி வந்த ஒரு வரன், எங்களுக்கு உடனே பிடித்துப் போக, நிச்சியதார்த்தம் சீக்கிரமே செய்து, திருமணம் 18.6.2003 அன்று சென்னையில் விமரிசையாக நடந்தேறியது. இதேபோல் என்னுடைய இரண்டாவது மகனுக்கும் சிறந்த வரன் கிடைக்க வேண்டும் என்று விரும்பி திருமண மலர் விளம்பரத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

**மணமக்களுக்கு எங்களது நல் வாழ்த்துக்கள்! இதுபோல் நீங்களும் திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்து பயனடையலாமே!**

'திருமண மலர்' பகுதியில் விளம்பரம் செய்ய அணுகவும் :

மானேஜர், திருமண மலர் பகுதி, கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை-97 தொலைபேசி : 22345622/23/24 தொலைநகல் : 044-2234 5621

மங்கையர் மலர் இன்டர்நெட் முகவரி : www.mangayarmalaronline.com

# கிராமம் நகரம் மாநகரம்

15



நா.முத்துக்குமார்

*"இங்கு எல்லாமே*
*மனத்தை வலிக்கத்தான்*
*செய்கின்றன*
*இலைகளை இழந்துவிட்டு*
*கிளைகளோடு நிற்கிற*
*மரங்களும்;*
*சதைகளை இழந்துவிட்டு*
*எலும்புகளோடு திரிகிற மனிதர்களும்!"*

- தரும. ரத்தினக்குமார்
('கோடை' தொகுப்பிலிருந்து...)

"இருபது வயதில் ஒருவன் கம்யூனிஸ்டாக மாறவில்லை என்றால் அவனிடம் ஏதோ கோளாறு இருக்கிறது என்று அர்த்தம்; நாற்பது வயதிற்குப் பிறகும் ஒருவன் கம்யூனிஸ்டாகவே இருக்கிறான் என்றால், அவனிடமும் ஏதோ கோளாறு இருக்கிறது என்று அர்த்தம்" என்று சொல்லுவார்கள். என் இருபது வயதில் நான் கம்யூனிஸ்டாக இருந்தேன். கண்களிலும் கனவுகளிலும் தீ எரிந்த நாட்கள் அவை. கம்யூனிசமும் கம்யூனிச இலக்கியங்களும், என்னுள்ளும் என் படைப்புக்குள்ளும் உள்ளார்ந்த மனித நேயத்தை ஊற்றின. வெங்காற்றின் புழுக்கம் வீசும் இரவுகளில், முற்றத்துக் கயிற்றுக் கட்டிலில் ரஷ்யக்கதைகளின் பனிப்பொழிவுகள் என்னருகே அமர்ந்து குளிர்ந்த வார்த்தைகள் பேசின. மாநகரத்தில் வாழ்ந்தாலும், மனத்தளவில் ஒரு கிராமத்தானாக நான் இருப்பதற்கு இவையெல்லாம்தான் காரணம் என நினைக்கிறேன்.

பதினைந்து வயதில் நான் கம்யூனிஸ்டாக மாறினேன். என்னை மாற்றியது தோழர் லெனின் சுப்பையா. லெனின் சுப்பையா அப்போது காஞ்சிபுரம் பேருந்து நிலையத்தில் பழக்கடை வைத்திருந்தார். ஒரு அகன்ற தள்ளு வண்டியே அவரது கடை. முன்புறம் வாடிக்கையாளர்கள் மற்றும் தோழர்கள் அமர இரண்டு மர பெஞ்சுகள். லெனின் சுப்பையா இலேசாக வழுக்கை விழுந்து நெடிய உயரத்துடனும், கம்பீரமான தோற்றத்துடனும், கொஞ்சம் நடிகர் எஸ்.எஸ். ராஜேந்திரன் சாயலில் இருப்பார்.

அவரது பழக்கடையில் எப்போதும் கூட்டமிருக்கும். வாடிக்கையாளர்கள் அல்ல; அவரையும் மற்ற நண்பர்களையும் சந்திக்க வரும் தோழர்கள். கட்சி ஆபீசை அடுத்து தோழர்கள் சந்திக்கும் இடமாக அவரது கடை இருந்தது. எப்போது சென்றாலும் யாராவது இரண்டு தோழர்கள் அமர்ந்து, அன்றைய அரசியல் போக்கையோ, இலக்கிய மாற்றங்களையோ விவாதித்துக் கொண்டிருப்பார்கள். வாடிக்கையாளர்களை கவனித்துக் கொண்டே நடு நடுவே தோழர் லெனின் சுப்பையா, விவாதத்தில் கலந்து கொள்வார்.

பேருந்து நிலையங்களுக்கென்று ஒரு பிரத்யேக முகம் இருப்பதை நீங்கள் கவனித்ததுண்டா? எல்லா ஊர்களின் பேருந்து நிலையங்களும் பஸ் ஏஜெண்டுகளின் பீடி செருகிய குரல்களாலும், இஞ்சி மரப்பா விற்பவர்களின் கரகரப்பான குரல்களாலும் விழித்துக் கொள்கின்றன. ஆண் பெண் படம் வரைந்த நவீன கட்டணக் கழிவறைகள் இருந்தும், இருண்ட, குறுகிய சந்துகளை மூத்திரச்சந்துகளாக மாற்றிவிட்டு பின் தொடர்ந்து ஓடிவரும் மனிதர்களுக்குப் போக்குக் காட்டி, தொலைவில் சென்று நிற்கும் பேருந்துகளின் கர்வத்தோடும், கொய்யாப்பழம், தண்ணீர்ப் பாக்கெட், லாட்டரிச் சீட்டு விற்பவர்களின் ஏறி இறங்கும்



காலகளோடும், பேருந்து நிலையங்கள் பரபரப்படைகின்றன. கிராமத்திலிருந்து புழுதிகளுடன் நகரத்தை வந்தடையும் பேருந்துகளுக்கு மாறாக, டீசல் புகையுடன் கிராமத்திற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் காஞ்சிபுரம் பேருந்து நிலையம், இந்த அம்சங்களுடனும் கூடுதலாக நிலையத்தின் ஒற்றைத் தூணெடுத்து உயர்ந்து நிற்கும் கோபுரத்தின் சங்கு சப்தத்துடனும் தன் நாளைத் தொடங்கும். ஒவ்வொரு நாளும் வெவ்வேறு மனித முகங்கள் பொருத்திய கம்பளங்களை அது விரித்துக் கொண்டிருக்க, தோழர் லெனின் கப்பையாவின் கடையருகில் அமர்ந்து கவனித்துக் கொண்டிருப்போம்.

தோழர் லெனின் கப்பையா எனக்கு அறிமுகமான சம்பவம் சுவாரசியமான ஒன்று. நான் தொலைத்த ஒன்று அவரை எனக்குத் தேடிக் கொடுத்தது. அப்போது நான் காஞ்சிபுரம் அந்திரசன் மேல் நிலைப்பள்ளியில் பத்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தேன். எங்கள் கிராமத்திலிருந்து காஞ்சிபுரத்திற்குப் பேருந்தில் சென்று வருவேன். மாலையில் பள்ளி முடிந்து என் ஊருக்குச் செல்லும் பேருந்திற்காக அவரது பழக்கடையின் முன்புதான் காத்திருப்பேன். ஒருமுறை பேருந்தைப் பிடிக்கும் அவசரத்தில், புத்தகப் பையை அவரது கடை பெஞ்சிலேயே மறந்து வைத்து விட்டு, பேருந்தில் ஏறி வீட்டிற்கு வந்து விட்டேன். காக்கி வண்ணத்தில் தோளில் மாட்டக் கூடிய மிலிட்டெரிப் பை அது. வீட்டிற்கு வந்தபோது தான் முதுகு இலேசாக பாரம் இல்லாமல் இருப்பதை உணர்ந்தேன். எங்கு வைத்தோம் என்பது மறந்து விட்டது. திரும்பவும் சைக்கிளில் பள்ளிக்கு வந்து தேடிப் பார்த்து விட்டு, சோர்ந்து போய் வீட்டிற்கு வந்து, கவலையுடன் படுத்தேன்.

இரவு பதினொரு மணி வாக்கில் என் பெயரைச் சொல்லி விசாரித்தபடி, லெனின் கப்பையா வீட்டிற்கு வந்தார். அவரைப் பார்த்ததும் பழக்கடைக்காரர் என்று தெரிந்து விட்டது. அதற்கு முன்பு நான் அவருடன் அவ்வளவாகப் பேசியதில்லை. "அஞ்சே கால் மணி பஸ் போயிடுச்சா?" என ஓரிருமுறை கேட்டிருக்கிறேன். நோட்டுப் புத்தகத்தில் எழுதியிருந்த என் முகவரியைப் பார்த்துவிட்டு, இரவு கடையடைத்ததும் வந்ததாகச் சொன்னார். "ரொம்ப நன்றிங்க... காலையில் பஸ் ஸ்டாண்ட்லயே பார்த்துக் கொடுத்திருக்கலாமே... எதுக்கு வீண் சிரமம்" என்றார் அப்பா. "பரவாயில்லீங்க... படிக்குற புள்ள... ஏதாவது முக்கியமானது விட்டுப் போயிடுமோன்னுதான்" என்று சொல்லிவிட்டு விடை பெற்றுக் கொண்டார். அதற்குப் பிறகு அவருடன் நன்றி கலந்த நெருக்கம் உண்டானது.

அப்போது நான் "வானவில்... வானத்தில் இருக்கும் வில்" என்று ஆர்வக் கோளாறுத்தனமாக கவிதை எழுதிக் கொண்டிருந்தேன். என் புகைப் படத்துடன் சிறுவர் இதழ் ஒன்றில் வந்த கவிதையை யதேச்சையாகப் பார்த்து விட்டு, "நீங்க கவிதை எழுதுவீங்களா தோழர்?" என்று லெனின் கப்பையா ஒரு நாள் கேட்டார். "எப்பவாச்சும் எழுதுவேங்க!" என கூச்சத்துடன் சொன்னேன்.

என்னை அவர் 'தோழர்' என்று அழைத்தது ஆச்சரியமாக இருந்தது. வயது வித்தியாசம் மறந்து முதல் முறையாக அந்த வார்த்தை என் ஞாபக அடுக்கில் வந்தமர்ந்தது. உலகில் மிகவும் இனிமையான பாஷை, இரண்டு இதயங்கள் தங்களுக்குள் பேசும் பாஷைதான் என்பதை அந்த வார்த்தை எனக்கு அறிமுகப்படுத்தியது. நாங்கள் தோழர்களானோம். தினந்தோறும் மாலையில் என்னைப் பார்த்ததும், "டீ சாப்பிடுங்க தோழர்" என்று பக்கத்தில் இருக்கும்

கடையில் தேநீர் சொல்லுவார். எனக்கு மட்டுமல்ல, அவரைத்தேடி எத்தனை தோழர்கள் வந்தாலும் "டீ சாப்பிடுங்க தோழர்" என்றுதான் உரையாடலை ஆரம்பிப்பார். அவரது பழக்கடையில் விற்பனையாகும் காசை விட, அதிகமாக தேநீர்க் கடையில் அவரது கடன்தொகை ஏறிக் கொண்டிருக்கும். அரைமணி நேரத்திற்கொருமுறை பக்கத்து தேநீர்க் கடையில் "தோழர் கடைக்கு அஞ்சு டீ" என்றோ, "தோழர் கணக்குல எட்டு டீ" என்றோ, குரல் ஒலித்துக் கொண்டிருக்கும்.

கன்னம் குழி விழுந்து சதா எரியும் அக்னிக் கண்களுடனும், தன் போக்கில் வளர்ந்திருக்கும் தாடியுடனும், வறுமையை கம்பீரமாக ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்துடனும், தினமும் சில தோழர்கள் அவர் கடைக்கு வருவார்கள். சித்தாந்தங்களும் தோழர் லெனின் சுப்பையா உபசரிக்கும் தேநீருமே அவர்களின் பசிக்கு அன்றைய உணவாய் மாறும்.

தோழர் லெனின் சுப்பையா டீக்கடை பெஞ்சுகளில் அமரும் தோழர்களையும், ரஷ்ய இலக்கியங்களையும் அறிமுகப்படுத்தி, என் திசையைத் தடம் மாற்றினார். பின்புக்கும் பின்பு அத்தோழர்கள் மூலமாக 'இலக்கிய வட்டம்' வெ. நாராயணன் அறிமுகமாகி, நான் நவீன இலக்கிய வாசகனானேன்.

ஒருமுறை தோழர் லெனின் சுப்பையா என்னை அவர் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். காஞ்சிபுரத்தின் விளிம்பில் செவிலிமேடு என்ற இடத்தில் ஓர் ஓலைக் குடிசை. குனிந்து உள்ளே நுழைந்தோம். பத்து வயது மதிக்கத்தக்க அவரது பையன் ஜாமெண்ட்ரி பாக்ஸிலிருந்து பென்சிலை எடுத்து கூர் தீட்டிக் கொண்டிருந்தான். அவரது மனைவி முருங்கைக் கீரையை இணுக்கிக் கொண்டிருந்தார்கள். வீடு முழுக்க புத்தகங்கள் இறைந்து கிடந்தன. ஒன்றை எடுத்துப் பிரித்தேன். 'அடிப்படை பொருள் முதல் வாதம் பற்றிய கட்டுரை நூல். பின்பு பலமுறை அவரது கடை விடுமுறை நாட்களில் அவருடன் திரிந்திருக்கிறேன். காஞ்சியின் ஒவ்வொரு நீள அகலத்தையும் எனக்கு அறிமுகப்படுத்தி, அதன் சிறப்புகளையும் இயல்புகளையும் சொல்லிக் கொண்டு வருவார். "நாம பொறந்து வளர்ந்த ஊரை நாம முழுமையா தெரிஞ்சிக்கணும் தோழர்... அப்பத்தான் நம்மை நாம புரிஞ்சுக்க முடியும்... நம்மை நாம புரிஞ்சிக்கிட்டாதான் நம்ம சமூகத்தைப் புரிஞ்சுக்க முடியும்" என்பார்.

பள்ளி, கல்லூரி முடிந்து நான் சென்னைக்கு வந்துவிட்டேன். சில மாதங்களுக்குப் பிறகு ஊருக்குச் செல்கையில், அவரது பழக்கடை இருந்த இடம் வெறுமையாக இருந்தது. வீட்டிற்குச் சென்று அவரைப் பார்த்தேன். உடல்நிலை சரியில்லாமல் ரொம்பவும் இளைத்துப் போயிருந்தார். "டீ சாப்பிடுங்க தோழர்" என்று கடைக்கு அழைத்துப் போனார். "கடை நஷ்டத்துல ஓடிச்சி தோழர்... ஒடம்பு வேற சரியில்லை" என்றார். மாநகரம் என்னை விழுங்கிய பின் அவரைச் சந்திக்கும் நாட்கள் விலகிக் கொண்டிருந்தன. நடுவில் ஒருமுறை அவர் வாடகை ஆட்டோ ஓட்டுகிறார் என்று கேள்விப்பட்டேன்.

சென்ற வருடம் ஊருக்குச் சென்றபோது வேறு ஒரு தோழரிடம் அவரைப் பற்றி விசாரித்தேன். "தோழர் லெனின் சுப்பையா பத்து நாளைக்கு முன்பு உடம்பு சரியில்லாம இறந்துட்டாரு" என்று தகவல் வந்தது. "சுடுகாட்டுக்கு நாங்களும் போனோம் தோழர்... அவரை எரிக்கும்போது தீ கூட துக்கப்பட்ட மாதிரி இருந்திச்சி. செவப்புன்னா செவப்பு அப்படி ஒரு செவப்பு. மஞ்சளும் செவப்பும் கலந்த தீயைத்தான் இதுவரைக்கும் நான் பார்த்திருக்கேன்... வாழ்க்கையில் முதல் முறையா அப்படி ஒரு செந்தீயைப் பார்த்தேன். தீயிலிருந்து பிரியிற புகை எல்லாம் டீ சாப்பிடுங்க தோழர்னு சொல்லிக்கிட்டே போற மாதிரி இருந்திச்சி..." என்றார் அருகிலிருந்த தோழர். விழிகளில் உருண்டு விழும் தீயுடன் கேட்டுக் கொண்டிருந்தேன். இன்றைக்கும் மாநகரத்துத் தெருக்களில் அறிமுகமானவர்களைச் சந்திக்க நேர்ந்தால், என் உரையாடல் இப்படித்தான் தொடங்குகிறது. "டீ சாப்பிடுங்க தோழர்!"

(சந்திக்கிறேன்)

---

"ரொம்பக் காலமா வராமல் இருக்கிற கடன்களை பாங்க்ல தள்ளுபடி செய்யற மாதிரி நாமும் 'வராத மாமூல்களை' தள்ளுபடி செய்துட்டா என்ன சார்?"

"இப்படிக் கேட்க உனக்கு வெட்கமா இல்லே...? போய் வசூல் வேலையைக் கவனிய்யா...போ!"

— சீர்காழி வி.ரேவதி





# ஜயேந்திரர் போட்ட தடை!



வெகு நாட்களுக்குப் பிறகு, கொஞ்சம் சீரியஸான மேடை நாடகம் பார்த்த மகிழ்ச்சி, 'ஞானபீடம்' பார்த்தபோது!

சாதிக் கொடுமைக்கு ஆளாகும் நந்தன். இவரது மனைவிக்குப் பிரசவமாகிறது. அதே நேரத்தில் கொடுமைக்கார மிராசுதாருக்கும் குழந்தை பிறக்கிறது. மருத்துவமனையில் குழந்தைகளை மாற்றி விடுகிறார் நந்தன்!

மாறுபட்ட சூழ்நிலையில் வளர்ந்து, நந்தனின் உண்மையான பிள்ளை வேத வித்தான சங்கரனாகவும், மிராசுதாரின் உண்மையான பிள்ளை ராஜா ஐ.ஏ.எஸ். அதிகாரியாகவும் ஆகிவிடுகின்றனர். ராஜா, தான் காதலிக்கும் கிறிஸ்தவ மேலதிகாரியின் பெண்ணை மணப்பதற்காக, மதம் மாறக் கூடத் தயங்குவதில்லை. இந்தப் பின்னணியில் கிராமத்துக்கு விஜயம் செய்கிற ஒரு மடத்தின் தலைவர், வேதம், சாத்திரம் எல்லாம் படித்து ஞானப்பழமாக இருக்கிற சங்கரனைத் தம் மடத்தின் அடுத்த வாரிசாக எடுத்துக் கொள்ள விருப்பம் தெரிவிக்கிறார். நந்தன் இதைக் கேள்விப்பட்டுச் சுவாமிகளிடம் உண்மையைச் சொல்லிவிடுகிறார். பிறப்பால் மட்டுமே ஒருவர் அந்தணன் ஆகிவிடுவதில்லை. அவரவர்க்குரிய அனுஷ்டானங்களை அனுசரித்தே ஆகிறார் என்று சொல்லி, தமது முடிவில் மாற்றமில்லை என்கிறார் சுவாமிகள்.

'ஞானபீடம்' நாடகத்தின் கருத்து ஏற்க முடியாதது என்று சொல்லி, காஞ்சி சங்கராச்சாரியார் ஸ்ரீ ஜயேந்திரர், நாடகத்துக்குத் தடை விதித்துவிட்டார்.

நாடக மேடையில் பல வருட அனுபவங்கள் உள்ள நாடகாசிரியர் - இயக்குனர் மாலியும், அவரது குழுவினரும் நேரே சுவாமிகளிடம் எடுத்துச் சொல்லியும் ஜயேந்திரர் மசியவில்லை.

"பத்தொன்பது தேதிகள் வாங்கிவிட்டேன் நாடகத்துக்கு. இனி மேல்தான் செலவழித்த பணத்தை எடுத்தாக வேண்டும். சபாக்களிடம் நான் என்ன சொல்லி கான்சல் பண்ண முடியும்?" என்றுகூட மாலி கேட்டிருக்கிறார்.

"நீங்கள் தொடர்ந்து நாடகத்தை நடத்துவோம் என்று முடிவு எடுத்தால், யாராவது ஸ்டே வாங்க வேண்டி வரும்" என்றாராம் சுவாமிகள். "எஸ்.வி.சேகர் போல காமெடி நாடகம் போடுங்களேன்!" என்று ஆலோசனையும் வழங்கினாராம்.

பிரபல நரம்பியல் மருத்துவ நிபுணர் டாக்டர் பி. ராமமூர்த்தி, 'நாடகக் காவலர்' ஆர்.எஸ். மனோகர், இல. கணேசன் எல்லோருமே நாடகத்தைப் பார்த்துவிட்டு பாராட்டுக்களைத் தெரிவித்திருக்கின்றனர்.

"அனைவரும் பார்த்துப் பாடம் கற்க வேண்டிய நாடகம் இது" என்று பாராட்டியிருக்கிறார் இந்து முன்னணி தலைவர் இராம. கோபாலன்.

சுவாமிகளிடம் இந்த நாடகத்தைப் பற்றிய தவறான செய்தியைச் சொல்லி, தடை போடக் காரணமானவர், எம்.பி. தேர்தலில் தென் சென்னை மீது ஒரு கண் வைத்திருக்கும் காமெடி நடிகர்தான் என்கிறார்கள் கிசுகிசு வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள்!

- சாருகேசி

**அமரர் கல்கி நினைவு இளமைச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதை**

# நீ நீயாகவே...

பரபரப்புத் தாளவில்லை பாரதிக்கு. மறுபடியும் கேட்டான்.

''அம்மா நாளைக்குக் கண்டிப்பாய்த் தருவாய்தானே?''

''ம்... முதலில் பட்டியல் கையில் கிடைக்கட்டும்.''

ரத்னா திரும்பிப் படுத்து மகனின் தலையைக் கோதி விட்டாள். தள்ளிப் படுத்திருந்த மகள் சரோஜினி கண்ணைத் திறக்காமலேயே சலித்துக் கொண்டாள்.

''ஆரம்பிச்சிட்டீங்களா அம்மாவும் பிள்ளையும்?''

''அம்மா, அவளுக்குப் பொறாமைம்மா... அப்பா எனக்கு மட்டும் வச்சிட்டுப் போயிருக்கார்னு.''

''............''

''நீ பிரிச்சுப் பார்த்துட்டியாம்மா?''

''ச்சே ச்சே!''

''நிஜமாவா? எட்டு வருஷத்துல ஒருதரம் கூட பார்க்கத் தோணலையா?''

''இல்லை.''

சரோஜினி, பாயை விட்டு உருண்டே வந்து அம்மாவை நெருங்கினாள்.

''அம்மா... எத்தனையோ தரம் அதை நீ கையிலே வச்சுட்டு அழறதைப் பார்த்திருக்கேன்..''

''கடைசியா அவர் ஸ்பரிசித்ததாச்சே... அதனால அவரைப் பார்க்கணும்னு தோணறப்பல்லாம் எடுத்து கையிலே ஏந்திப்பேன். அவ்வளவுதான்.''

''ஆனா எட்டு வருஷமாகியும் பிரிக்கலை?''

''எப்படிடா முடியும்... அவர் வாக்கு எனக்கு வேதவாக்காச்சே. 'மகன் பாரதிக்கு'ன்னு உறை மேலே எழுதி மகனோட பதினாறாம் வயசிலே, அதுவும் பொதுத் தேர்வில் தொண்ணூறு சதவிகிதம் மார்க் வாங்கினா மட்டும் கொடுக்கச் சொல்லி உயிர் பிரியறதுக்கு முன்னால அவர் தந்ததை, நான் எப்படிப் பிரிச்சுப் பார்க்க முடியும்?''

''அம்மா, யூ ஆர் கிரேட்.''

''ஊஹூம்... உங்கப்பா தி கிரேட்டஸ்ட்.''

''என்னடி சொல்றே, ஆயிரத்து அறுபதா? அப்படின்னா எத்தனை சத விகிதம் ஆச்சு?''

அழுகை வெளிப்படையாகச் சிதற சீறினாள் சரோ.

''வெறும் எண்பத்து எட்டு பர்ஸண்ட் தான். அண்ணன் ஏமாத்திட்டாம்மா..''

''கண்ணா பாரதி, நீ ஏண்டா கண் கலங்குறே? நீ சும்மா இரு. தொண்ணூறுக்கு ரெண்டு பர்சண்ட்தானே குறை. பரவாயில்லை.''

''போம்மா, தொண்ணூத்தி அஞ்சு பர்ஸண்ட்டுக்கும் மேலேயே எடுப்பேன்னு எப்பவும் சொல்லுவானே... அதிலேயும் பாரு, கணக்குலே வெறும் நூற்று முப்பது அதாவது அறுவத்தி ஐந்து சதம். நாம் டாக்டர்னு ஆசைப்பட்டதும் போய், இப்போ எஞ்சினியர் சீட்டு கூடக் கிடைக்காதே.''

''சனியனே அழாதே. நாலு பேர் பார்க்கறாங்க... பாரதி, நீ எதையும் பெருசா எடுத்துக்காதே. மொதல்ல வீட்டுக்குப் போவோம். ஆட்டோ பிடி.''

வீடு வந்த பின்னர் சரோவின் ஆர்ப்பாட்டம் இன்னும் அதிகமாயிற்று.

''ஐயோ, ஒரு பர்சண்ட்னால அப்பாவோட கடைசி லெட்டரைக் கூட படிக்க விடாமப் பண்ணிட்டியே.. போண்ணா போ, என் மூஞ்சியிலே முழிக்காதே.''

அறைக்கு வந்த பாரதிக்கு உடம்பெல்லாம் நடுங்கியது. மனசுக்குள் ஒரு பிரளயமே நிகழ்ந்தது.

முதன் முதலாக உடைந்து அழுதான்.

**ஐஷ்வர்யன்**



"கண்ணா ப்ளீஸ், அறிவுள்ள மனுஷன் சுயசோகம் நினைச்சு அழக்கூடாது."

"எனக்காக மட்டும் அழலைம்மா.. நீங்க... தங்கச்சி எல்லாம் எவ்வளவு வருஷமா எத்தனை ஆவலா காத்திட்டிருந்தீங்க, அந்தக் கடிதம் மூலம் அப்பாவை மறுபடி சந்திக்க..."

"இங்க பாரு, அதுதான் உன் வேதனைன்னா... இதோ அந்தக் கடிதம். ம்... வாங்கிக்க... பிரிச்சுப் படி."

"அய்யோ வேண்டாம்மா. அப்பாவை ஏமாத்தக் கூடாது..."

"எனக்கு உங்க அப்பாவை நல்லாத் தெரியும். அவர் வருத்தப்பட மாட்டார். ஏன்னா, கண்ணுக்கு முன் நிக்கிற தகப்பன் சொல்றதையே கேட்காத பிள்ளைகளுக்கு மத்தியிலே, கண் மூடின அப்பா சொல்லை மதிச்சு, நீ ராத்திரி பகலா எப்படிப் படிச்சேன்னு அவருக்குத் தெரியாதா என்ன?"

முஷ்டி மடக்கி மேஜையில் குத்தியவன் திடுமெனப் பரபரப்பாய் எழுந்து, இன்னொரு மேஜையின் இழுப்பறையில் அவசரம் அவசரமாகத் தேடினான். கையில் கணிதத் தேர்வின் வினாத்தாள் கிடைத்ததும், ஒரு நிமிடம் வெறிக்கப் பார்த்தவன்... மறுகணம்... இன்னும் பரபரப்பாய் மேஜையில் அமர்ந்தான். பரபர என்று எழுத ஆரம்பித்தான்.

"இந்தாம்மா... இதுதான் அன்னைக்கும் நான் எழுதினது. வாங்க, நாம இப்ப திருத்தியே பார்த்திடலாம். சரோ, எதுக்கும் அந்த கால்குலேட்டரை எடுத்துக்க."

ரத்னா, பாரதி, சரோ மூவருமாய் மாய்ந்து மாய்ந்துக் கணிதப் புத்தகத்தை... கையேட்டை... வகுப்புக் குறிப்பேடுகளை துணைக்கு ஒப்பிட்டு, அந்தத் தேர்வுத்தாளை திருத்தத் துவங்கி, இருபத்தைந்தே நிமிடத்தில்

முடித்து விட்டனர். துல்லியமாக நூற்றித் தொண்ணூற்றியெட்டு வந்திருந்தது.

"அப்போ பேப்பர் திருத்தினதுலதான் ஏதோ தப்பு நடந்திருக்கு வாண்ணா, ஸ்கூலுக்குப் போய் பிரின்ஸியைப் பார்ப்போம்."

பதற்றம் பாதி, பிரார்த்தனை பாதி எனத் தான் அடுத்த மூன்று வாரங்களும் கடந்தன.

"இந்தாம்மா, புதிய மதிப்பெண் பட்டியல்."

கையில் வாங்கிக் கொள்கையில் குழந்தைகள் முகத்திலேயே மதிப்பெண்களைத் தேடினாள். வதனங்கள் நிச்சலனமாய் இருக்கவே... கண் துடிக்க, மனம் நடுங்க, பட்டியலில் தேடினாள். கண்டாள் கணித மதிப்பெண்ணை! விரிந்த விழிகள், நியதி மறந்து நிலைகுத்தி நின்றன.

"கண்ணா என்னடா இது? நிஜம்தானா?"

"நூற்றுக்கு நூறு உண்மை. அண்ணனுக்கு கணக்குல சென்டம்மா. ஆமா, இருநூறுக்கு இருநூறு. இப்ப அண்ணனோட டோட்டல் என்ன தெரியுமா? ஆயிரத்தி நூத்தி முப்பது. அதாவது தொண்ணூற்று நாலு சதவிகிதம்... எப்படி எங்க அண்ணன்! ம், எங்கே கொண்டா கொண்டா, எங்க அருமை அப்பாவோட லெட்டரை."

எட்டு வருஷக் காத்திருப்பு! உடம்பெல்லாம் ஏதோ மின்சார அதிர்வு போல. உறையைப் பிரித்து, அந்தப் பழுப்பு பற்றிய காகித மடிப்பை விரல்களுக்கு மாற்றியதும்... இதயம் சப்தித்து, தடதடத்தது.

'ப்ரிய மகன் பாரதிக்கு,

அப்பா கடைசியாக, ஆனால் அன்போடே எழுதிக் கொண்டது. இந்தக் கடிதம் எழுதப்படும் காலத்திற்கும் படிக்கப்படும் காலத்திற்கும் இடையே, ஒரு தலைமுறை மாற்றமே நடந்திருக்கலாம். அதில் பிரதானமானது கடிதம் எழுதும் இந்த அப்பா, நீ இதை வாசிக்கையில் நிரந்தரமாக மறைந்திருப்பது.

அப்பா உங்களை விட்டுப் போகிறேன். இது தப்புதான். முட்டை இட்டு அடைகாத்த பறவை, உயிர்த்த குஞ்சுகள் வல்லூறுகளிடமிருந்து தப்பிக்கும் வரை பாதுகாக்காமல், பாதியிலே விட்டுப் போவது கொடுமையான தவறுதான். ஆனால் எனக்கு வேறு வழியில்லையே... நான் போகும் முன், உனக்கு ஒரு அபூர்வ உபதேசம்! நீ நீயாய் இரு... நீ நீயாய் வாழு.. நீ முதலில் உனக்காக வாழு... முடிவில் உலகுக்காகவும் வாழு!

உன் அப்பா நான் வியாதியிடம் மட்டுமல்ல, வாழ்க்கையிடமும் தோற்றுத்தான் போனேன். நான் என்றுமே நானாக இருந்ததில்லை. எனது இயல்பான அடங்கிப் போகும் குணத்தாலா, இல்லை ஆளுமை வளர்க்காத சோம்பலினாலா.. இல்லை என்றுமே முளைக்காத தன்னம்பிக்கையாலா?

என் அப்பா ஆசைப்படி பொறியாளனாவதா... அம்மா ஆசைப்படி மருத்துவராவதா, தாத்தா ஆசைப்படி வியாபாரத்தில் ஜெயிப்பதா.. கடைசியில் எவருடையதையும் நிறைவேற்ற முடியா களைப்பில், முடிவாய் குடும்பத் தொழிலைப் பிரித்து, என்னைக் கல்லாவில் அமர்த்தியபோது, நான் முழுக்கக் காணாமல் போயிருந்தேன். காணாமல் போனவை என் ரசனைகளும் ஆற்றல்களுமே ஒழிய, என் பலஹீனங்கள் அல்ல என்பதை உணர்ந்த போது, தலைக்கு மேல் கடன்

## பரவசப்படுத்திய பக்கங்கள்!

பத்மவாசனின் எழில்மிகு அட்டை ஓவியத்தோடு வண்ண சுவாமி படங்கள், மகான்கள், கதை, கவிதை, கட்டுரை, சிறார் பக்கங்கள், மகளிர் பக்கங்கள் என அசத்தலாய் வெளிவந்த தீபாவளி மலர், மனத்தை அள்ளிக் கொண்டது.

**- ப. ராமகிருஷ்ணன், காயக்காடு**

என் உள்ளம் நிறைந்த உபன்யாஸ சக்ரவர்த்திகள், இரு பெரும் தமிழ் நாட்டு தவப்புதல்வர்கள், சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர், வேலும் மயிலும் துணை நமக்கு என்ற திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் ஆகியோரின் இள வயதுப் படங்கள் கண்டு மகிழ்ந்தேன்.

**- ஸ்ரீவத்ஸ தா. இல. இராசன், மேட்டூர்**

தீபாவளி மலர் வண்ண அட்டையில் பூர்ணப் பொலிவுடனும் கருணையுடனும் காட்சி தரும் ஸ்ரீராமபிரான் மற்றும் சீதாதேவி திவ்ய தம்பதிகளைத் தரிசித்த என் கண்கள், பிறந்த பயனைப் பெற்றுவிட்டன. 'கல்கி' வாசகர்களைப் பொறுத்தவரையில், தீபாவளித் தினத்தன்று அவர்கள் இல்லங்களுக்கு 'சக்கரவர்த்தித் திருமகனே' விஜயம் செய்துவிட்டதால் 'வாசகர் மனமே'

வெள்ளம். உள்ளுக்குள் பொங்கும் பிரளய சோகம் மறைத்து, உங்களுடன் சிரித்து விளையாடிய அந்த நாட்கள் அழகானவையா, அவலமானவையா... இப்போதும் தெரியவில்லை. ஆனால் விதியின் ஆணி கூர்மையாக இருக்கவே, இதோ நெஞ்சுவலி வரை வந்து விட்டது! விடை பெறுகிறேன். வாழ்த்துக்கள். வருகிறேன்..."

'**கோ**டிகளையும் மிஞ்சின அதி அற்புதமான சொத்தை அப்பா விட்டுப் போயிருக்கிறார். அவருக்கு மட்டுமல்ல, இத்தனை நாளும் அதைப் பாதுகாத்த உனக்கும் அனந்தகோடி நமஸ்காரங்கள்."

கடிதத்தை அப்பா படத்தின் கீழ் வைத்து விட்டு, தங்கையைத் தேடிப் போன பின்னும் ரத்னா அங்கேயே இருந்தாள். கடிதத்தையும் கணவனையும் மாறி மாறிப் பார்த்தாள். மனசுக்குள் மெள்ளக் கை குவித்தாள். மன்னிப்பும் கேட்டாள்.

"என்னை மன்னிச்சிருங்க. நீங்க எழுதாத ஒரு கடிதத்தை வருஷக்கணக்கா காட்டிக் காட்டி, உங்களை, உங்க புள்ளைகளை ஏமாத்திட்டேங்க. எத்தனைதான் நல்லவர்னாலும், எடுப்பார் கைப் பிள்ளையா இருந்து உங்க வாழ்க்கையையும் எங்க வாழ்க்கையையும் நீங்க அழிச்ச மாதிரி, நம்ம புள்ளைகள் அழிக்காம இருக்கணும்னா, அதுக்கு நிமிர்ந்த நெஞ்சோடு உறுதியான ஆளுமை வேணும்னு நினைச்சேன். அதனாலத்தான் உங்க கடிதத்தை உயர்த்தி உயர்த்தியே, அவனை எம்பி எம்பி வளரச் செய்தேன். அது மட்டுமல்ல, தங்கள் தகப்பன் கடன் தொல்லை தாங்க முடியாமல்தான் தற்கொலை செய்துகிட்டார்னு பின்னால என்னைக்காவது தெரிய வந்தாக் கூட, உங்களை வெறுக்காம, உங்களை நேசிக்கணும்னு ஆசைப்பட்டேன்... அதுக்கும் இந்த 'கடைசி லெட்டரை' உங்க முகமூடியா பயன்படுத்திக்கிட்டேன். நான் பண்ணினது தப்பாங்க?"

மனசின் குமுறல் கண்ணீராய் தரையில் பரவுகையில், பின்னால் மகனின் குரல் கேட்டது.

"ஆனாலும் அப்பா கூட தப்புப் பண்ணிட்டாரே."

அதிர்ந்து போய்த் திரும்பினாள்.

"நீ என்னடா சொல்றே?"

"பின்னே என்னம்மா, நான் தொண்ணூறு சதவிகிதம் எடுக்கலேன்னா இந்த அற்புத உபதேசம் எனக்குக் கிடைக்காமலே போயிருக்குமே..."

சிரிப்பைக் கலந்து சொன்னான் அந்தக் கடைசி பொய்யை!

'நீ உங்கப்பாவை சரியாப் புரிஞ்சுக்கலை கண்ணா. 'பாரதி இத்தனை மார்க் எடுத்தாத்தான் கடிதம் கொடுக்கணும்'னு உங்கிட்டச் சொல்லச் சொல்லி சொன்னாரே தவிர, என்கிட்ட என்ன சொன்னார் தெரியுமா? 'அவன் பண்ற முயற்சிகள்தான் முக்கியம். மற்றபடி அவன் எத்தனை மார்க் எடுத்தாலும், ஏன், தோல்வியே அடைஞ்சாக் கூடக் கவலைப்படாம அவனுக்கு இந்தக் கடிதத்தைக் கொடுத்துடு'ன்னுதான் சொன்னார்ப்பா."

'நிஜமாவா? அப்ப எங்க அப்பா 'தி கிரேட்டஸ்ட்' மட்டுமல்ல பெரிய தீர்க்க தரிசிம்மா!"

பெருமையோடு நெகிழ்ந்தாள் ரத்னா. ●




அற்புதமான 'அயோத்தி' கோவிலாகி விட்டது. அட்டைப் படக் கட்டுரையின் விளக்கம் அருமை.

**-கோபாலன், சென்னை**

கல்கி ஆசிரியருக்கு, வணக்கம். தீபாவளி மலரின் அட்டைப் படம் பார்த்தவுடன் கண்களில் நிறைந்து மனத்தைப் பரவசப்படுத்தி விட்டது. அன்னை சாரதா தேவியின் வாழ்க்கைச் சித்திரம் நன்றாக இருந்தது. அண்மையில் ஸ்ரீ நாராயணீயம் சப்தாகம் கேட்டோம். எனவே அனந்தராம தீக்ஷிதரைப் பற்றி அறிந்து கொள்ள ஆவல் ஏற்பட்டது. பல விவரங்கள் அறிந்தோம். வழக்கம் போல் வண்ண ஓவியங்கள் உள்ளம் கவர்கின்றன. பரிமளரங்கன் அழகுடன் மனத்தைக் கொள்ளை கொள்கிறார். கரடிப் பாசம், அடையாளம் இரு கதைகளும் மனோத் தத்துவ முறையில் சிறப்பாக உள்ளன.

**- இந்திராபத்மநாபன், திருச்சி**

தலையொட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தைகளை அமெரிக்காவில் முப்பத்தி நான்கு மணி நேரம் ஆபரேஷன் செய்து பிரித்திருக்கிறார்கள். இது உலக மகா சாதனை என்று கருதப்படுகிறது. ஆபத்தான நிலையைக் கடந்து, கவலைக்கிடமான நிலைக்குக் குழந்தைகள் முன்னேறியுள்ளன. பூரண உடல், மன ஆரோக்கியத்துடன் விளங்கி, வளர வாழ்த்துவோம்.

***

இது போன்ற மிகக் கஷ்டமான, சிக்கலான ஆபரேஷன்களைக் கூட வெற்றிகரமாகச் செய்து முடிக்க உதவுகின்றன, விஞ்ஞான முன்னேற்றத்தின் விளைவாக மானுடத்துக்குக் கிடைத்துள்ள கருவிகள். ஆனால் இந்த அதி நவீனக் கருவிகளை இங்கு இறக்குமதி செய்ய அதிகம் செலவாகிறது. வட்டிக்கு வங்கிக் கடன் வாங்கி, இறக்குமதி செய்து 'லேப்' நடத்துகிறவர்கள், இதை மக்கள் சேவை என்று எண்ணாமல், ஒரு வியாபாரமாக நடத்த வேண்டிய நிர்பந்தத்துக்கு உள்ளாகிறார்கள். அதற்கு டாக்டர்களின் ஒத்துழைப்பையும், கமிஷன் பேசி பெற்று விடுகிறார்கள். 'ஆ' என்றால் ஸி.டி.ஸ்கேன், 'ஊ' என்றால் அல்ட்ரா சவுண்ட் ஸ்கேன் என்று எழுதிக் கொடுத்து விடுகிறார்கள். தர்மா மீட்டரை வாயில் வைத்து, நாடி பிடித்து, வாயைத் திறந்து 'ஆ' சொல்லச் சொல்லி, படுக்க வைத்து வயிற்றை அமுக்கிப் பார்த்த காலம் போயே போய்விட்டது!

***

டாக்டர் சீனிவாசன் என்று சென்னை கதீட்ரல் சாலையில் ஒருவர் இருந்தார். உடம்பு சரியில்லை என்று அவரிடம் போனால் தட்டி, கொட்டி, பார்த்துவிட்டு, "மூணு நாளைக்கு மோர் சாதம் மட்டுமே சாப்பிடு. அப்புறம் வந்து பார். தேவைப் பட்டால் மருந்து தரேன்" என்பார். மூன்று நாள் மோர் சாதப் பத்தியத்திலேயே அநேகமாக உடம்பு தானே சரியாகி விடும். சீரியஸ் கேஸ் ஆனால் ஒழிய, மருந்து எழுதித் தர மாட்டார்.

***

இதே டாக்டர் சீனிவாசன் தமது உயிலில், "மனிதன் நன்றி கெட்டவன்;



# 'ஆ' என்றால் ஸி.டி. ஸ்கேன்

அதனால் என் சொத்து முழுவதையும் கால்நடை ஆஸ்பத்திரிக்கு எழுதி வைக்கிறேன்" என்று எழுதினார்!

***

டாக்டர் குருசாமி முதலியார் அந்நாளில் ரொம்பப் பிரசித்தம். அவர் காலமான பிறகு அவர் வாழ்ந்த சாலைக்கு அவரது பெயரே சூட்டப்பட்டது. ஒரு சமயம் பத்திரிகையாளன் என்ற முறையில் அவரை நான் பார்க்கப் போயிருந்தபோது, வீட்டு வாசலில் நோயாளிகளின் கியூ.

# 'ஊ' என்றால் அல்ட்ரா சவுண்ட்!

## செம்பியன்

அனைவருக்கும் முன்னால் நின்றவனின் நாடியைப் பரிசோதித்து, கண்ணின் கீழ் இமை இறக்கிப் பார்த்துவிட்டு, வாயைத் திறக்கச் சொன்னார். "பாக்கு போடும் பழக்கம் உண்டா?" என்று கேட்டார். "எனக்குப் பிழைப்பே பாக்கு



• ஸி.டி.ஸ்கேன்



தலையொட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தைகள் - ஆபரேஷனுக்குப் பிறகு

வியாபாரம்தானுங்களே" என்றான். "ஒரு மாசம் பாக்கு மெல்லுவதை அடியோடு நிறுத்திவிடு. அப்புறம் வந்து பார். தேவையானால் மருந்து தருகிறேன்" என்றார். நோயாளிக்கு ஏமாற்றமா, திருப்தியா, என்று என்னால் அனுமானிக்க முடியவில்லை. "என்ன தரணுங்க?" என்று இழுத்தான். மேஜை மீது இருந்த முருகன் படம் ஒட்டப் பெற்ற உண்டியலைக் காட்டி, "குறைந்த பட்சம் நாலணா" (இருபத்தைந்து பைசா) என்றார் டாக்டர். அவன் ஒரு ரூபாய் போட்டு விட்டுப் போனான். இந்த டாக்டர் குருசாமி முதலியாருக்கு, டாக்டர் ரங்காச்சாரிக்கு இருப்பது போலவே சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் சிலை உண்டு.

***

நவீன உபகரணங்களுடன் கூடிய மருத்துவத்தினிடம் நமக்கு விரோதம் இல்லை. ஆனால் தேவையேயின்றி CT Scan, HRI Scan, Ultra Sound Scan, Endoscopy என்று எழுதித் தருவது எப்படி நியாயமாகும்? இதைப் பற்றி பலரும் யோசித்திருப்பீர்கள். சமீபத்தில் 'ஹிந்து' பத்திரிகையில் ராஜேஷ் வேங்கடராமன் எழுதிய கட்டுரையைப் படிக்க நேர்ந்தது. அதன்படி மருத்துவர்களுக்கு என்று தார்மிகக் கோட்பாடு உண்டு: "குணப்படுத்துவது சில சமயங்களில்; இடர் நீக்குவது அடிக்கடி; ஆனால் ஆறுதலாகப் பேசுவது எப்போதும்." ஒரு மனிதனுக்கு குணப்படுத்த வேண்டிய வியாதி அபூர்வமாகவே தோன்றும். ஆனால் சின்னச் சின்ன உபாதைகள் அடிக்கடி வரும். முன்னதைக் குணப்படுத்த வேண்டும்;

பின்னதற்கு இடர் நீக்கினால் போதும். எப்படியானாலும் அன்பும் பரிவும் காட்டி, அவன் உடலுடன் மனமும் சௌக்கியமாக இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். இதைப் பல டாக்டர்கள், பல நேரங்களில் மறந்து விடுவது எதனால்? அதற்கும் அந்தக் கட்டுரையில் விடை இருக்கிறது: மருத்துவர்களுக்கு உரிய தார்மிகக் கோட்பாடுகள், மருத்துவக் கல்லூரிகளில் மாணவர்களுக்கு ஒரு பாடமாகக் கற்றுத்தரப்படுவதில்லை! அதற்குப் பரீட்சையும் கிடையாது! ஏதோ ஏட்டளவில் உள்ளது; அதை யாரும் படிப்பதும் இல்லை! இந்நிலை மாறுமா, எதிர்காலத்திலேனும்?

***

நியாயமான காரணங்களுக்காக உடற்கூறு பரிசோதனைகள் எழுதித் தரப்பட்டாலும், அதற்காகிற செலவு பலருக்கு மலைக்க வைப்பதாக உள்ளது. மருத்துவத்துறையில் முன்னேற்றம் ஏற்பட ஏற்பட, நோயாளிக்குச் செலவும் அதிகரித்துக் கொண்டே போகிறது. மக்களுக்கு மருத்துவ வசதிகள் இருப்பது தெரிய வருகிறது; ஆனால் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள பண வசதி இல்லை. இருதயத்தில் பை-பாஸ் சர்ஜரி என்றால், லட்சம் ரூபாய்க்கு மேல் செலவு. பணமில்லாததால் ஏக்கம், விரக்தி. தமிழகச் செல்வந்தர்கள் இதற்கு ஒரு வழி பண்ண வேண்டும். பெரிய அளவில் மருத்துவச் செலவுகளைச் சமாளிக்க, வசதியற்றவர்களுக்கு உதவும் விதத்தில் ஒரு அறக்கட்டளை நிறுவுதல் அவசியம்.



***

"Surgery is not only a science, it is also an art" என்பார் டாக்டர் சத்யநாராயணா. (எம்.ஜி.ஆருக்கு அவர் சுடப்பட்ட பிறகு தொண்டை ஆபரேஷன் செய்து குணப்படுத்தியவர்.) ஆபரேஷன் செய்வது வேறு; அதைக் கலை நயத்துடன் நேர்த்தியாகச் செய்து முடிப்பது வேறு. Endoscopy போன்ற பரிசோதனைகளைக் கூட நயம்படச் செய்யாது போனால், வேறு புதிய பிரச்னைகள் தோன்றும். Laproscopy மூலம் உடலைக் கிழிக்காமல், சிறிய ஓட்டை போட்டு ஆபரேஷன் செய்து விடலாம் என்பது உண்மை. ஆனால் இதற்கு முன்னிலும் அதிகமான ஆற்றலும் அறிவும், அனுபவமும் தேவை என்பதும் நிஜம்.

***

சூப்பர் மார்க்கெட்டுக்குப் போய் மளிகை சாமான்கள் வாங்குவது போல, எதிர்காலத்தில் செயற்கை மனித உறுப்புகளை வாங்கலாம் என்பது விஞ்ஞான உலகின் கணிப்பு! இறந்து விட்டவர்களின் உறுப்புகளைப் பயன்படுத்துவது தவிர, மிருகங்களின் உறுப்புகளைப் பயன்படுத்துவதிலும் ஆராய்ச்சிகள் தீவிரமாக நடந்து வருகின்றன.

***

இத்தனை முன்னேற்றம் இருந்தாலும் டாக்டர்கள் பற்றிய ஜோக்குகளுக்கு பஞ்சமேயில்லை. அமரர் கல்கிக்கு ரொம்பப் பிடித்தமான ஜோக்:

"ஒரு நாள் மழையில் நனைந்ததில் ஜலதோஷம் பிடித்துக் கொண்டது. மப்ளரை சுற்றிக் கொண்டு டாக்டரிடம் போனேன்; ஏனென்றால் டாக்டர் பிழைக்க வேண்டுமே! அவர் மருந்துச் சீட்டு எழுதித்தந்தார்; ஏனென்றால் மருந்துத் தயாரிப்பாளர்கள் பிழைக்க வேண்டுமே! சீட்டை எடுத்துக் கொண்டு போய் மருந்து வாங்கினேன்; ஏனென்றால் மருந்துக் கடைக்காரர் பிழைக்க வேண்டுமே! வீடு திரும்பி மருந்தை சாக்கடையில் கொட்டினேன்; ஏனென்றால் நான் பிழைக்க வேண்டுமே!"

***

சும்மாவா சொன்னார்கள், "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்று!

# வட்டமேஜை

✉ மாட்டிற்குக்கூட நீதி கிடைத்த தமிழகத்தில் மனிதர்களின் நிலை கேவலமாக இருப்பது வெட்கக்கேடு. நமது ஜனநாயகத்துக்கு விடப்பட்ட சவாலாக 'கல்கி' கூறுவது மிகையாகத் தெரிந்தாலும், எளிதில் ஒதுக்கித் தள்ள முடியாத வாதம். (தலையங்கம்) முதல்வரும், மணி சங்கர் ஐயரும் இதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

சென்னை-61, நாகராஜன்

✉ 26.10.03 கல்கி இதழில் திருப்பதி மலையில் ஹெலிகாப்டர் தளம் அமைப்பதற்கு ஆகம விதிகள் தடையாக உள்ளன என்பதைப் பார்த்தேன். கண்ணப்ப நாயனார், சிவனின் கண்களில் அடையாளத்திற்காகத் தன் கால் கட்டை விரல் கொண்டு மிதித்ததை ஆகம விதிகள் ஏற்றுக் கொண்டது எப்படி என வியக்கிறேன்! ஆகமவிதிகள் "ஆக்கபூர்வமான" அறிவியலை ஏற்றுக் கொள்ளாதா?

சென்னை- 91, எம்.எஸ். இப்ராகிம்

✉ ஆனந்தி எழுதும் 'தெய்வத் தமிழ் நாட்டினிலே' எனும் ஆன்மிகத் தொடர் வாயிலாகத் தமிழ்நாட்டின் பல புண்ணியத் தலங்களின் பெருமைகளைப் புரிந்து கொள்ள முடியும் என்பதோடு, மனத்திற்கும் ஒரு நிறைவு ஏற்படப் போவது உறுதி!

சென்னை- 91, கே.என். பாலகிருஷ்ணன்

✉ குட்டி ராதிகா அறிமுகம் பற்றி ஷாம் சொன்ன விதம், ஆயிரம் நாள் ஓடப்போகும் வெற்றித் திரைப் படத்தை முதல் ஷோ பார்த்த மாதிரி சுக சுவாரஸ்ய மாயிருந்தது.

திருவண்ணாமலை, எல்.எம். அபிதா

✉ மூத்த வாக்காளர்கள் பழைமையையும் புதுமையையும் ஒப்பிட்டுப் பார்த்து ஒலமிட்டு, வாக்களிக்காமல் ஒதுங்கி விடுகிறார்கள். இளைய / புதிய வாக்காளர்கள் இன்றைய அரசியலை அப்படியே ஏற்றுக் கொண்டு, மூத்தவர்களுடைய வாக்குகளையும் இவர்களே சேர்த்துப் போட்டு விடுகிறார்கள்! தலையங்கத்தில் குறிப்பிட்டது போல் ஜனநாயகத்துக்கு ஏற்பட்டுள்ள இந்த ஆபத்தைப் போக்க என்ன வழி? ப. சிதம்பரத்தின் விழிப்புணர்வுக் கட்டுரையாவது வழிவகுக்கட்டும்.

திருவரங்கம், அ.சம்பத்

✉ 'தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சாதிக்க முற்படும் புத்திசாலியைவிட, தன் தவறைத் திருத்திக் கொள்ளத் தயங்காத சராசரி மனிதன் எவ்வளவோ மேல் (நேற்று இன்று நாளை). இந்த வரிகளைப் படிக்கையில், சில அண்மைக் கால நிகழ்வுகள் நினைவுக்கு வருகின்றன. மக்கள் 'அப்பாடா' என்று பெருமூச்சு விடும் காலம் வராமலா போய்விடும்?

கோவை, தே.லட்சுமி நரசிம்மன்




## ஆகம விதிகள் அறிவியலை ஏற்காதா?

✉ மானுடத்தின் நுண்ணுணர்வுகள் மலினப்படுத்தப்பட்டும், சிதைந்தும் போய்க் கொண்டிருக்கும் இந்நாளில், சீதா ரவியின் 'நாணமோ...?' என்ற சிறுகதை, நாணம் பெண்மையின் ஒரு பரிமாணம் என்பதை மிக நாசூக்காக உணர்த்துகிறது.

சென்னை-20, ஜி. ஸ்வாமிநாதன்


ஜில்லு மல்லு
—கதிர்
என்னைப் பத்தி உனக்குத் தெரியாது. பல கொலைகள சத்தமே இல்லாம செஞ்சவன்
ராத்திரியில அடிச்ச ஈ, கொசுவெல்லாம் தானே சொல்ற...?
ஹும்... குலைக்கிற நாய் என்னைக்குமே கடிக்காது...
அப்ப நீ கடிக்கிற நாயா? எங்க கடி பாப்போம்
ஆ... கடிச்சுட்டானே!
டேய்... உடுறா...
மகனே, ஒழுங்கு மரியாதையா திரும்பிப் படு... இல்ல...
அடப்பாவி... கனவுல என் கூட சண்டை போடுறானே!

